KALKI 18-4-82 ரூ. 1.20

# கல்கி



# அன்பளிப்பு!

## வெள்ளிக் குத்து விளக்கு

ஒவ்வொரு ரூ. 5000/- டெபாசிட்டுக்கும்

தங்கள் முதலீட்டிற்கு
இதோ ஒரு பொன்னான வாய்ப்பு...
"சுபிட்சத்திற்கு வழிகாட்டி சுமங்கலி"

பெறுவீர் ரூ.10,000/-
48 மாதங்களில்
"சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்"
தங்கள் முதலீடு ரூ.5000/-

**கவர்ச்சிகரமான மாதாந்திர வட்டி வழங்கும்**
**விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன**

| ஒரு வருடம் | இரண்டு வருடங்கள் | மூன்று வருடங்கள் |
|---|---|---|
| 16% | 17% | 18% |

குறைந்த டெபாசிட் ரூ.1000/ ஏற்றுக் கொள்ளப்படும்



## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

39, நடேச ஐயர் தெரு (2வது மாடி)
(சிவா விஷ்ணு கோயில் அருகில்) உஸ்மான் ரோடு, தி.நகர்,
சென்னை-600 017. போன்: 447186

எண்: 2 & 3, முதல் மாடி, சி.எ. சுதுல் ரோடு, தஞ்சாவூர் போன்: 1626
14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன்: 483
24/1-A, மார்கோசா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம்,
பெங்களூர்-560 003 போன்: 24795
9-A, தில்லைபாரி தெரு, பட்டுக்கோட்டை, போன்: 453



C.A. BALOO
Managing Partner

# நியூஸ்... நியூஸ்... நியூஸ்...



✕ நடைபாதைக் கடைகளில்...



✕ கிறிஸ்துவ தேவாலயம்



✕ தாராப்பூர் டவர்ஸ்

**நியூஸ் 1**

அண்ணா சாலை புகாரி எதிரே இதுபோன்ற கவர்ச்சிகரமான பேனர்களை இனிக் காண முடியாது. காரணம், மாபெரும் நிலையில் உயர்ந்து வரும் 'தாராப்பூர் டவர்ஸ்' கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டவுடன், சினிமா பேனர்கள் முற்றிலும் அகற்றப்பட்டு விடுமாம்.

**நியூஸ் 2**

எழும்பூர் தினத்தந்தி அலுவலகம் அருகே அமைந்துள்ள இந்தக் கிறிஸ்துவ தேவாலயத்தில் ஒவ்வொரு புதன் கிழமையும் மாலை ஆறு மணிக்கு இலவசமாகச் சட்ட உதவி அளிக்கப்படுகிறது. பெரும் செலவை எண்ணி நீதி மன்றம் செல்லத் தயங்குபவர்களுக்காக இச் செய்தி!

**நியூஸ் 3**

வேலை வாய்ப்புக்கள் பற்றி எந்த ஒரு விளம்பரம் வெளிவந்தாலும் சரி... உடனே ஆயிரக் கணக்கில் அப்ளிகேஷன்ஸ் அச்சடிக்கப்பட்டு, நடைபாதையில் விற்பனைக்கு வருவது நாம் அன்றாடம் காணும் காட்சிதான். ஆனால் ஒரு அப்ளிகேஷன் அச்சடிக்கப் பத்துப் பைசாவுக்கு மேல் செலவாகாதபோது ஒரு அப்ளிகேஷன் விலை ஒன்று முதல் இரண்டு ரூபாய்வரை விற்கப்படுவது ஏன்? நடைபாதை வியாபாரிகளே... வேலையில்லாதோர் மீது கருணை காட்டக் கூடாதா?

**நியூஸ் 4**

''இன்ப சுக நோய்களும், கான்சரும்'' என்ற திரைப்படத்துக்கு விளம்பரமாக VD VD என சுவர் முழுவதும் அசிங்கமாக ஒட்டியிருக்கிறார்கள்... ஆமாம் VD என்பதை STD [Sexually Transmitted Diseases] என மாற்றிப் பல்லாண்டு காலமாகி விட்டதே...

**நியூஸ் 5**

அகில இந்திய வானொலியிலும் தொலைக் காட்சி நிலையத்திலும் புதிய இருபது அம்சத் திட்டத்துக்கான விளம்பரங்கள் மறைமுகமாகச் செய்யப்பட்டு வருகின்றன.

தகவல்: **அமர்நாத்** புகைப்படம்: **ஜெகு**

**வளமான பூமி?**

விண்வெளியிலுள்ள வேறுசில கிரகங்களுடன் தொடர்பு கொள்ளவேண்டாம் என்று நோபல் பரிசு பெற்ற பௌதிக விஞ்ஞானி சர். மார்ட்டின் ரைல் என்பவர், சர்வதேச வானியல் கழகத்திற்கு எழுதியுள்ளார். வேறு கிரகங்களில் மனிதர்கள் வாழக் கூடும் என்றும் அவர்களுடன் தொடர்பு கொண்டால் நமது வளமான பூமியின் மீது ஆசைப்பட்டு அவர்கள் ஆக்கிரமிப்பில் இறங்கக் கூடும் என்றும் அவர் அஞ்சுகிறார்.

-தேனி முருகேசன்

# 'எடுத்ததை முடிப்பேன்!'

## கல்கிக்கு என்.டி.ராமாராவ் பேட்டி

"எத்தனை கட்சிகள் வந்தால் என்ன? மக்களுக்கு ஒன்றும் செய்யப்போவதில்லை. எல்லோரும் சுயநல ஆசாமிகள்தான். இந்தத் "தெலுங்கு தேசம்" தேறுமா என்பது சந்தேகமே" என்று உருதுவில் கூறிக்கொண்டு வந்தார் ஆட்டோ டிரைவர். வண்டி, ராமகிருஷ்ணா ஸ்டுடியோவுக்குச் சென்றுகொண்டிருந்தது. அங்கேதான் பொதுமக்கள், கட்சிப் பிரமுகர்கள், பத்திரிகையாளர்களைச் சந்திக்கிறார் 'தெலுங்கு தேசம்' கட்சியின் தலைவர், என். டி. ராமாராவ்.

கலியுக கிருஷ்ணராக ஆந்திர மக்களால் வணங்கப்படுகிறவரும், எதிர்கால ஆந்திர முதல்வராக வர்ணிக்கப்படுகிறவருமான நந்தமூரி தரகா ராமாராவ், 'தெலுங்கு தேசம்' தலைமைக் காரியாலயம் என்று எழுதப்பட்டுள்ள புதிய பலகைக்கு முன்னால், மிகவும் கவனமாக, பலமாக அடிக்கும் காற்றில்கூட ஒரே குச்சியால் கற்பூரத்தைப் பற்றவைக்கிறார். பிறகு தேங்காய் உடைக்க கூடியிருக்கும் சுமார் இருநூறு பேர் கைதட்டுகிறார்கள்.

கூட்டத்தை இடைவெட்டிக் கொண்டு அவரைச் சந்தித்தேன்.

"இப்போது சாப்பிடப் போகிறேனே. நான்கு மணிக்குப் பார்க்கலாம்" என்றவாறு உள்ளே சென்றுவிட்டார் என். டி. ஆர். எனக்கும் என்கூட இருந்த எக்ஸ்பிரஸ் பத்திரிகையின் துணையாசிரியர் ஷர்மாவுக்கும் பொசுக்கென்று ஆகிவிட்டது.

ராமகிருஷ்ணா ஸ்டுடியோவின் ஒரு பகுதியில் கடைகள், தோட்டத்துக்காகப் புதிதாகக் கட்டப்பட்டுள்ள கட்டிடத்தில்தான் இன்று தெலுங்கு தேசத்தின் கட்சிக் காரியாலயம் இருக்கிறது.

நான்கு மணிக்குத் திரும்பி வரலாம் என்று கிளம்பியபோது, அவசர அவசரமாக ஒருவர் வந்தார். அரை குறை ஆங்கிலத்தில் "தலைவர் உங்களைக் கூப்பிடுகிறார்" என்றார்.

முதல் மாடியில் உள்ள அவரது தனி அறைக்குச் சென்றோம். அறிமுகங்கள் முடிந்தவுடன், 'என்ன கேள்வி?' என்றவாறு பார்த்தார். சரளமான ஆங்கிலத்தில் பேட்டி தொடங்கியது.



கேள்வி: இந்தக் கட்சி ஆரம்பிக்க வேண்டு மென்று எப்போது தோன்றியது?

பதில்: என்னுடைய அறுபதாவது வயது ஆரம்பமான அன்று ஊட்டியில் 'சர்தார் பாப்பா நாயுடு' என்ற படத்தில் நடித்துக் கொண்டிருந்தேன். என்னைச் சந்தித்த சில சினிமாப் பத்திரிகையாளர்கள் அறு பது நிறைந்ததும் என்ன செய்ய உத் தேசம்? என்றனர். 'சமூக சேவை செய்ய லாம் என்றிருக்கிறேன்' என்று அவர்க ளிடம் சொன்னேன். இது பத்திரிகைகளில் வெளியானவுடன் ஏராளமான வாழ்த்துத் தந்திகள் வந்தன. சமூக சேவை தனி யாகச் செய்வது எப்படி? அதற்கு ஒரு அமைப்பு வேண்டாமா? எனக்கு வேண்டிய நண்பர்கள் அரசியல் கட்சியாக அதை ஆரம்பித்தால் நன்றாக இருக்கும் என்று கூறினர். நானும் மிகவும் தீவிரமாக யோசித்த பிறகு கட்சியை ஆரம்பிப்பது என்று முடிவு செய்தேன். இந்தத் தெலுங்கு தேசத்தின் மூலமாகச் சமுதாயத்துக்கு ஏராளமான சேவை செய்ய முடியும் என் பதில் எனக்கு அழுத்தமான நம்பிக்கை இருக்கிறது.

கே: இருக்கும் மற்ற கட்சிகளில் சேர்ந்து கொள்ளக் கூடாதா? புதிதாகத்தான் தொடங்க வேண்டுமா?





ப: இங்கு இருப்பதெல்லாம் கட்சியா? ஒரு தாசில்தாரை மாற்றம் செய்வதற்குக் கூட டெல்லியில் போய் அனுமதி வாங்கிக் கொண்டிருக்கும் இ.காங்கிரஸுடன் சேரச் சொல்கிறீர்களா? வேறு எந்தக் கட்சி யிலும் சென்று அவர்களுக்குத் தொந்தரவு கொடுக்க நான் விரும்பவில்லை. ஆந்திர மக்கள் தொடர்ச்சியாக காங்கிரஸின் மேல் நம்பிக்கை வைத்து ஏமாந்துபோய்க் கொண்டிருக்கிறார்கள். அரசியல் ஆதா யங்களுக்காக ஆந்திராவை, தெலுங்கானா ராயலசீமா, ஆந்திரா என்று கூறு போட் டுக்கொண்டிருக்கிறார்கள். நாட்டில் எங்கே பார்த்தாலும் வறுமை, லஞ்சம், ஊழல் தாண்டவமாடுகிறது. குண்டர்கள் நாட்டை ஆண்டு கொண்டிருக்கிறார்கள். பெண்கள் இரவில் தனியாக நடக்க முடிய வில்லை. ஒரு பக்கம் குடிசைகள் பெருகிக் கொண்டு போகின்றன. இன்னொரு பக் கம் உயரமான அடுக்கு மாடிகள் வந்து கொண்டிருக்கின்றன. ''சோஷலிஸம், சோஷலிஸம்'' என்று கூறி ஏமாற்றி நாட்டைக் குட்டிச்சுவராக்கிக் கொண் டிருக்கும் இந்த ஆளும் கட்சியின் போக் கைக் கண்டிக்க, தடுத்து நிறுத்த, சொந்த மாகவே கட்சி ஆரம்பித்தால் தான் நல் லது என்ற முடிவில்தான் இதை ஆரம் பித்தேன்.

கே: 'தெலுங்கு' என்ற பெயரை வைத்துக் கொண்டு ஆதரவைக் கூட்டிக் கொள்ளப் பார்க்கிறீர்களா?

ப: எனக்கு ஏற்கனவே 900 ரசிகர் மன்றங்கள் இருக்கின்றன. அதில் கிட்டத்தட்ட மூன்று லட்சம் பேர் உறுப்பினராக இருக்கிறார்கள். தமிழ்நாடு என்று பெயர் மாற்றம் செய்ய வில்லையா? அதே மாதிரி தெலுங்கு அதிக மாகப் பேசும் மக்கள் உள்ள இந்தப் பகுதிக்குத் தெலுங்கு தேசம் என்று ஏன் பெயர் வைக்கக் கூடாது? நான் இப்படிச் சொன்னவுடன்—மைனாரிட்டியாக உள்ள உருது பேசும் மக்களை எதிர்க்கிறேன் என்று கருதக் கூடாது. அவர்களும் எங்களை ஆதரிக்க வேண்டும். மக்களிடையே மொழிதான் ஒற்றுமையை வளர்க்கிறது. இந்த உணர்ச்சியை ஊட்டவே 'தெலுங்கு' என்ற பெயரை வைத்துக் கொண்டுள் ளேன்.

கே: லஞ்சம், ஊழலை ஒழிப்பேன் என் கிறீர்கள். ஆனால் இப்போது உங்களுடன் சேர்ந்துள்ள பாஸ்கர் ராவ் ஊழல் குற்றச் சாட்டுக்கு உள்ளானவர்தானே?

ப: இருக்கலாம். ஆனால் அவர் இப்போது என்னுடன் சேர்ந்து விட்டார். அதனா லேயே அவர் புனிதமாகி விட்டார் என்று கூற நான் தயாராக இல்லை. இவர்களைப் பற்றி முதலில் எனக்குச் சரியாகத் தெரி யாது. சேர்ந்த பிறகு, இதை ஆராய்வது சரியல்ல என்று நினைக்கிறேன். இனிமேல் அவர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதில்தான் என்பொறுப்பு இருக்கிறது.

கே: ஆந்திர மக்கள் சினிமா மாயையை நம்பி உங்களை ஆதரிப்பார்களா? இந்தச்

சினிமா மாயை எவ்வளவு நாள் உங்களைக் காப்பாற்றும்?

பதில்: இந்தக் கேள்வியை நான் ஆட்சேபிக்கிறேன். என்னுடைய ரசிகர்கள் வேண்டுமானால் சினிமா மாயையினால் பாதிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் எந்தக் கட்சியிலும் சேராத ஏராளமான பொது மக்கள் தங்கள் ஆதரவை தந்திகள், கடிதங்கள் மூலமாகத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள். என் ரசிகர்களைக் கூட அரசியல் தெளிவில்லாதவர்கள் என்று கூற முடியாது. இன்றைய அரசியல் கட்சிகளின் மேல் வெறுப்புக் கொண்டுள்ள ஏராளமான மக்களின் ஆதரவு எனக்குக் கிடைக்கும். என் திட்டங்கள், கொள்கைகள் மூலமாக ஆதரவை நிலைநிறுத்திக் கொள்ளவும் முடியும்.

கேள்வி: உங்கள் கட்சி சரியாக உருவாவதற்கு முன் தேர்தல் நடந்தால், உங்கள் கட்சியின் நிலை என்ன? ஆட்சியை உங்கள் கட்சி பிடித்தால் நீங்கள் வைத்திருக்கும் திட்டங்கள் என்ன?

பதில்: தேர்தல் எப்போது வந்தாலும் சந்திக்கத் தயார். 294 தொகுதிகளிலும் போட்டியிடுவோம். முதலில் அத்தியாவசியப் பொருட்களைக் கறுப்பு மார்க்கெட்டில் விற்பது, பதுக்கல் போன்றவைகளை அடக்குவேன். கிராமம் முதல் நகரம் வரை எங்கள் கட்சியின் இளைஞர்களைக் கொண்ட அமைப்பு ஒன்றை அமைப்பேன். அவை அரசாங்கத்தைக் கண்காணித்துக் கொண்டு வரும். ஊழல் எங்கிருக்கிறதோ அதை என் பார்வைக்குக் கொண்டு வரும். கள்ள மார்க்கெட் பேர்வழிகளை அடையாளம்காட்டும். முதலமைச்சருக்கு பல துறைகளைச் சார்ந்த நிபுணர்கள் ஆலோசகர்களாக இருப்பார்கள். குண்டர்களின் அட்டகாசத்தை ஒடுக்குவேன். இவர்களைச் சுட்டுக் கொல்வதற்குக் கூடத் தயங்க மாட்டேன்.

(ஜனநாயகத்தில்... என்று நான் இடையில் புகுவதற்கு முன் தடுத்து நிறுத்தி விட்டுத் தொடர்கிறார்) எங்கள் கட்சியின் சார்பில் தேர்ந்தெடுக்கப்படும் நபர்கள் முதலில் உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டும். ஊழல் குற்றச்சாட்டுக்கள் அவர்கள் மீது சாட்டப்பட்டால், மக்களைத் தொகுதியில் ஒரு இடத்தில் கூட்டி, அவர்களையும் நிறுத்தி வைத்து மக்களின் முடிவைக் கேட்பேன். பெண்களுக்காக ''மகிளா விபாகம்'' என்ற அமைப்பை ஏற்படுத்துவேன். பெண்கள் பல்கலைக் கழகம் ஒன்று வரும். பள்ளிப் பிள்ளைகளுக்கு மதிய உணவுக்கு ஏற்பாடு செய்வேன். கல்வி, விவசாயம், தொழில் துறை ஆகியவற்றில் முன்னேற்றம் ஏற்பட ஒரு முறைப்படுத்தும் கமிட்டி அமைப்பேன். இன்னும் பல திட்டங்கள் உள்ளன.

கேள்வி: நீங்கள் சொன்ன சில விஷயங்கள் ஜனநாயக நாட்டில் நடக்க முடியாது என்கிறேன்.

பதில்: ஏன் முடியாது... நடத்திக் காட்டுகிறேன் பாருங்கள். (மேஜையைத் தட்டுகிறார்.)

கேள்வி: மாநில சுயாட்சி பற்றி உங்கள் கருத்து என்ன?

பதில்: இந்த மாநிலத்து மக்களுக்கு நல்லது செய்ய எந்த அளவுக்கு சுய ஆட்சி தேவையோ அதற்கு எங்கள் கட்சி போராடும். தேசிய ஒருமைப்பாடும் தேவைதான்.

கேள்வி: இந்திரா காந்தி பல்வேறு வழிகளில் உங்கள் கட்சியை அடக்கப் பார்த்தால் உங்கள் நிலை?

பதில்: ஏ. ஸி. ரூமிலிருந்து இறங்கி சேவை செய்ய வந்து விட்டேன். இனிமேல் எந்த எதிர்ப்பையும் சமாளிப்பேன் என்ற நம்பிக்கை இருக்கிறது.

கேள்வி: தென் மாநிலங்களில் இந்திரா காங்கிரஸ் கட்சியை உடைக்க ஆந்திராவில் உங்களையும், கேரளத்தில் பிரேம் நஸீரையும் எம். ஜி. ஆர். தூண்டிவிட்டிருக்கிறார் என்று பேசப்படுகிறதே?

பதில்: இடையவே இடையாது. எனக்கும் எம். ஜி. ஆர். அவர்களுக்கும் சகோதர உறவுதான் இருக்கிறது. என்னை அவர் தம்பி என்றுதான் அழைப்பார். தனியாகக் கட்சி ஆரம்பித்து இன்று பதவியில் இருக்கும் அவர் எனக்கு ஒரு வழிகாட்டி என்று சொல்வதில் பெருமைப்படுகிறேன். மற்றபடி இந்தக் கட்சிக்கும் அவருக்கும் துளிக் கூடச் சம்பந்தம் இடையாது.

பேட்டி: ப்ரியன்

படங்கள்: எம். ஏ. ரஹீம் (ஐதராபாத்)

என். டி. ஆர்., 'தேவுடு' என்று கிராமப்புற மக்களால் வணங்கப்படும் ராமராவ், கிருஷ்ணா மாவட்டத்தில் உள்ள நிம்மகூர் என்ற கிராமத்தில் பிறந்தார். விஜயவாடாவில் கல்லூரிப் படிப்பை முடித்துக்கொண்டு எதேச்சையாக நடிப்புத் துறையில் புகுந்தவர் இன்று 200 படங்களுக்கு மேல் நடித்து விட்டார். அவரே சொல்வது போல் '300 அவதாரங்களுக்கு மேல் எடுத்துவிட்டார்'. மிகவும் செல்வாக்குள்ள ''கம்மா'' என்ற வகுப்பைச் சேர்ந்த ராமராவ், படிக்கும் நாட்களில் இருந்தே சமூக சீர்திருத்தவாதியான கந்துகூரி வீரேசலிங்கம், புரட்சிக் கவிஞர் குருஜடா அப்பாராவ், டாக்டர் அம்பேத்கார் போன்றவர்களுடைய கொள்கைகளால் கவரப்பட்டார். பிரதர், பிரதர் என்று மற்றவர்களை அழைக்கும் ராமராவுக்கு இன்று வசதி வாய்ப்புக்குக் குறைவேயில்லை. ஐதராபாத்தில் மட்டும் நான்கு தியேட்டர்கள் சொந்தம். ஏராளமான கட்டிடங்களைக் கட்டி வாடகைக்கு விட்டிருக்கிறார். தெலுங்கிலும் சரி, ஆங்கிலத்திலும் சரி, கேட்பவர்களைக் கண்டி இழுக்கும்படியாக, கைகளை அசைத்தும், குரலில் ஏற்ற இறக்கங்களைக் காட்டியும் பேசுகிறார். காலையில் மூன்று மணிக்கே எழுந்துவிடுகிறார். பிறகு ஐந்து வரை யோகாசனம். சாப்பிடும் வேளை தவறிவிட்டால் உண்பதே கிடையாது. புகை, மது கிட்டவே வரக் கூடாது. அவரைப் பார்க்க அவரது அறைக்குச் சென்றால் செருப்பை வெளியில் விட்டுத்தான் செல்ல வேண்டும். இனிமேல் படங்களில் நடிக்க மாட்டாராம்.





# 1982 அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி:

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்துகொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | | |
|---|---|---|
| **முதல் பரிசு** | **ரூ.** | **1000** |
| **இரண்டாவது பரிசு** | **ரூ.** | **500** |
| **மூன்றும் பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 250 வீதம்)** | **ரூ.** | **500** |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

✲ கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

✲ அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

✲ நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

✲ முடிவு தேதி ஜூன் 15.

✲ உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

✲ பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

✲ கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

✲ எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

✲ சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர், கல்கி, சென்னை-600 032**

இன்சாட்
மேலே இன்சாட் பறக்குது! ஜோரா கை தட்டுங்கோ!.. டீ.வி. பாருங்கோ.. மாநாடு பாருங்கோ!.. ரேடியோ கேளுங்கோ!.. மாநாடு பேசுறாங்கோ! மாநாட்டியோட டெலிபோன் பேசுறான்.. ஜோரா கை தட்டுங்கோ!
கவலைப்படவில்லே! 'பிட்' அடிச்சே பாஸ் பண்ணிடலாம்!
எனக்கு பாஸ் போடலேன்னு 'புலி' கட்டிடுவேன்!
எல்லாம் மார்க் ஷீட்லே இட்டுக்கட்டப் பண்ணிக்கலாம்!
பாதி எழுதறதுக்குள்ளே பேப்பர் புடுங்கிட்டுப் போகம இருக்கணுமே!
கேரளா
மேற்கு வங்காளம்
ஹரியானா
மத்தியப் பிரதேசம்
காஷ்மீர்
உடன்பிறப்பு
ரத்தத்தின் ரத்தம்
சட்ட சபையிலே ரெண்டு கட்சிகளும் தமிழுக்கும் தமிழனுக்கும் பிரமாதமா சேவை செஞ்சிட்டீங்க! இப்ப வெளியே சேவை செய்யப் போறீங்க!

# பத்திரிகைச் சுதந்திரம் பறிபோகுமா?



எமெர்ஜன்ஸி கால பரிதாப நிலை இனி பத்திரிகைகளுக்கு எந்நாளும் ஏற்படக் கூடாது என்ற நோக்கத்தில் ஜனதா ஆட்சி, பத்திரிகைச் சுதந்திரத்தைப் பலப்படுத்த என்னென்ன செய்ய வேண்டும் என்று ஆராய இரண்டாவது பிரஸ் கமிஷன் நியமித்தது. இந்தக் கமிஷன் அநேகமாகத் தன் பணியை முடித்து அறிக்கை சமர்ப்பிக்க இருந்த கட்டத்தில், மத்தியில் ஆட்சி மாறி மறுபடி இந்திரா காந்தி பதவிக்கு வந்தார். கமிஷனுக்குப் புதிய தலைவர் புதிய உறுப்பினர்களை நியமித்தார். இப்படி நியமனமானவர்கள் இன்று அரசுக்கு அறிக்கை சமர்ப்பித்துள்ளனர். அதன் சில பகுதிகள் பத்திரிகைகளில் பிரசுரமாகியுள்ளன. கமிஷன் உறுப்பினர்கள் பலர் ஆட்சியில் உள்ளோரின் விருப்பு வெறுப்புக்களை யொட்டியே அறிக்கை தயாரித்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

இன்று ஒரு தேசிய நாளிதழைத் தொடங்குவது அல்லது தொடர்ந்து நடத்துவது என்பது ஏராள முதலீடு தேவைப்படுகிற நவீன தொழிலாகி விட்டது. சமீபத்திய டெக்னலஜியைக் கையாள வேண்டிய ஒரு பத்திரிகையின் மொத்தமூலதனத்தில், வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ளோரின் மூலதனம் பத்து சதவீதத்துக்கு மேல் இருக்கக் கூடாது என்றும், ஒரு பத்திரிகையின் பிரசுரகர்த்தாக்கள் தாங்கள் பத்திரிகையில் செய்துள்ள முதலீட்டின் அளவில் பத்து சதவீதம்தான் வேறு தொழில்களில் முதலீடு செய்யலாம் என்றும் கட்டுப்பாடுகள் விதிப்பது பத்திரிகைத் துறையின் சுதந்திரத்தையும் முன்னேற்றத்தையும் நசுக்குவதாகும்.

பெரிய பத்திரிகைக்குக் குறைவான விளம்பரப் பக்கங்களையும் (40 சதம்) சிறிய பத்திரிகைக்கு அதிகமான விளம்பரப் பக்கங்களையும் (60 சதம்) கமிஷன் நிர்ணயித்திருப்பது போல் அசட்டுத்தனம் வேறில்லை. பெரிய பத்திரிகைகளுக்கே செலவும் அதிகமாகும், விளம்பர வருவாயும் அதிகம் தேவைப்படும். விளம்பரங்களால்தான் பத்திரிகையின் விலை குறைத்து நிர்ணயிக்கப்பட முடியும்; விளம்பரங்கள் வீண் அல்ல, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு உதவுகின்றவை என்பதெல்லாம் ஒருபுறமிருக்க, சிறிய பத்திரிகைகள் 60 சதம் விளம்பரம் போட ஆசைப்பட்டாலும் முடியாமல் போகும் என்பதுகூடவா கமிஷன் உறுப்பினர்களுக்குப் புரியவில்லை?



சினிமா, செக்ஸ் ஆகியவை இடம் பெறும் பத்திரிகைகளுக்குப்பத்திரிகைக் காகிதம் தரப்படக் கூடாது என்று ஒரு சிபாரிசு! விளம்பரங்களில் ஆபாசமிருந்தால் அதைப் போட பத்திரிகை ஆசிரியர் மறுக்க வேண்டும் என்று ஒரு சிபாரிசு! ஜோதிடம் இடம் பெறக்கூடாது; பான்தம், 007 போன்ற அயல் நாட்டுச் சித்திரக் கதைகள் உதவாது! இப்படி யெல்லாம் குழந்தைத்தனமான சிபாரிசுகள் கமிஷன் அறிக்கையில் உள்ளன. அயல் நாட்டு மோகம், ஜோதிடம், ஆபாசம் ஆகியவற்றுக்கு நாம் ஆதரவு தேடவில்லை என்றாலும் இதுபோன்ற விஷயங்களில் எல்லாம் பத்திரிகைகளும் வாசகர்களும் சுய கட்டுப்பாட்டுடன் விளங்க முன்வர வேண்டுமே யன்றி, அரசுத் தலையீட்டை அனுமதித்தால் ஆபத்தை வரவேற்பதாகும்.

இன்று ஆட்சியில் உள்ளோருக்கு என்ன கோபமென்றால் இன்றைய பத்திரிகைத் துறை விழித்துக்கொண்டு நவீனமடைந்து ஆட்சி பீடத்தில் இருப்போரின் குற்றங் குறைகளைக் கண்டு பிடித்து அம்பலப்படுத்தும் ஆற்றல் பெற்றதாகி விட்டது. அதனால் அதை அலியாக்கிவிடப் பார்க்கிறார்கள்!

நமது இந்த எண்ணம் முற்றிலும் தவறு என நிரூபிப்பதே போல் இரண்டாவது பிரஸ் கமிஷன் அறிக்கையை அரசு முழுவதுமாக நிராகரித்து நமது இதய பூர்வமான நன்றியைப்பெறட்டும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

கல்கி
1983 ஏப்ரல் 18
ருத்ரோத்காரி சித்திரை 5
மலர்: 40 இதழ்: 38

தமிழ் நாட்டில் மட்டுமன்றி
தரணியெல்லாம் பரவிவாழும்
தமிழ்ப் பெருமக்கள்
அனைவருக்கும் எமது
தமிழ்ப் புத்தாண்டு
வாழ்த்துக்கள்!



இப்புத்தாண்டு நன்னாளில் உங்களது
ஒளிமயமான எதிர்காலத்திற்கு
சேமிக்கத் திட்டமிடுங்கள்.
உமது வளமான வா.ழ்வுக்கு
எமது சேமிப்புத் திட்டங்கள்
வழி வகுக்கும் என்பதை
மகிழ்வோடு அறிவிக்கிறோம்.

G. வெங்கடேசம்
சேர்மன்

அயல்நாட்டுச் செலாவணி தொடர்பான
பணிகள் புரியும் உரிமை பெற்றவர்கள்



**கரூர் வைஸ்யா**
**பாங்க் லிட்.,**

பதிவு அலுவலகம்: கரூர், தமிழ்நாடு.

# சாக்லேட் சண்டை!

'சோ'

இந்தியாவின் பிரதான அரசியல் அரங்கம் இன்று இரு பெண்மணிகளின் குத்துச்சண்டை மேடையாக விளங்க ஒழித்துக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இந்திரா காங்கிரஸ் சட்ட மன்ற உறுப்பினர்களில் எத்தனை அதிருப்தியாளர்களை மேனகா தம் பக்கம் ஈர்க்க முடியும்? ரகசியங்களை வெளியிடுவேன் என்று பிரதமரை மேனகா மிரட்டுவாரா? பிரதமர் கலவரமடைவாரா? மாமியார் மருமகள் பூசலில் ஆர் எஸ். எஸ்.ஸின் பங்கு என்ன? ராஜீவ் காந்தி இளவரசுப் பட்டம் பெறுவதை மேனகா சகிப்பாரா? மாட்டார் எனில் அடுத்து அவரது சாணக்கியம் என்ன? அதனால் இந்திரா காங்கிரஸில் என்ன எதிர் விளைவுகள் ஏற்படும்? இவற்றையும் இவை போன்ற இதர கேள்விகளையும் இன்று அரசியலை அலசுவோர் கேட்டு, பதில்களைக் கூறிக்கொண்டுமிருக்கின்றனர்.

இந்தத் தேசத்தை ஒரே குடும்பத்தினர் வாரிசு உரிமை பெற்றுப் பரம்பரை பரம்பரையாக ஆள்வதை நாம் ஏற்றுக் கொண்டதற்கு உரிய விலையைக் கொடுத்து வருகிறோம். தேசம் அக்குடும்பத்தின் சொத்தாகிவிட்ட பிறகு சொத்து உரிமை பற்றிக் குடும்பத்தில் உட்பூசல் ஏற்பட, மக்கள் தேசத்தின் எதிர்காலம் பற்றி அறிந்துகொள்ள அந்தச் சண்டையைக் கவனித்தாக வேண்டியிருக்கிறது.

ஜனதா ஆட்சிக் காலத்தில் ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் மீது அவதூறுகளைச் சுமத்தும் பத்திரிகையாக விளங்கிய 'சூர்யா', ஆர். எஸ். எஸ். அனுதாபி என்று கருதப்படுகிற ஒருவருக்குச் சமீபத்தில் விற்கப்பட்டது. இது அநேகமாக எல்லாச் சஞ்சிகைகளுக்கும் அட்டைப் படக் கட்டுரையாயிற்று. அரண்மனையில் புரட்சியா? மாமியார் மருமகளிடையே உறவு முற்றிலும் முறிந்து போயிற்று? ஆளும் கட்சியின் இரு உட் பிரிவினரும் தத்தமக்குப் பலம் சேர்க்க முற்படுவார்களா?

ஒரு குடும்பத்தின் நிகழ்ச்சிகளுக்குப் பத்திரிகைகள் இவ்வளவு முக்கியத்துவம் தருவதை யாரும் குறை கூறமுடியாது. அந்தக் குடும்பச் சண்டைகளின் காரணங்களையும் நோக்கங்களையும் பின் விளைவுகளையும் பற்றிப் பல அனுமானங்களுக்கு வருவதையும் தவறென்று சொல்ல முடியாது. ஏனெனில், இந்தத் தேசமே அந்தக் குடும்பத்தின் பாரம்பரியச் சொத்து என நிரூபணமாகிவிட்டது. அந்துலேயின் சிமெண்ட் ஊழல் விஷயத்தில் மாதக் கணக்கில் வாய் திறவாமல் இருந்த பிரதமர், தமது மருமகளைப் பகிரங்கமாகக் கைகழுவி அறிக்கை விடுவதில் ஒரு வினாடிப் போதும் வீணாக்கவில்லை. பகாடியாவையோ திரிபாதியையோ அஞ்சையாவையோ வெளியேற்றியதற்கு இதுவரை ஒரே ஒரு காரணம் கூடக் கூற முன்வராத பிரதமர், தமது மருமகளை வீட்டை விட்டு வெளியேற்றியதற்கு ஆதரவாக ஒரு விரிவான அறிக்கையைத் தேசத்துக்கு அளித்திருக்கிறார்.

இவ்வளவு தூரம் நடந்துவிட்ட பிறகு இனி எதிர்காலத்தையும் சற்று எண்ணிப் பாராமல் இருக்க முடியவில்லை.

நாளைக்கே மேனகாவின் இரண்டு வயதுப் பையன் வருணும் ராஜீவ் காந்தியின் மகன் ராகுல் காந்தியும் ஒரு சாக்லேட் விஷயமாகச் சண்டை போட்டுக் கொண்டால் தேசம் நிமிர்ந்து உட்கார்ந்து அதைக் கவனிக்கத் தொடங்கும்! இந்த இருவரில் ஒருவன் தானே எதிர்கால இந்தியாவை ஆளப் போகும் தலைவன்? அவன் யார்? சாக்லேட் சண்டையை உன்னிப்பாக நோக்க வேண்டியதுதான்!

பத்திரிகைகள் பின்வருமாறு செய்திகளின் தாத்பரியங்களை விளக்கும்: பீகார் இ. காங்கிரஸ் எம். எல். ஏ.க்களும் சஞ்சய் காந்தியின் ஊரறிந்த ஆதரவாளர்களுமான திருவாளர்கள் ஐஸும் நைஸும் சண்டை நடந்தபோது அருகில் இருந்தார்கள். வருண் காந்தி, தன் கையிலிருந்த சாக்லேட்டைக் காட்டி, 'எங்கே, பிடுங்கிவிடு பார்க்கலாம்!' என்று சவால் விட்டு ராகுல் காந்தியைச் சீண்டியதை இவ்விருவரும் பார்த்திருக்கிறார்கள். வருணும் ராகுலும் சண்டை போட்டுக் கொண்ட போது இந்த இரு சஞ்சை ஆதரவாளர்களும் அருகிலிருந்ததானது ஆளும் கட்சியில் அதிர்ச்சி அலைகளைப் பரவச் செய்யும் என எதிர்பார்க்கப்படுகிறது. தமது பெயரை வெளியிட விரும்பாத ஓர் இ. காங்கிரஸ் எம்.பி., ''வருணின் உரிமையைப் பிரச்னையாக்க முடியாது. அவன்தான் தேசத்தின் எதிர்கால நம்பிக்கை. ராகுல் காந்தி வேணுமானால் இரண்டாவது நம்பிக்கையாக இருந்துவிட்டுப் போகட்டும்'' என்றார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு எம். எல். ஏ.க்களான ஐஸும் நைஸும் கட்சி நலனுக்கு எதிரான காரியங்களில் ஈடுபட்டதற்காக சஸ்பெண்ட் செய்யப்படுவார்கள். 'கட்சித் துரோகமான காரியங்களில் இறங்க நினைக்கும் மற்ற இ. காங்கிரஸ் எம். எல். ஏ.க்களுக்கு இது ஓர் எச்சரிக்கையாக விளங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது' என்று பத்திரிகைகள் அறிவிக்கும்.

முக்கியமான விவாதங்களின்போது கூட நாடாளு மன்றத்துக்கு வர நேரம் இல்லாது தவிக்கும் பிரதமர் இந்திரா 'குழந்தைகளின் சண்டைக்குக் காரணம் ஆர். எஸ். எஸ். சூழ்ச்சியே' என்று பகிரங்க அறிக்கை

விட எப்படியாவது போதிய அவகாசம் ஏற்படுத்திக்கொள்வார். வருண் காந்திக்கு அவர் ஒரு கடிதம் எழுதி அதன் நகலை முன்னதாகவே பத்திரிகைகளுக்கு அனுப்பிவிடுவார். அதில் நேரு பரம்பரையினர் எப்போதுமே ஒரு சாக்லேட்டுக்காகச் சண்டை போட்டதில்லை என்றும், வருண் அப்படிச் செய்தான் என்பதானது அவனுக்குள்ள ஒரு வித்தியாசமான பின்னணியை உணர்த்துகிறது என்றும் சொல்வார். இந்தக் குடும்பத்தில் பொருந்தாத ஒரு குழந்தைக்குத் தேசத்தில் இடமில்லை என்றும் அரியாசனத்துக்கு அவன் ஆசைப்படவே முடியாது என்றும் கூறுமவே புரிந்துபோகும்.

இந்த நிகழ்ச்சி பற்றிய விவரங்கள் பத்திரிகைகளில் பத்திப் பத்தியாக இடம் பெறுவதைப் பார்த்துக் கலவரம் அடைகின்ற பிரதமர் ஒரு நள்ளிரவில் தமது பேரனை வீட்டை விட்டு வெளியேற்றிவிடுவார். வருண் இப்போது பிரதமருக்கு ஒரு கடிதம் எழுதுவான்: ''அன்புள்ள பாட்டி! என்னை நீ அவமதித்தது போல் ஒரு பேரனை ஒரு பாட்டி அவமதிப்பதை என் வாழ்நாளில் நான் பார்த்ததில்லை. இருந்தாலும் நான் உன்னை நேசிக்கிறேன். குடும்பப் பிணைப்பைப் பாதுகாக்க நான் என் நாய்க் குட்டியைத் தினமும் உன்னிடம் அனுப்பி வைக்கிறேன்.''

இந்த நிகழ்ச்சியைத்தொடர்ந்து பத்திரிகை நிருபர்கள் அந்த நாயின் நடவடிக்கைகளைக் கவனித்து எழுத ஆரம்பிப்பார்கள். அந்த நாய் எந்த எந்த விளக்குக் கம்பங்களை முகர்ந்து பார்க்கிறது என்று உன்னி நோக்குவார்கள். கடைசியில் வருண்ணின் நாய், பொதுவாக ஒவ்வொரு நாயும் விளக்குக் கம்பத்தின் மீது செய்கின்ற காரியத்தைத் தானும் ஒரு விளக்குக் கம்பத்தின் மீது செய்யும். உடனே அந்தப் பேரதிர்ஷ்டம் மிக்க விளக்குக் கம்பத்தைப் படம் பிடித்து எல்லாப் பத்திரிகைகளும் பிரசுரிக்கும்.

பிறகு 'ராஜீவ் காந்திதான் அடுத்த பிரதமர்' என அறிவிக்கும் ஒரு போஸ்டர் அந்த விளக்குக் கம்பத்தை அலங்கரிப்பது தெரியவரும். இந்த நிலைமையில் பிரதமர் எப்படிப் பேசாதிருக்க முடியும்? அவர் ஓர் அறிக்கை விட வேண்டியதுதான்: ''இந்த நாய் என்னை அவமானப்படுத்தவே இந்தக் காரியத்தைச் செய்திருக்கிறது. என்னால் இதை இனிச் சகிக்க முடியாது. இந்த நாய்க்கு ஊசி போடப்படவில்லை என்றும், இது கடித்தால் பைத்தியம் பிடித்துப் பாயைப் பிராண்ட வேண்டியதுதான் என்றும் எல்லா காங்கிரஸ்காரர்களையும் எச்சரிக்கிறேன்.''

வருண்ணின் நாயைத் தாக்குமாறு ராஜீவின் நாயை அவர் 'சூ' காட்டி விடலாம். தேசம், இந்த இரு நாய்களும் குரைத்துச் சண்டையிடுவதைத் திறந்த வாய் மூடாமல் வியப்புடன் பார்த்துக் கொண்டிருக்கலாம். அந்த நாய்ச் சண்டையிலிருந்து அரசியல் போக்குகளைக் கணிக்கவும் முயலலாம்.

Courtesy: Sunday Midday



# இன்று இலங்கை— நாளை உலகம் முழுவதும்... நன்றி பாரத் டிவிக்கு



ஊர்வசி, BT 101, BT 202, BT 888—
பாரத் அளிக்கும் இந்த 4 மாடல்களுமே
தெளிவான காட்சிகளோடு, இனிமையான
உயர்தர ஒலியமைப்பையும் வழங்குகின்றன.
வெப்ப நாடுகளுக்கு ஏற்ப அமைக்கப்பட்ட
துல்லியமான நுட்பமுடைய மிக நவீன
சர்க்யூட் இதன் தனிச்சிறப்பு.

பாரத்—அதன் பெயரே அதற்கு உத்திரவாதம்.

வெகுவாய் முன்னேறியுள்ள தொழில்
நுட்பம் இலங்கை நிகழ்ச்சிகளை
இன்றும், உலக நிகழ்ச்சிகளை நாளையும்
தரக்கூடிய உயரிய சக்தி வாய்ந்த
டிவி 'செட்'டுகளை நமக்குத் தந்துள்ளது.



**பாரத் டிவி**

*ஏதிலும் முதன்மையானது*

பாரத் டெலிவிஷன் லிமிடெட்
சென்னை-600 034.
தொலைபேசி எண்: 86527

தென்னாற்காட்டில் அங்கீகரிக்கப்பட்ட டீலர்கள்

அண்ணாமலை & கோ
1-A பெரிய தெரு, திருவண்ணாமலை
போன் : 342

சாஜீட் ரேடியோஸ்
24, பழைய ஆஸ்பத்திரி ரோடு, தர்மாபேட்,
குடியாத்தம் போன் : 232

# நீங்கள் கேட்டவை

**கண்ணன், சென்னை-17**

"ஆர். எஸ். எஸ்.ஸைத் தடை செய்" என்று போஸ்டர் சென்னையில் ஒட்டி யிருக்கிறதே? எம்.ஜி. ஆரும் அந்த அமைப்பை எதிர்க்கிறாரே?

ஆர். எஸ். எஸ். டாக்டர் ஜெக்கில் என்பதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன. பஞ்சம் வெள்ளம் என்றால் நிவாரணப் பணிகளில் முன் நிற்கிறார்கள். மிஸ்டர் ஹைட் என்பதற்கு நிரூபணம் இதுவரை ஏதுமில்லை. பிரதமர் முதல் முதல்வர் வரை பலபேருக்குப் பழி போட ஆர். எஸ். எஸ். வசதியாக இருக்கிறது. ஆர். எஸ். எஸ். கண்டோ அதன் தேகப் பயிற்சி கண்டோ ஏன் பயப்பட வேண்டும்? தேச பக்தியும் தேகப் பயிற்சியும் அனைவருக்கும் தேவை. இன்று ஆர். எஸ். எஸ். டிரில்லைத் தடை செய் என்பவர்கள் நாளை கராட்டே பள்ளிகளை மூடு என்றால் வியப்பதற்கில்லை.

**ரங்கநாதன், திருச்சி**

புதுமை?

அலாரம், டிஜிடால் நேரம், காலண்டர், கால்குலேட்டர், விளையாட்டு, ஸ்டாப் வாட்ச் முதலியன இடம் பெற்றிருந்த காஸியோ கைக்கடிகாரத்தில் லேட்டஸ்ட்: உலகம் சுற்றுவோருக்கு முக்கிய சொற்களை மொழி பெயர்த்தும் உதவுகிறது!

**ஹனிபா, சென்னை-5**

ஜிஜிக்கு மெடிகல் காலேஜ் அட்மிஷன் கிடைத்து விட்டதாமே?

ஏதாவது ஒன்றைச் சரியாகச் செய்யட்டும். படிப்பும் நடிப்பும் இணையாது. படிப்பைப் பாதியில் நிறுத்தி நடிப்பில் முழுசாய் இறங்கினால் நாட்டுக்கு ஒரு டாக்டர் நஷ்டம். Make up your mind Gigi!

**சிவநேசன் திருநெல்வேலி**

புதிய வடிவில் கதிர் பற்றி...?

அளவைக் குறைத்ததால் பக்கங்களை அதிகரிக்க முடிந்தது. அதனால் அதிகமான விஷயங்களைத் தருவது போல் ஒரு பிரமையை ஏற்படுத்த முடிந்தது. புதிய வடிவுடன் ஆசிரியரும் புதிசு. கஸ்தூரி ரங்கன் தட்டிக் கொடுத்து வேலை வாங்கியும் அனுசரித்தும் போகத் தெரிந்தவர். இதில் நா. பா.விடமிருந்து வேறுபடுகிறார். டில்லியிலிருந்து இறக்குமதியானதால் ஹிந்தி வார்த்தைகளை அதிகம் கலக்கிறார். தவிர்க்கலாம். Acting Editor என்ற வார்த்தைகளையும்தான். அவர் மனம் நாளிதழில்தான் இருக்கிறது என்பதால் இப்படிப் போட வேண்டுமா? கேட்கவே நன்றாயில்லை, சுவாமி!

**மங்களா, மாயூரம்**

மண்டைக்காடு கலவரங்கள் போல் மறுபடி நேராதிருக்க என்ன வழி?

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற உணர்வை வளர்க்க ஆவன செய்ய வேண்டும் தான். ஆனால் இது போன்ற கலவரங்கள் நடப்பது ஜாதி, மத பிரச்னைகளால் மட்டுமல்ல என்பது சமூக இயல் ஆய்வாளர்கள் கருத்து. (அ) கல்லாமை (ஆ) இல்லாமை (இ) ஜனத்தொகைப் பெருக்கம் – நெருக்கம் போன்றவற்றால் ஏற்படும் இயலாமை உணர்வு ஒரு சிறு பொறியைப் பெரும் தீயாக வளர்த்துவிடும்.

**இரணியல் கலா, தூத்துக்குடி**

ஒரு மனிதன் உயிரோடு இருக்கும்போது தூற்றுகிற உலகம் அவன் மறைந்தபோது போற்றுவது ஏன்?

மறைந்த ஹிட்லரைப் போற்றப் போக உயிரோடு இருக்கும் ஜெயில் சிங் வாங்கிக் கட்டிக் கொண்டாரே!

**ஜகதீசன், சென்னை-40**

ஆண்டுக்கொரு முறை மெடிகல் செக் அப் அவசியமா?

அவசியம்தான். சில சமயம் அவஸ்தையாகவும் முடிவதுண்டு. என் நண்பரின் குடும்ப டாக்டர் அவரைப் பரிசோதித்து விட்டு, 'உங்களுக்கு ஒன்றுமில்லை; என்றாலும் வயதாகிறதல்லவா' சில சோதனைகளை முன் ஜாக்கிரதையாகச் செய்துவிடலாம்' என்றார். சோதனைகளில் ஒன்று ஈ. ஸி. ஜி.

ராயப்பேட்டை மருத்துவ மனை. பணம் கட்டி ஈ. ஸி. ஜி. கேட்டார் நண்பர். ஈ. ஸி. ஜி. அலைகளைப் பார்த்த அங்கிருந்த டாக்டர் இவரை இன்டென்ஸிவ் கேர் யூனிட்டில் படுக்க வைத்து காம்ப்போஸ் மாத்திரைகளை விழுங்கினால்தான் ஆயிற்று என்றார்! பிய்த்துக்கொண்டு கிளம்புவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது நண்பருக்கு. இவர் விஷயம் தெரிந்தவர். தைரியமாய்ப் பேசித் தப்பி வந்து விட்டார். நம் நாட்டின் எத்தனையோ ஆயிரம் அப்பாவிகள்...?

**பி.எல். பரமசிவம், மதுரை**

செல்வம், செல்வாக்கு உமது விருப்பம் எது?

செல்வத்துடன் கூடிய செல்வாக்கு! அது சரி, என்னை ஏக்கப் பெருமூச்சு விடச் செய்வதில் உமக்கென்ன அத்தனை ஆனந்தம்?

**கிறிஸ்டாஃபர், கொடைக்கானல்**

ஃபாக்லாந்து தீவுகளில் பிரிட்டன் வெற்றி பெறுமா?

அங்கு பெட்ரோலியம் கிடைக்கிற சாத்தியக்கூறு இல்லையெனில் பிரிட்டன் அதனைப் பறிகொடுக்க நேர்ந்தது பற்றிக் கவலைப்படாது. பிரிட்டிஷ் கடற் படை இன்று ஒருவேளை வெற்றி பெறலாம். ஆனால் பதினையாயிரம் கிலோ மீட்டருக்கும் அப்பால் எங்கோ உள்ள தீவுகளை லண்டனில் இருந்தபடி நீண்ட காலம் ஆளமுடியாது. ஜேம்ஸ் பாண்ட்நாட்டுக்கு அர்ஜென்டினாவின் ஆக்கிரமிப்பு திட்டம் முன் கூட்டியே தெரியவராமல் போனது தான் ஆச்சரியம்.

✱ **வெ. பாலசந்திரன், கல்கத்தா-26**

கல்கி விநாயகர் சிம்பலை இவ்வளவு அழகாக யார் சார் தேர்ந்தெடுத்தார்கள்?












விநாயக(ம்)ர் வந்தார், முதல் சந்தா தந்தார் என்று முதல் இதழில் எழுதியவர் அமரர் கல்கி. அதற்குக் கார்ட்டூன் படம் போட்டவர் சாமா. பின்னர் அதற்கு மெருகேற்றிச் சித்திரமாக்கியவர் மணியம். அதையே சிம்பலாக்கியவர் சதாசிவம்.

மேஜர்தாசன், ஈரோடு

இன்று மலிவாகக் கிடைப்பது எது?

கேள்வி – பதில்!





கஸ்தூரிரங்கன்



அகிலாண்டேசுவரி, கும்பகோணம்

இது பரீட்சை சீசன். சினிமா நட்சத்திரங்களுக்குப் பரீட்சை வைத்தால்...?

இரு கற்பனைகள்:

ஜெயமாலினி : பாருங்கோ டீச்சர்! ஸ்மிதா என்னைப் பார்த்து அப்படியே காப்பி அடிக்கிறு!

பிரதாப்: மலையாளத்திலேபரீட்சை எழுதிடறேன் ஸார்! தமிழிலே டப் பண்ணிக் கிறீங்களா? தொடர்ந்துஉங்கள் கற்பனையை ஓட விடுங்களேன்!

சீனிவாசன், நெய்வேலி

பாகிஸ்தான் அணுகுண்டு தயாரித்தால் இந்தியாவும் தயாரிக்க வேண்டும் என்று வாஜ்பேயி கூறியுள்ளாரே?

அபத்தமான யோசனை. தேவையானால் இதற்கு மக்களிடம் அபிப்பிராயத் தேர்தல் நடத்தலாம்






என்று அவர் கூறியிருப்பது அதைவிட அபத்தம். நமது மக்களுக்கு அணுகுண்டின் பயங்கரம்பற்றியோ, கதிரியக்கத்தின் விபரீதங்கள் பற்றியோ அதிகம் தெரியாது. ஹிரோஷிமா, நாகஸாகியில் ''வாழும்'' ஜப்பானிய மக்களுக்குத் தெரியும். அணு குண்டு நாசம் விளைவிக்கிறது. கதிரியக்கமோ மனித உடலுக்குள் ஊடுருவி ரத்தத்தைக் கெடுத்து ஜீன்களை அழிக்கிறது. அணுகுண்டு யுத்தத்துக்குப் பிறகு யாரேனும் பிழைத்துக் கிடந்தால் அவர்கள் மனிதர்களாக இருக்க மாட்டார்கள். விநோதமான புது மாதிரி ஜீவராசிகளாக மாறியிருப்பார்கள். ஜப்பானில் குண்டு வீசிய அமெரிக்கர்கள் இன்றும் குற்ற உணர்வால் பீடிக்கப்படுகிறார்கள். அங்கே நடந்த அபிப்பிராய வாக்கெடுப்பில் அமெரிக்கா, ருஷ்யா இரண்டுமே எல்லாவித அணு ஆயுத சோதனைகளையும், உற்பத்தியையும் விநியோகத்தையும் நிறுத்திவிட வேண்டும் என்று வோட்டளித்தவர்கள் அறுபது சதம். நிறுத்த வேண்டாம் என்றவர்கள் 29 சதம். எனக்கொன்றும் தெரியாது என்றவர்கள் 11 சதம்.

○ பரிசு ரூ 10/-
பெறுபவர்:
வெ. பாலசந்திரன்,
6, பார்க்ஸைட் ரோடு, கல்கத்தா 26

# கம்ப்யூட்டரே கொஞ்சம் தமிழ் பேசு!

எல்லாருக்கும் தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

என் பெயர் P.D.P.11 மினி கம்ப்யூட்டர் c/ஐ.ஐ.டி. மெட்ராஸ். 8+2=10 போன்ற வேலை மட்டுமின்றிப் புதுத் தமிழிலும் விளையாட எனக்குப் பயிற்சி அளித்தவர்கள் ஸீனியர் ரிசர்ச் என்ஜினீயர் எஸ். இராமனுஜம், மாணவர் ஆர். சுந்தரும்.

கம்ப்யூட்டர்கள் பத்திரிகைத் துறையிலும் சாதனைகளை ஆரம்பித்து விட்டன. ஹிந்து பேப்பர் அச்சாவதில் பெரும் பங்கு எங்களுக்குத் தான் என்பது உங்களுக்குத் தெரியுமா? விரைவில் தமிழ்ப் பத்திரிகைகளையும் ஆக்கிரமிக்கப் போகிறோம் என்ற நம்பிக்கைக்கான ஆதாரமே இப்போது எங்களால் உருவாக்கப்பட்ட தமிழ் அச்சுக்கள்.

இந்தத் தமிழ் அச்சுக்கள் எங்களுக்குக் கொடுக்கப்பட்ட புரோகிராமின் வெளிப்பாடுதான்.

உலோகத்திலான அச்சுக்களல்ல.

எங்களுடன் இணைக்கப்பட்ட மின்சார டைப்ரைட்டரே தமிழ்டைப்ரைட்டராகவும் இயங்குகிறது. எல்லாம் புரோகிராமின் வித்தை. புள்ளிகளாலான தமிழ் எழுத்துகள் எங்களின் மெமரிப் பகுதியில் மின் சைகைகளாகப் பதிக்கப் படுகின்றன. டைப்ரைட்டரின் பட்டன்கள் இயக்கப்படும்போது எழுத்துக்கள் எங்களின் ஒளித் திரையில் தெரியும். மாற்றங்கள் வேண்டின் செய்துகொள்ளலாம். பிறகே இந்த மின் சைகை எழுத்துக்கள் ஒளிப் பொறியாக மாற்றப்பட்டு கெஸ்டெட்னர் இ. எஸ். வி. 73 என்ற ஸ்டென்சில் வெட்டும் கருவியில் அச்சாகிறது. ஸ்டென்சிலைப் பயன்படுத்தி வேண்டிய அச்சுக்கள் எடுக்கலாம்.

தலைப்பை டைப் செய்ததும் ஒரு பட்டனை இயக்கினால் நானே தலைப்பை மையப்படுத்தி விடுவேன். அதுமட்டுமின்றி ஒரு வரியின் இடைவெளிகளை நானே அட்ஜஸ்ட் செய்து இறுதிச் சொற்களைச் சீராக அமைத்து(விடுவேன்) விடுவேன். ஒரே டைப்ரைட்டர் மூலம் வெவ்வேறு அளவும் உருவும் கொண்ட எழுத்துக்களை அமைக்க என்னால் முடியும். கூட்டெழுத்துக்களை சாதாரணமாக எழுதுவது போலவே டைப் செய்யலாம். 'மி' என்று எழுத முதலில் 'ம' டைப் செய்து பிறகு 'கொம்பு' டைப் செய்யலாம். சாதாரண டைப்ரைட்டரில் முதலில் கொம்பு பிறகு ம. அடித்தல் திருத்தல், ஓவர் டைப்பிங் நேர விரயம் எல்லாம் என்னால் தவிர்க்கப்படுகிறது.

டைப் செய்யப்பட்ட விஷயத்தை மின் காந்த டேப்களில் பதிவு செய்து பாதுகாக்



✖ கம்ப்யூட்டர் வரைந்த படம்

✖ சாதாரண டைப்ரைட்டர் எழுத்துக்கள்

கப் புத்தகத்தில்

க்களை, கம்ப்யூட்ட

டியும். சாதாரணமான

வும், வேற்று

அதே போன்ற

✖ என் ஒளித்திரையில் எழுத்துக்கள்



# விஞ்ஞானப் பக்கங்கள்

கலாம். தேவையான சமயம் என்னில் செலுத்தத் திரையில் செய்தி ஒளிரும். தமிழ் மட்டுமின்றி எந்த ஒரு பிராந்திய மொழியையும் புரோகிராம் செய்வதன் மூலம் ஒரே டைப்ரைட்டரில் என்னால் அடிக்க முடியும். யுனிவர்ஸல் டைப்ரைட்டர். கோட்டுச் சித்திரங்களையும் பிளாக் இல்லாமல் அச்செடுக்க என்னால் இயலும்.

இந்த ரீதியில் போனால் சுவாரஸ்யமான எதிர்காலத்தில் மொழிபெயர்த்தலும் எனக்குக் கைவந்துவிடும்.

ஆம். என் அடுத்த கட்ட முன்னேற்றம்?

நீங்கள் பேசப் பேச அதை நான் உணர்ந்து எழுதுவது.

மெல்லத் தமிழினி துளிர்க்கும்.

- நளினி சாஸ்திரி



✖ நானும் (PDP II) மின்சார டைப்ரைட்டரும்



கல்கி வாசகர்களுக்கு

கம்ப்யூட்டரின்

தமிழ் புத்தாண்டு வாழ்த்துக்கள்

✖ கம்ப்யூட்டரில் உருவான வாழ்த்து. வெவ்வேறு அளவுகளில் எழுத்துக்களை உருவாக்க முடியும்.

# ராஜஸ்ரீயின் கலை ராஜ்யம்

"நான் முறையாகப் பரத நாட்டியம் கற்றுக்கொண்டு பல மேடைகளில் ஆடிக்கொண்டிருக்கிறேன் என்பதே என் கல்லூரியில் பலருக்கும் தெரியாது" என்று குமாரி ராஜஸ்ரீ கூறும்போது ஆச்சரியமாக இருக்கிறது. 'பாடின வாயும், ஆடின காலும் சும்மா இருக்காது' என்பது பழமொழி. ஆனால் இவர் இந்த விஷயத்தில் தனித்து நிற்கிறார்.

"அதற்குக் காரணம் என்னுடை குணம் தான்! எங்கே போனாலும் நான்தான் முதலில் இருக்க வேண்டும்; எல்லோருடைய கவனத்தையும் கவர வேண்டும்' என்பது எனக்குக் கொஞ்சமும் பிடிக்காத அம்சம்."

இந்த இளம் பெண் இறுதியாண்டு 'சைகாலஜி' படிக்கிறார். சைகாலஜிக்கும் பரதத்துக்கும் என்ன சம்பந்தம்?

"நிறையவே இருக்கிறது. மனோதத்துவம் சம்பந்தப்படாத துறை எது இருக்கிறது? ஒவ்வொரு மனிதனுடைய மன ஆழத்தையும் புரிந்துகொள்ள இது உதவுகிறது. இது என்னுடைய நடனத்துக்கு இரண்டு விதத்தில் உதவுகிறது. நான் ஆடப்போகும் பாடல் எந்தச் சமயத்தில் எந்தச் சூழ்நிலையில் எந்த மனநிலையில் பாடப்பட்டது என்பதை எளிதாகப் புரிந்து கொள்கிறேன். அதனால் அதனுடைய அர்த்த பாவத்தை முழுமையாக என்னுடைய நாட்டியத்தில் கொண்டுவர முடிகிறது.

"அதே போல நான் ஆடும் ஆட்டத்தைப் பார்வையாளர்கள் எவ்வளவு தூரம் ரசிக்கிறார்கள் என்பதையும் புரிந்து கொள்கிறேன். நடனம் என்பது மக்களை மகிழ்விக்க வேண்டிய கலை. அப்படி இருக்கும்போது ரசிகர்களைப் புரிந்து கொண்டால்தானே மகிழ்விக்க முடியும்!"

இன்றைக்கு நடனம் கற்றுக் கொள்வது என்பது ஒரு பாஷனாகி விட்டது. என் பெண்ணும் டான்ஸ் கற்றுக் கொள்கிறாள் என்று சொல்லிக் கொண்டால்தான் கௌரவம் என்றாகி விட்டது. இளம் கலைஞரான இவர் இந்தப் போக்கை எவ்வளவு தூரம் ஆதரிக்கிறார்?

நிறையப் பேர் நடனம் கற்றுக்கொள்வதை நான் சந்தோஷமாக வரவேற்கிறேன். இதனால் நடனக்கலை நீங்கள் நினைப்பதுபோல 'சீப்' பாகிவிடாது. மாறாக, நிறையப்பேர் இருந்தால்தான் நன்றாக ஆடவேண்டும் என்று போட்டி எழுந்து அதனால் திறமை மிகுந்த நடனக் கலைஞர்கள் தோன்றுவார்கள்."

"உங்களுடைய திறமையைப் பாராட்டியவர்களில் முக்கியமானவர்கள்?"

"இசைக்கே புகழ் சேர்க்கும் எம்.எஸ் அவர்களும், நடனத்துக்கே பெருமைகூட்டிய பாலசரஸ்வதியும் என்னுடைய நடன நிகழ்ச்சிக்கு வந்து பாராட்டியிருக்கிறார்கள். அவர்கள் ஆசியோடு என்னிடம் உள்ள குறைகளை நீக்கிக்கொள்ள முயல்வேன். அதன் மூலம் மேலும் சிறப்படைய முயல்வேன்."

'நான்' என்ற அகங்காரமின்றி அடக்கமாகப் பேசும் குமாரி ராஜஸ்ரீ டாக்டர் சங்கரனின் அருமைப் புதல்வி. மிகச் சிறந்த கலைப் பரம்பரையில் தோன்றிய சுவாமிமலை ராஜரத்தினம் அவர்களைத் தம் குருவாகப் பெற்றவர். சொல்லிக் கொடுத்ததைச் சட்டென்று கிரகித்துக் கொண்டு குருவின் எதிர்பார்ப்புக்கு அதிகமாகவே சிறப்பாகச் செய்யும் ஆற்றல் உள்ளவர்.

அவர் நடனமாடும்போது மிக இலகுவாகச் செய்துவிடுவது போல் நமக்குத் தோன்றுகிறதே அது, பல ஆண்டு தீவிர பயிற்சியும், கலையில் ஈடுபாடும் அவருக்குப் பெற்றுத் தந்த வெற்றி. இவர் வாழ்கின்ற அதே தெருவில் 'பாலா' வசிப்பதால்தானோ என்னவோ இளம் வயதிலேயே இத்தனை பாவ ஞானம் பெற்றுள்ளார். அதை முழுமையாக உணர இவர் "கா, வாவா! கந்தா வா!" என்ற பாடலுக்கு அபிநயம் செய்வதைப் பார்க்க வேண்டும். உருக்கி விடுகிறார்.

தில்லானா, வர்ணம் முதலிய எல்லாம் ஆடும்போது இவரது லய ஞானத்தையும் நிருத்தியத் திறனையும் புரிந்து கொள்கிறோம்.

உலகமே போற்றி வியக்கும் நமது உன்னதமான சாஸ்திரீயக் கலைகளில் நமது ஈடுபாட்டையும் ரசனையையும் மேலும் வளர்த்துக் கொள்வதெனப் புத்தாண்டு பிரதிக்ஞை செய்துகொள்வோமே!

-மஞ்சுளாரமேஷ்

-மேலட்டை வண்ணப்படம்: உத்ரா



# 1

முரளீதரன் தான் எழுதிய விளம்பர வாசகங்களைப் படித்துப் பார்த்தான். சுருக்கமாக, தெளிவாக, மக்கள் மனதில் எளிதில் 'சிக்'கெனப் பிடிக்கும் வண்ணம் அமைந்து விட்டது. அவனுக்கு நிறைவாக இருந்தது.

''முரளி ஸார்! உங்களை டைரக்டர் கூப்பிடுகிறார்.''

''யெஸ், கமிங்!''

ஃபோமிகா தடுப்புக்களால் அமையப் பெற்றிருந்த டைரக்டரின் அறைக்குள் நுழைந்தான். டைரக்டர் ராமநாராயணன் தம் வழுக்கைத் தலையை இடது கையால் தடவி விட்டுக் கொண்டு போனில் பேசிக் கொண்டிருந்தார். 'ஜஸ்ட் ஒன் டேபோறும். மீடியம் லே சொல்லிட்டேன். இந்தத் தடவை உங்க கம்பெனி ஷார்ட் பிலிம் ஒரு சென்சேஷனா இருக்கப் போறது. யெஸ்! ஐ மீன் இட்!'' மேலும் சில வார்த்தைகள். போனை வைத்து விட்டு மீண்டும் ஒரு முறை தலையைத் தடவிக் கொண்டார். அவர் அப்படி அடிக்கடி தலையைத் தடவிக்கொள்வதால் வழுக்கை விழுந்து விட்டதா, இல்லை வழுக்கை விழுந்து விட்டதே என்று தலையைச் சமாதானப்படுத்துகிறாரா என்று தோன்றியது முரளிக்கு.

''யெஸ் மை பாய்! வாட் ஹாப்பென்ட்?''

''எழுதிட்டேன் ஸார்!''

ராமநாராயணன் வாங்கிப் பார்த்தார்.

'காதல் கனவுகளே — இளம்
கன்னி மன நினைவுகளே
காளையவர் மனம் மகிழ
அணிவீர் கமல் புடவை.''

வெரிகுட்!

''ஏன்பா முரளி! 'காளையவர்'னு போட்டிருக்கியே இதை 'காதலனின்'னு போட்டா என்ன?''

''போடலாம் ஸார். ஆனா அதிலே சைகிக் அப்பீல் குறைஞ்சு போயிடும்!''

''வாட் டூ யூ மீன்?''

''ஒரு இளம் பெண் நாகரிகமா உடையணியறான்னு சொன்னா அது ஒருத்தன் மட்டும் பார்த்து ரசிக்க இல்லே. எத்தனை பேர் தன் புடவையைப் பார்த்து ரசிக்கிறாங்கிறதிலேதான் ஒருத்திக்கு ஒரு மென்டல் எலிவேஷன் கிடைக்கிறது. மாடர்ன் கேர்ல்ஸ் ஆர் லைக் தட். அவாளுக்கு இன்ஹிபிஷன்ஸ் இல்லேன்னு சொல்லிக்கிறதிலே ஓர் ஆசை. தங்களைப் பார்த்து ரசிக்கிறவாளோட எண்ணிக்கை அதிகமா இருக்கணும்னுதான்ஒவ்வொருத்தியும் நினைக்கிறா''

ராமநாதன் புன்னகைத்தார்.

''ஓகே! மை பாய்!''

''ஆமாம், பத்திரிகையிலே போடறதுக்கும் இதுவே போதும்னு நினைக்கிறியா?''

''ம்... போட்டால் நல்லாத்தான் இருக்கும் ஸார்!''

''அதுக்கு ஒரு போஸ் எடுக்கணும். மூணு விதமான கோணத்திலே எடுத்து புரொஜக்ட் பண்ணணும். அந்த வங்காளிப் பொண்ணு வந்துட்டாளா?''

''இன்னும் இல்லேன்னு நினைக்கிறேன்.''

''நேத்திக்கும் லேட்டாத்தான் வந்திருக்கா. போகட்டும். அவளை 'லே அவுட்' தயார் பண்ணச் சொல்லிடு. மூர்த்தி கிட்டே இந்த நாலு வரியையும் டியூன் பண்ணி ரெகார்ட் பண்ணச் சொல்லு. புது கேஸட்லே போடணும். இந்தப் பார்ட்டி வசமான ஆளு. முதல்லே இம்ப்ரஸ் பண்ணணும். நீ போகலாம்....''

முரளி வெளியே வந்தான்.

அது ஒரு விளம்பர நிறுவனம். ராமநாராயணன் முதலில் ஆங்கிலேயக் கம்பெனி ஒன்றில் பதினைந்து ஆண்டுகள் பணிபுரிந்தவர். இந்தக் காலத்துக்கு ஏற்றபடி புதுமையான, கவர்ச்சியான விளம்பரங்கள் தயாரிப்பதெப்படி என்ற நுணுக்கங்களைப் பயின்றவர். தாமே ஒரு கம்பெனி ஆரம்பித்துவிட்டவர், காரும், பங்களாவுமாகக் கொழிப்பவர். இந்தக் கம்பெனி ஆரம்பித்துப் பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. வியாபார உலகில் ராம் நாராயண் அன் கோ பிரசித்தம். ஆரம்ப காலத்தில் கூட்டாகச் சேர்த்துக் கொண்ட இரு நபர்களும் ஐந்தாறு ஆண்டுகளில் வெளியேறி விட்டனர். வருமானத்தில் இலாபத்துக்குப் பதிலாக நஷ்டமே வந்து கொண்டிருந்ததாக வருடாந்தரக் கணக்கு விவரங்கள் அறிவித்தன. ஆனால் ராம நாராயணன் மட்டும் தம் வசதிகளைப் பெருக்கிக் கொள்ளத் தவறவேயில்லை. தங்களுடைய முதல் தேறினால் போதும் என்று பாகஸ்தர்கள் பிய்த்துக் கொண்டு கிளம்பும்படி செய்து விட்டார். அவருக்கு வியாபார நேர்த்தியோடு மனித இயல்புகளும் அத்துப்படி.

''முரளீ!''... சுரேஷ் கூப்பிட்டான்.

''யெஸ் ஸார்!''

சுரேஷ் ராமநாராயணனின் புதல்வன். நல்ல உயரம். சிவந்த மேனி. வயது முப்பத்திரண்டுதான் இருக்கும். செல்வச் செழிப்பின் காரணமாகத் தொந்தி விழுந்திருந்தது. 'வெரிமச் பிஸினஸ் லைக்' பேர்வழி.

''எம். டி. ஏதானும் ஒர்க் கொடுத்திருக்காரா?''

அவன் ராமநாராயணனை அப்படித்தான் கூப்பிடுவான். அவரும் சுரேஷ் என்று கூப்பிடமாட்டார். ஈ.—டி. என்றுதான் குறிப்பிடுவார். தகப்பனார் மேனேஜிங் டைரக்டர். தனயன் எக்ஸிக்யூடிவ் டைரக்டர். நல்ல சம்பளம். லாபத்திலும் பங்கு.

முரளி தலையசைத்தான்.

''சரி அதை முடிச்சுடு. ஹிரண்மயி வந்திட்டா. அவகிட்டே நேத்துக் கொடுத்த லே அவுட்டை வாங்கிப் பார். ஆர்டிஸ்டிக்கா, சஜஸ்டிவ்வா இருக்கான்னு பாரு!''

''ஸார்! தப்பா நினைச்சுக்காதீங்க. அவ நான் போய்க் கேட்டாலே ஒரு மாதிரியாப் பார்க்கிறா. யோசனை சொன்னா தப்பா புரிஞ்சுக்கப்பா!''

''ஐ ஸீ! அவ ஒரு ஆர்டிஸ்ட். நீ காபி ரைட்டர்தானே. போகட்டும். நான் கவனிச்சுக்கிறேன். அவளை என் அறைக்கு வரச் சொல்!''

# கவர்ச்சிகள்

## கிருஷ்ணமணி





# புது அகராதி

கல்லூரி மாணவ மாணவியர் பேசிக்கொள்ளும்போது புதிய வார்த்தைகள் உருவாகிக் கொண்டே இருக்கும். லேட்டஸ்ட்:

**தூள் (கிளப்பிட்டான்):** அமர்க்களப்படுத்திட்டான்.

**டக்கர்:** அட்டகாசம்.

**கொட்டறான்:** ரீல் விடறான்.

**மிளகாய் இன்னாதே:** கோபப்படாதே.

**டாவு (அடித்தல்):** சைட் அடித்தல்.

**என்னம்மா அல்லது மச்சி:** மாணவன் இன்னொரு மாணவனை அழைக்கும் விதம்.

**என்னப்பா:** மாணவி இன்னொரு மாணவியை அழைக்கும் விதம்.

**டக்கர் டேம்:** அழகான பெண்

**சடை:** அறுவை கேஸ்.

**நாஸ்தி (பண்ணிட்டான்):** கெடுத்துக் குட்டிச்சுவராக்கிவிட்டான்.

**அமுக்கி வாசி:** ரொம்பவும் அலட்டிக் கொள்ளாதே.

தொகுப்பு: ஜூலி

முரளிக்கு எரிச்சலாக இருந்தது. இந்த வேலை அவனுக்குப் பிடிக்கவில்லை. தானும் ஒரு சிறந்த படைப்பிலக்கிய ஆசிரியனாக உருவெடுக்க வேண்டும் என்ற எண்ணம் அவனுள் மேலோங்கி யிருந்தது. இலக்கியத்தில் மிருந்த ஈடுபாடு கொண்ட அவனுக்கு வயிற்றுப் பாட்டுக்காகத் தன் சுயதர்மத்தையும் சுதந்திரத்தையும் அடகு வைத்துவிட்டது போலிருந்தது. ''கவர்ச்சிகள்'' மனித மனத்தை ஈர்க்கும் விளம்பரங்கள். மனிதர்களைச் சுயமாகச் சிந்திக்கவைக்கக் கூடாது என்ற எண்ணத்துடன் உருவாகிய போலியான ஒரு இலக்கியம். 'அட்வர்டைஸிங் இஸ் ஏன் ஆர்ட். இட் ஈஸ் லிட்டரேச்சர் பை இட்ஸெல்ஃப்' ராமநாராயணனின் சொற்கள் நிழலாடின. 'ரப்பிஷ்! ஷிட்!' முரளியின் வாய் முணுமுணுத்தது. இந்தக் கால கட்டத்தில் எல்லாமே விளம்பரமாகப் போய்விட்டது. எந்தத் துறையை எடுத்துக் கொண்டாலும் விளம்பரம் செய்கிறவன் தான் முன்னுக்கு வருகிறான். காரியாலயங்களில் குமாஸ்தா வேலை செய்கிறவன் கூடத் தான் செய்யும் வேலைகளைப் பற்றிப் பிரமாதமாகப் பீற்றிக் கொள்கிறவனுக்குக் கிடைக்கிற மரியாதை, அமைதியாக,—ஆரவாரமின்றிச் செய்பவனுக்குக்கிடைப்பதில்லை! அவன் மனம் பொருமினான்.

ஹிரண்மயி எதிர்ப்பட்டாள்.

ஹிரண்மயி!

கொடி போல் இருந்தாள். ஒடிசல் அல்ல. பருமனும் அல்ல. இடைப்பட்ட ஒரு நிலையின் தோற்றம். பூசினாற்போன்ற ஒரு வாகு. ரவிக் அணிந்திருந்தாள். புடவையை இடையில் தொப்புளுக்குக் கீழே கட்டியிருந்தாள். அது ஒருவித போதையை ஊட்டியது போல் இருந்தது. நீண்ட நயனங்கள். அலைபாயும் பார்வை. கூந்தலைக் கழுத்தளவோடு நறுக்கி ஒரு ஸ்னாட் போட்டிருந்தாள். ஷாம்பூவின் மணம் வீசியது. ஹை ஹீல்ஸ். அவள் நடப்பதே காற்றில் லேசாக, ஸ்லோ மோஷன் படங்களில் வருமே அது போல, பறப்பது போலத் தோன்றும். ஆங்கிலத்தில்தான் பேசுவாள். ஒரு ஸ்டைல் இருக்கும். அவள் சிரிப்பதே அழகுதான். உதடு நலுங்காமல் புன்னகைப்பாள். அறுபதை நெருங்கும் ராம நாராயணனுக்கே அவளிடம் கிறக்கம் உண்டு என்று பேசிக் கொண்டார்கள்.

''குட்மார்னிங் மிஸ் ஹிரண்மயி!''

''குட்மார்னிங்!''

''உங்களை ஈ. டி. வரச் சொன்னார்.''

''தாங்க்யூ!''

ஹிரண்மயி சுரேஷின் அறையை நோக்கிப் போகிறாள். அவளுடைய பின்புறம் ஒரு தாளக்கட்டோடு அசைந்தது. பின்னல் போட்டிருந்தால் நிச்சயம் அரை வட்டம் போட்டு ஆடும். முதுகில் ரவிக்கை என்ற பெயரில் சிறிதளவு துணி ஒட்டிக்கொண்டிருந்தது. அவன் பார்வை திரும்பியது.

டெலிபோன் ஆபரேட்டர் ஹில்டா இவனையே பார்த்துக் கொண்டிருப்பது போலிருந்தது. பொழுதுக்கும் ஒரே இடத்தில் உட்

# சிற்பக்கலைநயம்வாய்ந்த சோமநாத்பூர் கோயில், கர்நாடகா

அக்காலத்து கலைத்திறனை இக் கோயிலின் கற்கள் பேசுகின்றன. பூ வேலைப்பாடுகளும், வடிவமைப்புகளும், அதிநுட்பமான கட்டிடக்கலை வல்லமையும் கலைஞர்களின் கலை ஆர்வத்தின் பிரதி பலிப்பாகத் திகழ்கின்றன.

இவ்வாறாகத்தான் காலங்-காலமாக கல்லிலே கலை வண்ணம் கண்டு வழிவழி மரபை உலகறியச் செய்துள்ளனர்.

பழங்கால மரபுகளை மனதில் கொண்டு தாவண்கெரே காட்டன் மில்லில் புராண அழகை பிரதிபலிக்கும்படியான துணி வகைகளைத் தயாரித்தளிக்கிறோம். நுட்பமான நெசவு, கலைஞர்களின் கைவண்ணம்— எண்ணிலடங்காத துணி வகைகள், ஒவ்வொருவரும் பாராட்டும் வண்ணம்.

சிறந்த துணிமணிகளை உயர்ந்த மரபாகக் கருதுவது

## தாவண்கெரே

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லி.,
ஹனுமந்தப்பா கட்டிடம் சித்ரதுர்கா
ரோடு, தாவண்கெரே-577 002.
ஷோரூம்:
காவேரிபவன், பெங்களூர் 560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி 580 020.
சித்ரதுர்கா. ரோடு,
தாவண்கெரே 577 002.



கேசவா கோயில்,
சோமநாத்பூர்,
மைசூர், கர்நாடகா,
ஹோய்சாலா
காலத்தியது.
கி.பி. பன்னிரண்டாம்
நூற்றாண்டு

TAIDOMICI TAM

கார்ந்திருப்பதால் அவன் முகம் அப்பொழுதுதான் தூங்கி எழுந்தது போலிருக்கும். உடம்பு அவனுக்குப் பருத்துவிட்டது. பாவம் ஹில்டா! 'மொனுட்டனஸ் ஜாப்' என்று முனு முணுக்கத்தான் தெரியும் அவனுக்கு. ஆனால் இவள் இங்கே வேலைக்குச் சேர்ந்ததே ஒரு கதை என்று சொல்வார்கள். சுரேஷின் திருவிளையாடல்கள் அனந்தம் என்று முரளி கேள்விப்பட்டிருக்கிறான். ஒரு நாள் பழக்கம் ஹில்டாவுக்குக் கம்பெனியில் வேலை போட்டுக் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தி விட்டதாம். முரளிக்கு எல்லாமே வேடிக்கையாக இருந்தது. வாழ்க்கையில் இப்படியும் பலபேர் இருக்கத்தான் இருக்கிறார்கள். பெருமூச்சுடன் வேலையில் ஆழ்ந்தான் அவன்.

''மிஸ்டர் முரளி!''

தலை நிமிர்ந்தபோது ஹிரண்மயி புன்னகைத்து நின்றாள். அவனுடைய மேஜைக்குச் சற்று மேலே அவள் வயிற்றுப் பாகமும் கவர்ச்சியான அந்த நாபியும் தெரிந்தன. முரளிக்கு என்னவோ செய்தது.

''யெஸ் பிளீஸ்!''

அவள் ஆங்கிலத்தில்தான் பேசினாள். ''நான் போட்டிருக்கும் லேஅவுட் நல்லா இருக்குதான்னு பாருங்க!''

அவள் நீட்டிய ஓவியத்தை வாங்கிப் பார்த்தான். நன்றாகவே இருந்தது.

''இட் இஸ் பொயட்ரி இன் டிராயிங்''. என்றான்.

''தாங்க்யூ!''

அவள் நகரவில்லை. அவன் சொன்ன பாராட்டுரை இன்னும் சற்று நீடிக்காதா என்பது போலிருந்தது அது.

''யெஸ் ஹிரண்மயி!'' — சொல்லிவிட்டு மீண்டும் அவளை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்தான். என்ன தோன்றியதோ, மிகத் துணிச்சலுடன் சொன்னான்:

''யூ லுக் டாப்ஸ் டு டே!''

''ரியலி?'' அவள் கண்கள் விரிந்தன. ''தாங்க்யூ!'' மெதுவாக அன்னம் போல் அசைந்து சென்றாள்.

அன்று முழுவதும் அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. தான் சொன்னதை வெகு இயல்பாக அவள் ஏற்றுக் கொண்ட விதம் அவனுக்குப் பிடித்திருந்தது. இருவரின் மேசைகளும் பார்க்கும் தூரத்திலிருந்ததால் அன்று அவர்களுடைய கண்கள் பலமுறை சந்தித்தன. ஹிரண்மயி அழகிதான். அவளுடைய கண்கள், நேர்த்தியானமூக்கு, குவிந்த உதடுகள், நெற்றியில் புரளும் சுருட்டைக் கேசம் இவை அனைத்துமே எளிமை கலந்த ஒரு வனப்பை அவளுக்குத் தந்தது போல் இருந்தது. காரியாலயம் முடியும் நேரம் வந்ததும் அவனுக்கு எதையோ இழப்பது போல் ஓர் உணர்வு ஏற்பட்டது. அவள் அவன் மேசை அருகே வந்து நின்று பார்த்து 'சீர்யோ!' என்றாள். முரளிக்குக் குப்பென்று வியர்த்தது. அவள் போவதையே அவன் கண்கள் பார்த்தன. (தொடரும்)



## ஒரு டெலிபோன் கற்பைக் காத்தது!

தொலைபேசி 'தொல்லை பேசி' மட்டுமில்லை; அது எவ்வளவு அரிய சேவைகளையும் செய்திருக்கிறது. தெரியுமா?

16—9—80 அன்று ஆந்திராவில் முழுமையான பந்த். பஸ், ரயில் எதுவும் ஓடவில்லை. குமாரியின் தாய்-தந்தை அவளுடைய கல்யாண விஷயமாக மெட்ராசுக்குப் போயே ஆக வேண்டும். வேறு வழியே இல்லாமல் ஒரு லாரி டிரைவரைக் கேட்டுக் கொண்டார்கள். அவனும் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவதாகச் சொன்னான்.

ஆனால் கூட வந்த குமாரியின் அழகு டிரைவரையும் கிளீனரையும் சலனமடையச் செய்து விட்டது. கூடூரைத் தாண்டி சிலாகூர் என்ற கிராமத்தில் பெற்றோரைப் பலவந்தமாக இறக்கி விட்டு விட்டுப் போய் விட்டார்கள்.

சில நிமிஷங்களே பரிதவித்த பெற்றோர், சிலாகூர் தொலைபேசி எக்ஸ்சேஞ்சை அடைந்து விஷயத்தைச் சொன்னார்கள். உடனடியாக நடவடிக்கை எடுக்கப்பட்டது. லாரி போகும் வழியில் உள்ள நாயுடுப் பேட்டை போலீஸ் ஸ்டேஷன், கூடூர் போலீஸ் சூபரிண்டெண்ட் ஆகியோருக்குத் தகவல் தெரிவித்தனர். போலீஸார் லாரியை மடக்கிப் பிடித்து விட்டனர்.

குமாரி எந்தவித சேதாரமுமில்லாமல் தப்பிவிட்டாள்.

—சிலாகூர் தொலைபேசி ஆபரேட்டர் எஸ். பார்த்தசாரதி சொல்லக் கேட்டவர்: ப. சிதம்பரம்

# டிடெக்டிவ்

''கம் இன்'' என்றான் ரெஞ்சீவி. வலது கை தன் இச்சையாக எதிரே இருந்த நாற்காலியைக் காட்டிற்று.

எதிரே வந்து அமர்ந்த அந்த மனிதருக்கு நாற்பது வயதிருக்கலாம். பத்து நாள் தாடி மீசை. வெள்ளியோடிய தலை மயிர் அடர்த்தியாக இருந்தது. சாதாரண அரைக் கைச் சட்டையும், மிகச் சாதாரணமான ஒரு நாலு முழ வேஷ்டியும் அணிந்திருந்தார்.

''நான் டிடெக்டிவ் ரெஞ்சீவியைப் பார்க்க வேண்டுமே?''

''ஐ ஆம் ரெஞ்சீவி. வாட் கேன் ஐ டூ ஃபார் யூ?''

சற்றுப் பரபரப்படைந்தவர் ஒரு கணம் நிதானித்தார்.

''உங்களால் எனக்கு ஒரு காரியம் ஆக வேண்டுமே?'' என்றார் தயங்கிய குரலில்.

''டெல் மீ'' என்றான் ரெஞ்சீவி சுருக்கமாக. மனத்தின் கவனம் அவன் பார்வையில் தெரிந்தது.

அந்த அறையை நோட்டமிட்டவர், இடது கை மூலையில் ஒரு டைப்ரைட்டர் முன் அமர்ந்திருந்த பெண்ணைப் பார்த்ததும் தயங்கினார்.

புரிந்து கொண்டான் ரெஞ்சீவி.

''யெஸ். உங்க தயக்கம் புரிகிறது. அந்தப் பெண் இந்த அலுவலகத்தில் பணிபுரிகிறவள்தான். அவளுக்கு எல்லாக் கேஸ் விவரங்களும் தெரியும். டாக்டர்கள், வக்கீல்கள் மாதிரிதான் இந்தத் துப்பறிகிறவர்களும் வெற்றிகரமாய்ச் செயல்பட வேண்டுமானால் உண்மையை ஒளிக்காமல் சொல்வது முக்கியம். கஸ்டமரின் எந்த ரகசியமும் இந்த அறையைத் தாண்டி வெளியே போகாது. அது எங்கள் தொழில் தர்மம். அதனை நாங்கள் மிகவும் கவனமாகவும் அக்கறையாகவும் பேணுவதால்தான் இந்த 'ரெஞ்சீவி டிடெக்டிவ் ஏஜென்ஸி' வெற்றிகரமாய்க் கடந்த பத்து வருடங்களாய் இயங்கி வருகிறது. எனவே தயங்காமல் கவலைப்படாமல் என்ன வேண்டும் என்பதைச் சொல்லுங்கள்....''

கனிவாய், தெளிவாய், பிசிறில்லாமல் பேசிய ரெஞ்சீவி, பதில் கேட்கும் தோரணையுடன், ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டான்.

தன் பையிலிருந்து ஒரு புகைப்படத்தை எடுத்துச் ரெஞ்சீவியிடம் நீட்டினார் வந்தவர்.

''இவள் பெயர் ஜமீலா. பெண்கள் ஹாஸ்டலில் தங்கியிருக்கிறாள்....'' என்று கீழ்க் குரலில் சொல்லியவர், ஒரு கணம் நிறுத்தினார்.

''இந்தப் பெண்ணை என் நெருங்கிய நண்பன் கூடிய விரைவில் திருமணம் செய்து கொள்ள நிச்சயித்திருக்கிறான். ஆனால் எனக்குத்தான் சம்மதம் இல்லை...''

பெருமூச்சு இடைமறிக்கவும் பேச்சை நிறுத்தினார்.

''ஏன்?''

புகைப்படத்தை உன்னிப்பாகப் பார்த்தவாறே கேட்டான் ரெஞ்சீவி.

''அந்தப் பெண்ணின் நடத்தை பற்றி எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. நான் எவ்வளவோ சொல்லியும் பிடிவாதமாக 'நீ சொல்வது ஆதாரமற்றது' என்று உதாசீனப்படுத்துகிறான். என் சந்தேகம் தவறென்றால் எனக்கு நிம்மதி. ஆனால் என் சந்தேகம் ஊர்ஜிதமானால், என் நண்பனின் வாழ்க்கை நாசமாகிவிடுமே? ஆகையால் இவளைப் பற்றிய விவரங்களை விசாரித்துத் தரவேண்டும் நீங்கள்...''

சொல்லி முடித்தார் வந்தவர். அந்த ஏ. சி. அறையிலும் அவருக்கு வேர்த்து விட்டிருந்தது.

அந்தப் படத்தையே உற்று நோக்கினான் ரெஞ்சீவி.

இருபது. இருபத்தைந்து வயது இளமையின் அட்டகாசம். சிவப்பாய், தளதளவென்று பொங்கினாள். கையில்லாத ரவுக்கை, மார்புகளைக் கவ்விப் பிடித்துக் கொண்டிருந்தது. பாப் செய்யப்பட்ட தலைக்குக் கீழே வழிந்த கழுத்து விரிந்து, வளைந்து, எழுந்து சரிந்து இளமை ஆரோக்கியத்தில் இளைத்தது. சிரிப்பின் வசீகரம் போதையூட்டியது.

அந்தப் பெண்ணின் காதலன் மீது பொறாமைகூட எழுந்தது ரெஞ்சீவிக்கு.

''ரைட்டோ... அடுத்த மாதம் இதே தேதியில் ரிப்போர்ட்டை வாங்கிக்கொள்ளுங்கள்.... எங்கள் ஃபீஸ் இரண்டாயிரம் ரூபாய்...''

இரண்டு பத்து ரூபாய்க் கட்டுகளை எடுத்து மேஜையில் வைத்தார் வந்தவர்.

''உங்கள் பெயரைச் சொல்லவில்லையே?'' என்றான் ரெஞ்சீவி.

''நோ... ப்ளீஸ்... சில காரணங்களுக்காக நான் வெளியிட விரும்பவில்லை. எக்ஸ்க்யூஸ் மீ'' என்று சொல்லியவாறே அகன்றார் வந்தவர்.

ஒரு கணம் அதிர்ந்த ரெஞ்சீவி சுதாரித்துக்கொண்டான்.

'நாளைக்கே இன்வெஸ்டிகேஷனை ஆரம்பித்துவிட வேண்டும்...

தெலுங்குக் கதை:

தலையிலிருந்து 'விக்'கை எடுத்துப் பீரோவுக்குள் வைத்தான். மளமளவென்று 'ஷேவ்' செய்து கொண்டான். பத்து நாள் தாடி போன சுகம் இதமாயிருந்தது. கைகளால் முகவாய்க்கட்டையைத் தடவினுன். சந்தனக் கலர் சஃபாரியை எடுத்து அணிந்து கொண்டான். ஸ்ப்ரேயரால் மேலெல்லாம் சென்டைப் படர விட்டான்.

கண்ணுடியின் முன் நின்றபோது தனக்கே தன்னை அடையாளம் தெரியவில்லை.

சற்று நேரத்துக்கு முன் அழுக்கு வேட்டியும், பத்து நாள் தாடியும், 'விக்'கும் அணிந்து 'ரெஞ்சீவி டிடெக்டிவ் ஏஜென்ஸி'யிலிருந்து வந்தது தான்தாளு என்று அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

வாய் விட்டுச் சிரித்தான்.

'ஜமீலா... மை டார்லிங்... எக்ஸ்க்யூஸ் மீ!'

உதடுகளால் அவள் பெயரை மௌனமாய் உச்சரித்தபோதே நெஞ்செல்லாம் இனிமை பொங்கியது.

'உன்னைப் பற்றி நீயே அறியாமல் விசாரிப்பதற்காக என்னை மன்னித்துவிடு...'

நாடக பாணியில் கண்ணுடி முன் உடலை வளைத்து மன்னிப்புக் கேட்டான்.

அவள் மீது கொள்ளை ஆசை அவனுக்கு. திருமணம் செய்து கொள்ளப் போகிறுன். எவ்வளவோ விஷயங்களைப் பற்றி விதவிதமாய்ப் பேசுகிற ஜமீலா தன் கடந்த காலத்தைப் பற்றி மட்டும் சொல்ல மாட்டாள்.

''ஜமீலா.. இன்னும் கொஞ்ச நாளிலே நாம் தம்பதிகளாகப் போகிறோம். என்னிடம் உன் கடந்த கால வாழ்க்கையைப் பற்றிச் சொல்ல வேண்டாமா? நமக்குள்ளே ரகசியம் இருக்கலாமா? என் மனைவியைப் பற்றிய எல்லா விவரங்களும் எனக்குத் தெரிய வேண்டாமா?''

பலவிதமாய்க் கேட்பான் அவன்.

''ஏன் என்மீது சந்தேகமா?... என்மீது நம்பிக்கை இல்லையா?...அதெல்லாம்தெரிந்து கொள்ளாமல் என்னைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டீர்களா?... உங்கள் காதல் இவ்வளவுதாளு?....''

குபுக்கென்று கண்ணீர் எட்டிப் பார்த்ததும் அவளைச் சமாதானப்படுத்துவது பெரும் பாடாய் இருக்கும் அவனுக்கு.

இருந்தாலும் மனத்துக்குள் ஏதோ குறுகுறுக்கும்.

ஏன் சொல்ல மறுக்கிறுள்!

ஆவல் மேலிட்டால்தான் 'ரெஞ்சீவி டிடெக்டிவ் ஏஜென்ஸி'யின் உதவியை நாடினுன். மாறு வேடம் புனைந்து கொண்டு கேட்டான்.

சுவர்க் கடிகாரம் ஐந்து மணி அடித்தது.

விருட்டென்று பரபரப்படைந்தான்.

'பாம் குரோவ்' ஹோட்டலில் ஜமீலாவை ஐந்தரை மணிக்குச் சந்திக்க வேண்டுமே?

அறையைப் பூட்டிக் கொண்டு அவசரம் அவசரமாய் வெளியேறினுன்.

கார் சீறிக்கொண்டு கிளம்பிற்று.



"மிஸ் சஸ் நி ரிப்போர்ட்" என்று மேஜை யின் மீது ஒரு மூடிய கவரை எடுத்து வைத்தான் சிரஞ்சீவி.

"தாங்க்ஸ்...." என்று கூறிய வண்ணம் அதை எடுத்துக் கொண்டார் அவர். அதே பத்து நாள் தாடி. அங்கும் இங்கும் நரை விழுந்த தலை. அரைக் கைச் சட்டை. ஒரு சாதாரணமான வேஷ்டி.

புறப்பட்டவரை ஒரு கணம் நிறுத்தினான் சிரஞ்சீவி.

"ஒரே ஒரு வார்த்தை. எங்க தொழிலிலே செண்டிமெண்டுக்கு இடம் இல்லை. இருந்தாலும் இந்தக் கேஸிலே என்னை அறியாது ஒரு பச்சாதாபம். ரிப்போர்ட்லே பின் குறிப்பு அப்படின்னு எழுதியிருக்கேன். எவ்வளவு சீக்கிரம் செயல் படுறீங்களோ அவ்வளவுக்கு நல்லது...."

சிரஞ்சீவிக்கு மீண்டும் நன்றி சொல்லிவிட்டு, வீட்டுக்கு விரைந்தார் வந்தவர்.

'விக்'கைக் கழற்றி விசிறி எறிந்துவிட்டு, அவசரம் அவசரமாய்ப் படிக்கலானான்.

"மிஸ் ஜமீலா, வயது இருபத்தொன்று. இந்தோனேஷியப் பெண். கூச்ச சுபாவமும் வெள்ளை மனமும் கொண்டவள். மனித மனத்தின் வக்கிரங்களையும், சதிகளையும் அறியாத குழந்தை மனம் உடையவள்.

ஆறு வயது இருக்கும்போது தாய் தந்தையருடன் இந்தியாவுக்கு வந்து பம்பாயில் குடியேறினாள். தந்தை ஒரு சாதாரண உத்தியோகத்தைத் தேடிக் கொண்டார். தாய் பம்பாயின் பகட்டு வாழ்க்கையில் மனம் மயங்கி நெறிகெட்டுப் போனாள். பல ஆண்களுடன் தொடர்பு கொண்டு வாழத் தொடங்கினாள். மனம் உடைந்த தந்தை மாரடைப்பில் மரணமானார். இவளுக்குப் பத்து வயது இருக்கும்போது இவளது தாய் ஒரு விபசார விடுதியில் கைது செய்யப்பட்டுச் சிறையில் மரித்துப் போனாள். அனாதையான ஜமீலா ஒரு அனாதை ஆஸ்ரமத்தில் வளர்ந்தாள். ஒரு கனவானின் தயவால் இந்தியன் ஏர்லைன்ஸில் ரிஸப்ஷனிஸ்டாகப் பணி புரியலானாள். இரண்டாண்டுகளுக்கு முன்னால் சென்னைக்கு மாற்றலாகி இங்கு வசித்து வருகிறாள்.

தற்போதைய நடவடிக்கைகள்: சென்னைக்கு வந்த ஜமீலா 'மதன்லால் அண்ட் கம்பெனி'யில் மானேஜராகப் பணி புரியும் நடராஜ் என்பவரோடு மிகவும் நெருக்கமாய்ப் பழகி வருகிறதாகத் தெரிகிறது. நடராஜைத் திருமணம் செய்து கொள்ள முடிவு எடுத்திருக்கிறாள். இந்த நடராஜ் மிகவும் மோசடிப் பேர்வழி. ஒழுக்கம் சிறிதும் இல்லாத ஸ்திரீ லோலன். இரண்டாண்டுகளுக்கு முன் பால் வினை நோய் வந்து மருத்துவ மனையில் ரகசியமாய்ச் சிகிச்சை செய்து கொண்டிருக்கிறான். அது மட்டுமல்ல. குதிரைப் பந்தயம், சீட்டு, குடிப் பழக்கம் என்று எல்லாவிதக் கெட்ட பழக்கங்களுக்கும் அடிமையாகிப்போன இந்த நடராஜ் கம்பெனிப் பணத்தை ஏராளமாய் மோசடி செய்திருக்கிறான். தனது ஆடம்பரச் சுகபோக வாழ்க்கைக்காகப் பல தில்லு முல்லுகளைச் செய்த இந்த நடராஜைப் போலீஸார் எந்தக் கணமும் கைது செய்யலாம். ரகசிய விசாரணை நடக்கிறது. தப்பிக்க வழியே இல்லை...

பின் குறிப்பு: மிகவும் நல்ல பெண்ணான இந்த ஜமீலாவை மோசக்கார நடராஜிடமிருந்து காப்பாற்றினால் பெரிய சேவைசெய்த பலன் உண்டு. கால தாமதம் செய்யாமல், உடனடியாகச் செயல்பட வேண்டும்.

படித்து முடித்தவனுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

'ஜமீலாவைப் பற்றி விசாரிக்கச் சொன்னால் என்னைப் பற்றி விசாரித்து என்னிடமே சொல்கிறான். ராஸ்கல். இதற்காகவா இரண்டாயிரம் ரூபாய் செலவழித்தேன்?...'

மனத்துக்குள் குமுறியவாறே தன் அறைக்குள் உலவியவனுக்குப் பளீரென்று பிடரியில் அறைந்தது மாதிரி ஒன்று உறைத்தது.

என்னைப் போலீஸ் கைது செய்யலாமாமே?

ஒருவேளை எல்லா விவரங்களையும் சேகரித்திருப்பார்களோ?

அப்படியானால் உடனடியாக ஊரை விட்டு ஓடிவிட வேண்டுமே?

நான் செய்திருக்கிற மோசடிக்கு, போலீஸ் கையில் சிக்கினால், சிறையில் கழிக்க என் வாழ்நாள் போதாதே?

கைகால்கள் பயத்தில் உதற அவசர அவசரமாய்த் தன் உடைமைகளைச் சேகரிக்கத் தொடங்கினான்.

வாசலில் அழைப்பு மணி ஒலித்தது.

பால்கனி வழியாக எட்டிப் பார்த்தான் ரகசியமாக. வீட்டு வாசலில் போலீஸ் ஜீப் நின்று கொண்டிருந்தது.

தெலுங்குமூலம் ஜி. சி. ஜீவி
தமிழாக்கம்: ஜெயரதன்

சிறையில் தம் மரணத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தார் சாக்ரடீஸ். அப்போது வேறொரு கைதி ஸ்டைஸிகோரஸின் மிகக் கடினமான பாடலொன்றைப் பாடுவதைக் கேட்டார். உடனே அக்கைதியிடம் போய், தமக்கு அப்பாடலைச் சொல்லித் தரும்படிகேட்டார். "சாகப்போகும் சமயத்தில் எதற்கு உங்களுக்கு?" என்று கேட்டார் கைதி. "இன்னும் ஒரு சமாசாரத்தை தெரிந்து கொண்டு நான் சாக விரும்புகிறேன்; அவ்வளவுதான்" என்றார் சாக்ரடீஸ்.

—க்ரீக் விசிக் பொயட்ரி என்ற புத்தகத்திலிருந்து
—ராமுசாமி



தமிழ் நாட்டு
மக்களுக்கும்
தரணியெல்லாம்
வாழ்ந்து வரும்
தமிழன்பர்களுக்கும்
தமிழ் புத்தாண்டு
வாழ்த்துக்கள்

உலகெங்கிலுமுள்ள தமிழர்களுக்கும் தமிழ் நாட்டு மக்களுக்கும், வளமான, குதூகலம் நிறைந்த புத்தாண்டு வாழ்த்தினை பாங்க் ஆப் தஞ்சாவூர் மனமகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறது.

தமிழ் நாட்டு மக்களின் விருப்பங்களை எல்லாம் "துந்துபி" ஆண்டு நிறைவு செய்யட்டும்.

உழவர் பெருமக்கள் உள்ளங்கள் எல்லாம் மகிழ்ச்சியுற, பயிர்கள் செழித்தோங்கி, நற்பலன்களாக, அள்ளிப் பெருகும் அறுவடைகளாக மிளிரட்டும். தமிழ் நாட்டு மக்கள், நல்ல ஆரோக்யமும், அமைதியும் நல்வாழ்வும் பெற்று, இறைவனின் புகழ்பாடி மகிழட்டும்.

பாங்க் ஆப் தஞ்சாவூர், மக்களின் சுபிட்சத்திற்காக ஆண்டாண்டு தோறும் பலதரப்பட்ட வங்கி அலுவல்களின் மூலம் தனது நற்பணியினை அளித்து வருகிறது.




# பாங்க் ஆப் தஞ்சாவூர் லிமிடெட்

(பதிவு அலுவலகம்): 1087 மிஷன் தெரு-தஞ்சாவூர்-613 001.

R. சொக்கப்பா
ஜெனரல் மானேஜர்

B.K. மாதவன்
சேர்மன்

VSK-BT 127

# நினைவெல்லாம் நித்யா

14

கதை : அபர்ணா நாயுடு

சித்திரம் :
















எல்லாத்தையுமே சொன்னா. உங்க செட்.அப்... போதை மருந்து கடத்தல்... ரோஸியோட பங்கு... இங்கே இருக்கிற ஒவ்வொருத்தரோட பங்கு... எல்லாத்தையுமே சொன்னா. அப்புறம்...


ஒவ்வொரு பொண்ணை போதை மருந்துக்கு அடிமையாக்கிறதும், அப்புறம் அவளை அடைய முயற்சி செய்யறதும்...


ஸோ... அந்த விஷயத்திலே நான் ரொம்ப ஸ்டிரிக்ட். பெண் விவகாரம்னு நீ சொல்றியே — அதை நான் அனுமதிக்கிறதே இல்லே.


நீ என்ன அனுமதிக்கிறது? உன் அனுமதி அந்த ஆளுக்குத் தேவையே இல்லே!
நீ யாரைச் சொல்றே?


இந்தக் கூட்டத்தோட உண்மையான தலைவனை. போன்லே விவரமா நித்யா சொல்லிட்டா. நீ இங்கே வெறும் திரை மாதிரி. அந்தத் திரைக்குப் பின்னாலே இருந்து செயல்படற அந்த ஆள் யாருன்னு எனக்குத் தெரியும்.
தொடரும்




# புவியெழுபது

**கீரன்**

இயற்கைப் பொருளை இறைவன் வடிவாய்க் கருதுவது சான்றோர் மரபு.

நாம் வந்தது முதல், போகிறவரைக்கும் போன பிறகும் நம்மைத் தாங்கிக்கொள்ளும் பூமியை 'பூமி மாதா', 'பூமாதேவி' என்றும் சிறப்பாக அழைப்பது வழக்கம்.

''பெற்ற தாய், பெறுவித்த தந்தை, பிள்ளைகள் எல்லாரும் மக்கள் என்ற சொல்லால் அழைக்கப் பெறுபவர்; அம்மக்களைத் தாங்கும் ஒரே தாய் இந்தப் பூமி.''

''புவனேசுவரிக்கு மேகம் விதானம், பனித் துளிகள் பன்னீர்; கடல் ஆடை, நதிகள் மேலாடை,'' இங்ஙனம் அவள் கொலு வீற்றிருக்கிறாள்.

''வருணன் நீராட்ட, வானத்துக் கதிரவன் இருளோட்ட, வாயு கவரி வீச, அக்கினி புகையூட்ட அரசு வீற்றிருக்கிறாள், புவி மகள்''.

''தேவிக்கு நீராடத் திருவுள்ளம் இல்லாவிட்டால், நெல்லெல்லாம் சாவி, நிலமெல்லாம் வறட்சி, நினைப்பெல்லாம் பசி.''

''நெஞ்சில் கவலைகள் நித்தம் பயிர்செய்து, இளைத்துக் கிடக்கும் ஜன சமூகத்தைத் தூஞ்சியாவது துயரம் தொலைக்கட்டும் என்று தூங்கச் செய்வதற்கே இரவு என்னும் போர்வையை எடுத்துப் போர்த்துகிறாள், பூமித் தாய்.''

''நெடுங்காலம் நிலத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் பூமித் தாய், பொய் கொலை முதலிய கொடுமைகளை மக்கள் செய்யும்போது நடுங்குகிறாள்; அதுதான் பூகம்பம்.''

''பொறுமைக்குப் பெயர் போன பூமித் தாய், தாய் மனம் புழுங்கப் பிள்ளைகள் மறைத்துச் செய்யும் செயல்களைக் கண்டு உள்ளம் குமுறுகிறாள்; அது எரிமலை.''

''ஒரு வித்தை அவளிடம் போட்டு வைத்தால், ஒன்றை நூறாக்கித் தருகிறாள். தனக்குப் பதிலாகப் பசுவைப் படைத்துத் தாங்கிப் பால் அளிக்கிறாள்.''

''சில குழந்தைகள் ஆத்திரம் வந்தால் தாயிடம், ''நீ என் அம்மா இல்லை'' என்று பேசுகின்றன. அதற்காகத்தாய் பிள்ளையை வெறுத்துவிடுகிறாளா? இப்படிப் பேசிய பிள்ளையின் வாயில் உணவை ஊட்டுகிறாள் தாய். அதுபோல ''இந்த உலகம் பொய்'' என்று பேசும் ஞானப் பிள்ளைகளுக்கும் உணவளித்துப் போற்றுகிறாள் பூமித் தாய்.''

''பூமியிலிருந்து ஒரு பொருளை மேல் நோக்கி எறிந்தால், அதைப் பூமி உடனே இழுத்துக் கொண்டு விடுகின்றதே; தான் பெற்றது தன்னைப் பிரிந்தால் தாய் எப்படிப் பொறுப்பாள்? அதனால் இழுத்துக்கொள்கிறாள்.''

''தாயாகிய பூமியின் இவ்வருஞ் செயலைக் கண்டே கருதி நான்மறை முழுவதினும் மேம்படத் தொகுத்த புருஷ சூக்தம், பரஞ்சுடரையும் விட மண்மகள் பெரியள் எனப் போற்றுகிறது.''

''பிறந்த நாள் முதலாகக் 'கண் ஆயிற்று? கால் ஆயிற்று?' என்று பார்த்து, தன்னையே தியாகம் செய்து கொள்ளும் தாயின் இரு வடிகளைத் தொட்டுத் தலையில் வைத்துக் கொள்ள வேண்டாமா? அதனால்தான் சான்றோர்கள் நெற்றியில் திருமண் காப்பு இட்டுக் கொள்கின்றனர்.''

''பிறந்த நாள்தொட்டுப்
பெற்றதாய் தன்னையே பெறுசேய்
சிறந்த காப்பு எனச்
சிந்தையில் தெளிந்தது தெரிந்தாம்;
மறந்து இலாமல் இவ்
வாய்மையை மறைஎடுத்து உரைப்ப
நிறந் தவாத மண்
காப்பிடுகிற்பர்கள் நன்னெறியோர்''

---

கொடுமையான சொல் வாழ்க்கையை முறிக்கிறது.

கசப்பான சொல் வெறுப்பை வளர்க்கிறது.

முரட்டுத்தனமான சொல் சிரிப்பை அழிக்கிறது.

பணிவான சொல் செல்லும் பாதையை எளிமையாக்குகிறது

காலத்திற்கேற்ற சொல் கவலையைக் குறைக்கிறது

அன்பான சொல் மருந்தாக இருப்பதோடு, வாழ்த்தவும் செய்கிறது!

Wisdom-லிருந்து
சேலம் சந்திக்கனல்

"உண்டியலைத் திறந்து பார்த்தா... ஒரே தேளும், பூரானும், பாம்புமா இருக்கும்..."

"ஐயையோ! அப்படியானா திறக்கவே பயமா இருக்குமே?"

"அதுதான் இல்லே! தங்கத்தாலே தேளு, வெள்ளியிலே பூரான், அப்புறம் தாமிரத்திலே பாம்பு - இப்படியெல்லாம் செய்து போட்டிருப்பாங்க...!"

-பெ. கலாசாமி




"புறத்தே இருக்கும் இறைவன் நம் அகத்தும் இருக்கிறான், அண்டத்தில் உள்ளது பிண்டத்தில், உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம். அதனால் புறத்தே இருக்கும் கோயிலையும் சுற்றி வரவேண்டும். நம்மை நாமே சுற்றிக் கொள்ள வேண்டும். நம்மை நாமே சுற்றிக் கொள்வது "ஆத்ம ப்ரதட்சிணம்." இக்கருத்தை நமக்கு உபதேசிக்கவே பூமித்தாய் தன்னைத் தானே ஒருமுறை சுற்றிக் கொண்டு, சூரியனையும் சுற்றி வருகிறான்."

" 'இருபத்தொரு தலைமுறை அரசர்களை அழிப்பேன்' எனப் பரசுராமன் ஏன் சபதம் செய்தான்? அரசர் தாம் பூமி மாதாவுக்குப் பிள்ளைகள் என்று எண்ணவில்லை; தாய் என்று மதிக்கவில்லை; தாயைப் பாதுகாக்கும் மக்கள் என்று எண்ணாமல் தரைக்கு அதிபதி என்று கருக்கி வாழ்ந்தனர்; அதனால் தீயரை வேர் பிடுங்கித் தீர்க்க."



சேது சமஸ்தானம் மகா வித்வான், பண்டித பூஷணம் திரு ரா. இராகவையங்கார் மகா பெரிய பண்டிதர். தமிழுலகம் உள்ள வரை அவர் பெயர் நிற்கும். அவர் "புவியெழுபது" என்று பூமித் தாயின் பெருமைகளை எழுபது பாடல்களில் பாடியுள்ளார். அவற்றுள் சில மேலே கண்ட கருத்து முத்துக்கள், மண் மனிதனைப் பொன்னாக்கும் தெய்வச் சிந்தனைகள்.





✖ பாலகுமார் தவே



✖ குரோஸ்டாரு



✖ சங்கர்

சென்னை மாநிலக் கல்லூரி மாணவர் பாலகுமார் தவே.

அண்மையில், அலகாபாத், வாரணாசி சென்று அகில இந்திய இசைப் போட்டியில் கலந்துகொண்டு முதல் பரிசை மேற்கத்திய இசை, இந்துஸ்தானி இசை, மெல்லிசை மூன்றிலும் வாங்கியதுடன் தலைசிறந்த வாத்திய இசை வல்லுனர் என்ற பட்டத்தையும் பெற்றார். பத்து வாத்தியங்கள் வாசிக்கும் பாலகுமார் உடல் ஊனமுற்றவர் எனில் நம்புவதே சிரமமாக இருக்கிறதல்லவா?

● குரோஸ்டாரு ஆல்விச் இந்திய மொழிக் கவிதைகள் பலவற்றை யுகோஸ்லேவிய வாசகர்களுக்கு அந்த மொழி மூலம் அறிமுகப்படுத்தும் பணியைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

ஐம்பது வயதை எட்டிப் பிடிக்கும் இந்த அம்மையார் பெல்கிரேட் சர்வ. கலாசாலையின் எம். ஏ. பட்டதாரி.

சிறுகதை, நாவல்கள் பலவற்றை எழுதியிருக்கும் இவர், பல நாடுகளில் பாராட்டுப் பெற்றிருக்கிறார். சில நாவல்கள் இருபத்தி நான்கு உலக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. சில நாவல்கள் திரைப் படங்களாகி யிருக்கின்றன.

பஞ்சாபி, ஹிந்தி முதலிய மொழிகளில் இவர் எழுத்துக்கள் பிரசுரமாகியிருக்கின்றன.

நூற்றி இருபத்தி ஆறு பாரத நாட்டுக் கவிஞர்களின் இருநூற்று இருபது கவிதைகளை யுகோஸ்லாவிய மொழியில் முந்நூற்றி எண்பது பக்கங்களில் வெகு அழகான புத்தக வடிவில் கொண்டு வந்திருக்கிறார். எல்லாம் ஆங்கில வழி மொழி பெயர்ப்பு.

கவிதைத் தொகுப்பு, யுகோஸ்லேவிய மொழியில் தாங்கி நிற்கும் தலைப்பு ANTOLOGIJA SAVREMENE POEZIJEINDIJE

—கோ. சு.

● வீணை வித்வான் பாலசந்தர் ராஷ்டிரபதியிடம் மார்ச் 20ம் தேதி பத்மபூஷண் பட்டத்தைப் பெற்றுக் கொண்டதோடு அன்றிரவே டோக்கியோவுக்குப் பயணமானார். ஜப்பானிய அரசு ஏற்பாடு செய்த சர்வதேச இசை மகாநாட்டில் பங்கு கொண்டார். இந்திய சாஸ்திரீய சங்கீதம்



✖ பாலசந்தர்

பற்றிச் சொற்பொழிவாற்றியதுடன் ஜப்பானியக் கலைஞர்கள் முன்னிலையில் இரு வீணைக் கச்சேரிகளும் நிகழ்த்தினார். உடன் சென்ற மிருதங்க வித்வான் ஆர். ரமேஷ்.

இதன் பின் ஒஸாகா—கோபி வாழ் இந்தியர்கள் மனம் மகிழ ஒஸாகாவிலும் ஏர்-இந்தியா ஆதரவில் ஒரு கச்சேரி செய்து திரும்புகிறார்.

● சென்னை ஐ.ஐ.டி., கல்லூரியில் பி. டெக் மெகானிகல் இன்ஜினியரிங் இறுதி ஆண்டு படிக்கிறார் சங்கர்.

சங்கர் ஓர் உலக சாதனையை ஏற்படுத்தியுள்ளார். அயல் நாட்டுப் பட்டதாரிகள் அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் சேர வேண்டுமானால் அதற்கு முதலில் ஒரு பரீட்சை எழுதித் தேற வேண்டும். ஜிமாட் என்ற இந்தத் தேர்வில் உலகிலேயே முதலாவதாக வந்து சாதனை செய்துள்ளார் சங்கர். பல உலக நாடுகளிலிருந்து இளைஞர்களும் யுவதிகளும் பங்கு கொண்ட பட்டதாரிகளுக்கான நிர்வாக நுழைவுத் தேர்வில் (GMAT) 800க்கு 800 மதிப்பெண்கள் பெற்றுள்ளார். பாஸ் மார்க் இருநூறு மதிப்பெண்கள்.

விடைத் தாள்களை அமெரிக்காவில் கம்ப்யூட்டர்கள் பரிசீலனை செய்து முடிவுகள் அறிவிக்கின்றன.

புத்தகப் புழு போலும் என்று எண்ணுகிறீர்களா? அதுதான் இல்லை. உஸ்தாத் காதிம்கானிடம் இந்துஸ்தானி சங்கீதமும், பிருந்தாவிடம் கர்நாடக சங்கீதமும் பயின்றுள்ளார். பிடித்த பொழுதுபோக்கு: குதிரைச் சவாரி.

—''சிக்கி''

சும்மா செய்யாதீர் பணியாரம்
சுட்டுத் தருவீர் மணியாக




பஜாஜ் அவன்கள் இருந்தால் அன்றாட உணவே அறுசுவை விருந்தாகும். முறுமுறுப்பாக்கலாம். சுடலாம். பொரிக்கலாம். கரகரப்பாக்கலாம். தொல்லே சிறிதுமின்றி எதையும் படைக்கலாம்... அதுவும் மிகமிக எளிதாக. எடுத்துப் பிடிக்க நான்கு வசதியான கைப்பிடிகள் இருக்கின்றனவே.

தேர்ந்தெடுக்கப் பலரகங்கள் உண்டு பஜாஜ் அவன்களிலே. சதுரவடிவம், வட்ட வடிவம்... முழுமையான குக்கிங் ரேஞ்ஜ். அனைத்தும் கடுமையான ஐஎஸ்ஐ விதிகளின்படி தயாரிக்கப்பட்டவை. பஜாஜின் சொந்த சீரிய தரத்திற்கும் கட்டுப்பட்டவை. அதோடு முதல் தரமான விற்பனைக்குப்பின் சேவைக்கென இந்தியாவெங்கும் 3500க்கும் மேற்பட்ட விற்பனையாளர் அணியைப் பின்பலமாகக் கொண்டது. அப்ளையன்ஸின் முடிசூடா மன்னனாக பஜாஜ் விளங்குவதன் காரணம் இப்போது புரிகிறதல்லவா!

சிறந்ததையே பஜாஜ் ·
வாங்குவீர் வாங்குவீர்

# நாளை என்பது இல்லா[illegible]

ஜயேந்திரன்

ரூ 100/= பரிசு பெற்ற விஞ்ஞானச் சிறுகதை.

பூமிக்கு அருகே உள்ள ஏதோ ஒரு கிரகம்.

''ராஷ்மி டியர்... கொஞ்சம் கண்ணைத் திறந்து பாரேன். யாரை அழைச்சிட்டு வந்திருக்கேன் பார்...''

—அணிந்திருந்த நைட் கவுன் அரை குறையாகப் பிரிந்திருக்க, கட்டிலின் மேல் தலையணையை அழுத்தி மார்பில் பிடித்தவாறு படுத்திருந்த ராஷ்மியின் முகத்தை லேசாகத் திருப்பினான் நிதின்.

கண்களை மூடியவாறே ''நோ... ஏன் பாதியிலேயே எழுந்து போயிட்டீங்க...... பார்க்க மாட்டேன்'' என்று கொஞ்சலாய்ச் சிணுங்கினாள் ராஷ்மி.

குனிந்து தன் முகத்தை அவள் முகத்தோடு உரசிய நிதின்... அவள் கன்னத்தில் பட்டும் படாமலும் உதட்டை அழுத்தினான்.

சற்றே முகம் மலர்ந்த ராஷ்மி, வேண்டுமென்றே முகத்தைத் திருப்பிக் கொண்டு கோபம் கொண்டவள் போல் நடித்தாலும் சிறிதே கண்களைத் திறந்து ஓரக் கண்ணால் பார்த்தாள்.

அவளையும், அவள் கொஞ்சலையும் ரசித்தவாறு லேசான புன்னகையுடன் நிதின் காட்சி தந்தான். அவனுக்குப் பின்னால்—

ஆஜானுபாகுவாய், கம்பீரமாய்—

என்ன அது?

சட்டென்று கண்களை அகல விரித்தாள் ராஷ்மி. அதுதான் சமயமென்று அவளை அணைத்தவாறு உட்கார வைத்தான் நிதின்.

''யாரை அழைச்சுக்கிட்டு வந்திருக்கேன் பார்த்தியா? மீட் மிஸ்டர் த்ரீ டூ செவன்... இவன்தான் என் பி. ஏ. இனிமேல் நம் வீட்டில் பெருக்குவதிலிருந்து சமைப்பது, துணி துவைப்பது, என் ஆராய்ச்சிக்கு 'ஹெல்ப்' செய்வது வரை எல்லா வேலைகளையும் இவனே செய்வான். யூ கேன் டேக் கம்ப்ளீட் ரெஸ்ட்'' — செல்லமாய் அவளின் காது ஓரத்தில் வழிந்துவிட்டிருந்த மயிர்க் கற்றையைப் பின்னுக்குத் தள்ளினான்.

''க்ளாட் டு மீட் யூ மேடம்...'' — கையை அப்பா! கையா அது... நீட்டினான் 327.

ராஷ்மிக்குப் பயமாயிருந்தது. கையை நீட்டினாள். அந்த இரும்புக் கைகள் அவளுடைய உள்ளங் கையை லேசாய் வருடிற்று. உடல் முழுவதுமாய், 'ஷாக்' அடித்தது போலிருந்தது.

''ஓகே... 327... போய் எங்களுக்கு 'ப்ரேக்ஃபாஸ்ட்' ரெடி பண்ணு'' — ஆணையிட்டான் நிதின்.

'டக் டக்'கென்று ராஜ நடையில் சென்றான் 327 — இயந்திர மனிதன்.



ஏறக்குறைய அந்த 'செஞ்சுரி'யில் 'ரோபா' என்கிற இயந்திர மனிதர்கள் எல்லாக் கிரகங்களையும் ஆக்கிரமித்திருந்தார்கள். தெருவைச் சுத்தம் செய்வதிலிருந்து 'சூப்பர் ஜெட்'டில் உலகைச் சுற்றி வருவது வரை எங்கும் 'ரோபா' மயமாக இருந்தது.

ஒவ்வொரு வீட்டிலும் 'ரோபா'வை வேலைக்கு அமர்த்திக் கொள்வது என்பது பெரிய 'ப்ரஸ்டீஜ்' 'இஷ்யூ'வாக ஆகிவிட்டிருந்தது.

'ரோபா' சாதாரண மனிதனைப் போல் பன்மடங்கு துரிதமாய் வேலையைச் செய்து முடிப்பான். அவனுக்கு நிகர் அவனே.

''பாஸ்... ப்ரேக்ஃபாஸ்ட் ரெடி... யூ கேன் கம் அண்ட் ஸிட்.''—

வாசலில் வந்து நின்று, ராஷ்மியின் நிலை குலைந்த ஆடையினூடே ரசித்தவாறே, மெதுவாய்ப் பேசினான் 327.

''எப்படி?'' என்கிற மாதிரி ராஷ்மியைப் பார்த்து லேசாய்ச் சிரித்தான் நிதின்.

'ரோபா'வின் எக்ஸ்ரே பார்வையில் மருண்டு போயிருந்தாள் ராஷ்மி.

'எக்ஸலண்ட், சூப்பர்ப்' என்று ராஷ்மியும் நிதினும் வாயாரப் புகழ்கிற மாதிரி துளிக்கூட பிசிறு தட்டாமல் 327 எல்லா வேலைகளையும் செய்தான். அவனுடைய வேகம் அவர்களை வியப்படையச் செய்திருந்தது.

'லேபி'ல் பெரியதான லென்ஸில் கண்ணைப் பதித்து வானத்தை ஆராய்ந்தவாறு இருந்தான் நிதின்.

நள்ளிரவு—

இருட்டான வானத்தில் ஆங்காங்கே நட்சத்திரங்களும், கிரகங்களும் சிறிய பொம்மைகளாய்க் காட்சி பளித்தன.

''மிஸ்டர் நிதின்....''



வீணை நாதமென இழைந்த குரல் வந்த திசையை நோக்கித் திரும்பினான்.

''நீயா?''

''யூ... நர்த்தகி... ஏன் வந்தே?''

''ஓ.கே... அதான் வந்தாச்சே... வந்த விஷயத்தைப் பத்திப் பேசறேன். நீ புதுசா ஒரு கிரகத்தைக் கண்டு பிடிச்சிருக்கியாமே?''

''எஸ்.... உனக்கென்ன?''

''அதுக்கு உன் பேரைக்கூட வைக்கப்-போறயாமே?''

''எஸ்... ஹொய் நாட்?''

''அந்த ரிசர்ச் பத்தின பேப்பர்ஸ் எல்லாம் இப்ப எனக்கு வேணும்.''

''ஹொய்?''

''நீ என் கூட வாழ்ந்தப்ப எனக்கு ஒரு பரிசு கொடுத்தியே, இதோ வயத்திலே வளருதே... அதுக்கான 'காம்பன்ஸேஷன்' ''

''அதை அழிச்சுடேன்!''

''நோ. இதை வச்சு உன்னை 'ப்ளேக் மெயில்' பண்ணப் போறேன். என் ப்ரண்ட் ஹஸ்பண்ட் டாக்டர் பட்டவர்த்தன் உன் பேப்பர்ஸை யெல்லாம் அடுத்த மாதம் நடக்கிற விஞ்ஞானிகள் கான்ஃபரன்ஸிலே 'சப்மிட்' பண்ணனும். பரிசும் பெறணும். அந்தக் கிரகத்துக்குக் கூட அவர் பெயர் தான் வைக்கணும்.''

''ஷியர் ப்ளேக் மெயில்... நான்தான் அந்தக் கிரகத்தைக் கண்டு பிடிச்சேன். ஹொய் தட் ப்ளடி....''

''நிதின்.... டாக்டர் பட்டவர்த்தன் உன்னைவிட இளமையானவர். அழகானவர், அதுவும் என் கணவர். ஹி ஒன்லி ஷுட் ஷைன்.''

''நெவர்.''

''அப்போ இந்த ஸையன்ட் ஊசிக்குப் பலியாகத் தயாராக இரு... இன்னும் ரெண்டு நாளிலே வருவேன். பி ரெடி வித் த பேப்பர்ஸ்... உன் இன்றைய மனைவிக்கு என் அனுதாபங்கள்...''

—அவள் போயேவிட்டாள்.

''யார் வந்தாங்க? என்ன விஷயம்?''

ராஷ்மி உள்ளே வந்தாள்.

''நீ எதுக்கு இங்கே வந்தே? ஒண்ணும் இல்லே... மாஜி கேர்ள் ஃப்ரெண்ட் வந்திருந்தா... தட்ஸ் ஆல் ரைட்... வீட்டுக்குப் போய்த் தூங்கு டியர்....''

புன்னகையோடு சென்றாள் ராஷ்மி.

'என்ன செய்வது' என்ற யோசனையோடு 'ரிஸர்ச் டேபிளி'ல் சாய்ந்துவிட்டான் நிதின்.

இரண்டு நாட்கள் முடிந்தே போயிற்று.

நிதின் விழித்துக் கொண்டான்.

'டேபிலே'யே இரண்டு நாட்களாய்த் தூங்கிக் கொண்டிருந்து விட்டான் போலும்.

''மிஸ்டர் நிதின்...''

நர்த்தகியோ?

''நோ.... ராஷ்மி.''

''டியர்.... ராஷ்மி டியர்....'' — எழுந்து அவளைக் கட்டித் தழுவப் போனான்.

''டோன்ட் கம் நியர்... அந்தக் கிரகம் பத்தின ரிசர்ச் பேப்பர்ஸெல்லாம் எங்கே?''

''எதுக்கு உனக்கு ராஷ்மி?''

''நாட் ஃபார் மீ... ஃபார் மை பிரஸண்ட் ஹஸ்பண்ட் டாக்டர் பட்டவர்த்தன்....''

''ராஷ்மீ.,..'' அந்தக் கிரகமே அதிர் வுறப் போலக் கத்தினான் நிதின்.

''ஹாம் பி ரெடி....'' என்றவள்,

''த்ரீ டு ஸெவன்'' என அழைத்தாள்.

த்ரீ டு ஸெவன், பிரம்மாண்ட வடிவத் தோடு வந்தான். அவன் கையில் தலைவிரி கோலமாய், உடம்பெல்லாம் கருஞ்சிவப்பாய் மாறி நர்த்தகி மரணமடைந்திருந்தாள்... அவள் தலை தொங்கியிருந்தது.

''327'' — கத்தினான் நிதின்.

நிதினைத் திரும்பிப் பார்க்காமலேயே 327 கட்டளைக்காக ராஷ்மியைப் பார்த்துக் கண் ணடித்தவாறிருந்தான்.

கண்ணசைத்தாள்.

தன் கையிலிருந்த பிணத்தை நிதினின் காலடியில் வீசிவிட்டு, ''நெக்ஸ்ட்'' என்றான் ராஷ்மியைப் பார்த்தவாறே 327.

''ஃபினிஷ் ஹிம்....''

''எத்தனை யுகங்கள் மாறினாலென்ன... எத்தனை விஞ்ஞான மாற்றங்கள் வந்தாலென்ன... மனுஷன் ஒரு தன்னலப் பேய் தான்....'' என்ற ஃபிலாஸபியைக் கடைசியாக உதிர்த்த நிதினின் குரல்வளை மெள்ள மெள்ள 327ன் இரும்புக் கைகளுக்கு இரையாகிக் கொண்டிருந்தது.

ராஷ்மியின் வெற்றிச் சிரிப்பு அவன் பாதி செவியில் படும்போது, அவனுக்கு முடிவு வந்து விட்டிருந்தது.

வால்பாறையிலிருந்து 5 கி. மீ. தூரத்தில் சோலையார் ஸ்ரீ ஸித்தி விநாயகர் கோயில் தென்இந்தியாவில் பிர்லாவிற்குச் சொந்தமான தேயிலை எஸ்டேட்டில் உருவாக்கப்பட்டுள்ளது. விநாயகர் உருவம் ஒரே சலவைக்கல்லால் ஆனது. சலவைக்கல் விநாயகர் தமிழகத்தில் வேறு எங்கும் இல்லை. சுமார் ஐந்தடி உயரம்.

காசி விசுவநாதர் சந்நிதியில் லிங்கத்தின் மேல் இருபத்து நான்கு மணி நேரமும் தண்ணீர் சொட்டும்படி செய்யப்பட்டுள்ளது. அப்படிச் செய்தால் நாட்டில் மழை பெய்து சுபிட்சம் ஏற்படுமாம்!

-வெ. சியாமளா ரமணி



# வெப்பத்தால் நீங்கள் வலுவிழந்து வாடுகையில்...



உங்களுக்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-Dயின் புதிய பெயர்.

உட்கொள்ளுங்கள் **க்ளுகோன்-டி**®

**அதிக சக்தி—உங்களுக்குத்தேவையான போது.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்க செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்து விடும் உங்கள் சக்தி யெல்லாம். அப்போது தான் உங்களுக்குத் தேவை புத்துணர்ச்சி தரும் குளுமையான க்ளுகோன்-டி. அது உங்களுக்கு அதிக சக்தி தருகிறது-உங்களுக்குத் தேவையான போது.

30 ஆண்டுகட்கும் மேலாக இலட்சக் கணக்கானோர்க்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-டி யின் புதிய பெயர் தான் க்ளுகோன்-டி. எந்த பானத்திலும் அதைக் கலந்து அருந்தலாம்; பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளுகோன்-டி; மேற்கொண்டு தத்தம்பணிகளில் அவர்கள் ஈடுபட- விளையாட்டிலும், வேலையிலும். க்ளுகோன்-டி— உங்களுக்கு வழக்கமான அதே பச்சை உறையிலே கிடைக்கிறது.






வைட்டமின்-டி மற்றும் கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் கொண்டு வளமூட்டிய அசல் க்ளுகோஸ் பவுடர்—**க்ளாக்ஸோ** அளிக்கிறது.

HTB-GLL-6737 TL

நான்கு மணிவரையில் கூட நம்பிக்கை இருந்தது. நிச்சயதார்த்தம் ஐந்து மணிக்குத்தான். ஃபோனில் சொல்வதாயிருந்தால் கூடச் சொல்லியிருக்கலாம். பக்கத்து வீட்டு ஃபோன் நம்பர் தம்பிக்குத் தெரிந்ததுதானே! ஹோட்டலிலிருந்து ஃபோன் பண்ணுவதில் என்ன சிரமம் இருக்க முடியும்?

இனிமேல் எதிர்பார்ப்பதில் பிரயோசனமில்லை. பிற்பகல் லீவு போட்டுவிட்டு வீட்டிலேயே உட்கார்ந்திருந்தது வீணாகி விட்டது. அழைக்க வேண்டாம் என்று தம்பி முடிவு செய்திருந்தால்? அப்படித்தான் இருக்கும். காரணம்? இவ்வளவு முக்கியமான சுப காரியத்தில் அண்ணாவும் மன்னியும் பங்கெடுத்துக்கொள்வது அவசியம் என்று தம்பி நினைக்கவில்லையா?

பார்க்கப் போனால் அந்த இடத்தில் சம்பந்தம் செய்துகொள்ளலாம் என்று தம்பிக்குக் கோடி காட்டியதே அவன்தான். பேச்சு வாக்கில் ஆபிஸில் யாரோ சொன்னார்கள். உடனே எல்லா விவரங்களையும் விசாரித்துத் தெரிந்து கொண்டு, விலாசத்தையும் கேட்டு வாங்கி, தாமதமில்லாமல் பம்பாய்க்கு டிரங்கால் போட்டுத் தம்பியோடு பேசி விவரங்கள் அனைத்தையும் குறித்துக் கொள்ளச் சொன்னான். அப்புறம் அதைப் பற்றித் தம்பியிடமிருந்து எவ்விதத் தகவலும் இல்லாதிருக்கவே அந்தச் சம்பந்தம் அவனுக்கு ஒத்து வரவில்லை என்றுதான் எண்ணியிருந்தான்.

அதே பிள்ளை வீட்டில்தான் இன்று நிச்சயதார்த்தம் நடக்க இருக்கிறது. ரவியும் ராஜியும் இதற்கென்றே பம்பாயிலிருந்து சென்னைக்குப் பறந்து வந்திருக்கிறார்கள். சோழா ஹோட்டலில் இறங்கியிருக்கிறார்களாம். இறங்கிவிட்டுப் போகட்டும். இவன் இருப்பது திருவல்லிக்கேணி ஒக்கிடத்தில்தானே! ஹோட்டலில் கிடைக்கக் கூடிய வசதியை இங்கு எதிர்பார்க்க முடி



யாதுதான். ஆனால் அதற்காக அண்ணா வையும் மன்னியையும் நிச்சயதார்த்தத்துக்கு அழைக்காமல் ஒரேயடியாக ஒதுக்கி விட வேண்டியதில்லையே!

ஒருவேளை சம்பந்தம் செய்து கொள்ளப் போகிற இடம் பெரிய இடமாகையால் அண்ணாவும் மன்னியும் அந்த இடத்துக்குப் பொருத்தமாக இருக்க மாட்டார்கள் என்று தம்பி நினைத்து விட்டானோ!

அப்படி ஒரு தாழ்வு உணர்ச்சிக்கு ஏன் இடம் கொடுக்க வேண்டும் என்று தன்னைத் தானே நொந்து கொண்டான் ரகு. வயதில் மூத்தவன்தான். ஆனால் வாழ்க்கையில் பின்தங்கி விட்டான். முப்பது வருஷங்கள் ளாக்காக உழன்றும் இன்னும் ஹெட் ளார்க் நாற்காலியைக்கூட எட்டிப்பிடிக்க முடியவில்லை. ரவிக்கு ராஜ யோக ஜாதகம். எடுத்தஎடுப்பிலேயே பெரிய உத்தி யோகத்தில் சேர்ந்து இப்போது ஒருபிர சித்தமான தொழில் நிறுவனத்தின் ஜெனரல் மானேஜராக உயர்ந்திருக்கிறான். ஒரே பெண் ணுக்கு நிச்சயதார்த்தம். எத்தனையோ பெரிய மனிதர்களை அழைத்திருப்பான். அவர் களுக்கெல்லாம் ஈடு கொடுக்கும் அந்தஸ்து அண்ணாவுக்கு இருக்க வேண்டாமா?

''அங்கிள்! உங்களுக்குப் போன்!'' — பக் கத்து வீட்டுச் சிறுமி மாலா தகவல் கொடுத்து விட்டு நிற்காமல் ஓடி விட்டாள். ஆவல் பரபரப்புடன் ரகு பக்கத்து வீட்டுக்கு விரைந் தான். மணி நாலரை ஆகிவிட்டது. பரவா யில்லை. அரை மணிக்குள் வத்சலாவை அழைத்துக் கொண்டு அங்கே போய்ச் சேர்ந்துவிட முடியாதா என்ன?

''ஹலோ!''

மறு பக்கத்திலிருந்து ஒலித்த குரலைக்கேட்ட துமே ரகுவின் முகம் விழுந்து போயிற்று. பேசியது ரவி இல்லை. ஆபீஸ் நண்பன் ஆராவமுது.



# அவரவர் உலகம்...

உமா சந்திரன்

''நாளைக்கு லீவு போட்டிருக்கேன். என் மேஜை மேலே ரெண்டு பெண்டிங் ஃபைல் வச்சிருக்கேன். நாளைக்கே மானேஜருக்குப் போயாகணும். ட்ராஃப்ட் எல்லாம் போட்டு ரெடியா வச்சிருக்கேன். டைப் பண்ணி ரெண்டு ஃபைலையும் மானேஜருக்கு அனுப் பிச்சிட்டியானா உபகாரமா யிருக்கும். உன் னைத்தான் நம்பி யிருக்கேன்...''

ரகுவுக்கு எரிச்சலான எரிச்சல். பல்லைக் கடித்துக் கொண்டு பேசாமல் இருந்தான்.

''என்ன சரியா?''

''உம்... உம்...''

''ரொம்ப தாங்க்ஸ்!'' என்று கூறி ஆரா வமுது போனை வைத்து விட்டான்.

பக்கத்திலேயே நின்றிருந்த சிறுமி மாலா வுக்கு நன்றி தெரிவித்துவிட்டு ரகு வீட் டுக்குத் திரும்பியபோது அவன் மனைவி வத்சலா புறப்படத் தயாராக உள்ளே யிருந்து வந்தாள்.

''நீங்க ஃபோன் பேசிட்டு வரதுக்குள்ள நான் ரெடியாயிட்டேன் பாருங்க!'' என்றாள் பெருமையுடன்.

''ஃபோன் பண்ணினது ரவி இல்லே. ஆபீஸ் நண்பன் ஆராவமுது.''

''அப்படியா? அதனால் என்ன? உங்க தம்பிக்கு ஆயிரம் வேலை. ஃபோன் பண்ண டயம் இருந்திருக்காது. அதுக்காக நாம விட்டுக் குடுக்கலாமா? கட்டாயம் போய்த் தான் ஆகணும்.''

''அழைப்பு இல்லாமல் அங்கே போய் நின்னா கவுரவமாகவா இருக்கும்?''

''என்ன கௌரவக் குறைச்சல்? 'ஏன் வந்தேன்னு' யாரும் கேட்கப்போறதில்லையே! சொந்த அண்ணா மன்னி உள்ளூர்லேயே இருந்துண்டு அங்கே தலை காட்டாம இருந் தாத்தான் பொல்லாப்பு!'' என்றாள் வத்சலா.

வாழ்க்கை நடைமுறைகளுக்கு வத்சலா வைத்திருக்கும் அளவுகோல்களே அலாதி.

இந்தச் சந்தர்ப்பத்தில் அவளுடைய மனத்தை ரகுவால் புரிந்து கொள்ள முடிந்தது. தனக்குச் சந்தான பாக்கியம் இல்லே என்ற குறையை அவள் என்றுமே பாராட்டியதில்லே. மைத்துனர் மகளுக்கு நடக்கும் சுப காரியத்தில் பங்கு கொண்டு மன நிறைவு காண நினைக்கிறுள். இந்த வாய்ப்பை அவளுக்கு ஏன் மறுக்க வேண்டும்?

நுங்கம்பாக்கம் ஸ்டர்லிங் ரோடு பகுதியில் விஸ்தாரமான தோட்டத்தின் நடுவே அமைந்த பெரிய பங்களா. காம்பவுண்டுக்குள்ளும் .வெளியே ரோட் ஓரமாகவும் நிறையக் கார்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. ஆட்டோவைக் காம்பவுண்டுக்கு வெளியிலேயே நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டான்.

''உள்ளேயே போய் இறங்கி இருக்கலாமே! இங்கிருந்து நடந்து போனு நாம பஸ்ஸில் வந்தோம்னு நினேக்க மாட்டாளா?'' என்றுள் வத்சலா.

''ஆட்டோவிலே போய் இறங்கிளுத்தான் அப்பட்டமாய்த் தெரியும். நடந்து போனு காரை வெளியில நிறுத்திட்டு வரோம்னு நினேச்சுப்பாங்க'' என்றுன் ரகு.

ஹாலிலும் வராந்தாவிலும் அந்தஸ்துடால் விசும் பெரிய மனிதர்கள் பலர் குழுமி இருந்தார்கள். உட்கார வசதியான இடம் கிடைக்காதவர்கள் தோட்டத்துச் செடிகளே ரசிப்பது போல் நடித்துக் கொண்டிருந்தனர்.

மணி ஐந்தைத் தாண்டியாயிற்றே! நிச்சயதார்த்தம் இன்னும் ஆரம்பிக்கவில்லேயா?

உள்ளே போவதா வேண்டாமா என்று தயங்கினுன் ரகு. ஆனுல் வத்சலா சிறிதும் தயங்கவில்லே. சர்வ உரிமையுடன் ஹாலுக்குள் மறு கோடியில் இருந்த பெண்கள் கூட்டத்தை நோக்கி நடை போட்டாள்.

ஹாலில் அமர்ந்திருந்தவர்களே நோட்டம் விட்டான் ரகு. அந்தக் கூட்டத்தில் யாரைச் சம்பந்தி என்று அடையாளம் கண்டு




கொள்வது? ஆனுல் ரவி எங்கே: அவன் வந்திருப்பதாகவே தெரியவில்லேயே!

ஒரு மூலேயில் சிறிய ஸ்டூல் ஒன்று கேட்பாரில்லாமல் கிடந்தது. அதில் போய்க் குறுகினுற்போல் உட்கார்ந்து கொண்டான் ரகு. அவன் உள்ளே வந்ததையோ உட்கார்ந்து கொண்டதையோ யாரும் கண்டு கொண்டதாகவே தெரியவில்லே. வந்தது வந்தாயிற்று. கடைசிவரை இருந்துவிட்டே கிளம்புவது என்ற பிடிவாதத்துடன் உட்கார்ந்திருந்தான்.

நிச்சயதார்த்தத்தைப் பற்றிய எல்லா விவரங்களேயும் அவனுக்குச் சொன்னவன் ஆராவமுதுதான். ஆராவமுதனின் மைத்துனி புருஷன் சோழா ஹோட்டலில் ரிசப்ஷனிஸ்டாக இருந்தான். ரவியும் ராஜியும் சோழா ஹோட்டலில் தங்கியிருப்பதைப் பற்றியும் நுங்கம்பாக்கத்தில் இந்த விலாசத்தில் இத்தனே மணிக்கு நிச்சயதார்த்தம் நடக்கப் போகிறது என்பது பற்றியும் எல்லாச் செய்திகளேயும் அவனிடமிருந்து அறிந்துதான் ஆராவமுது ரகுவுக்குக் கூறியிருந்தான். ஒருவேளே ஆராவமுதுக்குக் கிடைத்த தகவல்கள் தவருக இருக்குமோ! அல்லது வேண்டுமென்றே ஆராவமுது இப்படி ஒரு புரளியைக் கிளப்பி விட்டிருப்பாஞே? நிர விசாரித்துத் தெரிந்து கொள்ளாமல் இப்படிப் புறப்பட்டு வந்தது முட்டாள்தனம் போல் இருக்கிறதே!

ரகு உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கி ஒருவர் அவசர அவசரமாக வந்தார்.

''கேசரிக்கு முந்திரிப் பருப்பும் கிஸ்மிஸ்ஸும் கட்டாயம் வந்தாகணும். காலா காலத்தில் பாக்கு வெத்திலே மாத்தி முடியறதுக்குள்ளே கேசரியைப் பண்ணி இறக்க வேண்டாமா? நீங்க பாட்டுக்குச் சும்மா உட்கார்ந்திருந்தா எப்படி? சட்டுப்புட்டுனு வாங்கிண்டு வாங்களேன்!''

தன்னே யாராகவோ பாவித்துக் கொண்டு அந்தச் சமையல்காரர் அப்படி விரட்டுகிறுர் என்று ரகுவுக்குப் புரிந்தது. எடுபிடி ஆள் என்று நினேத்தாரோ என்னவோ! இருந்தாலும் சுப காரியத்துக்குத் தன்னுலான பங்கைச் செய்வது தப்பில்லே என்று தோன்றியது. தம்பி பெண்ணுக்காக இது கூடச் செய்யக் கூடாதா என்ன? எதிரிலேயே எட்டினுற்போல் ஒரு பலசரக்கு ஸ்டோர் இருந்தது. வேகமாக அங்கே சென்று இருபது ரூபாய்க்கு வரக்கூடிய முந்திரிப் பருப்பும் கிஸ்மிஸ்ஸும் வாங்கிக் கொண்டு திரும்பினுன். சமையல்காரர் ஓடிவந்து அவற்றை அவனிடமிருந்து பிடுங்கிக் கொள்வது போல்

வாங்கிக் கொண்டு உள்ளே விரைந்தார். மறுபடியும் மூலையில் காலியா யிருந்த ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டான் ரகு. ஏன் ரவி இன்னும் வரவில்லே?

''நிச்சயதார்த்தம் அஞ்சு மணிக்கு இல்லேயா?'' என்று பக்கத்தில் ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்த ஒரு பெரிய மனிதரைக் கேட்டான்.

''அஞ்சு மணி எப்பவோ ஆயிடுச்சே! ஆறு மிஸ்டர் ரவி குமாருக்குச் சோழா ஹோட்டல்ல ஃபாரின் விஸிட்டர்ஸ் வந்துட்டாங்களாம். அவங்களே அனுப்பிட்டு ஆறு மணிக்குள்ள வந்துடறதா ஃபோன் பண்ணியிருக்கார்'' என்றார் அந்த மனிதர் ஆகாசத்தைப் பார்த்தவாறே.

**வ**த்சலா பரக்கப்பரக்க அவனே நோக்கி விரைந்து வந்தாள்.

''என்ன வத்சலா?''

''வாங்க போகலாம்.''

''ஏன்?''

''வாங்கோன்னு வாங்களேன்!'' என்றாள் வத்சலா, பற்களைக் கடித்தவாறு, சீறுவதுபோல்.

ரகு வாய் திறக்காமல் எழுந்து அவளைத் தொடர்ந்து வெளியே சென்றான்.

பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்துகொண்டிருந்தபோது வத்சலா கூறினாள் — ''என்னைச் சட்னிக்கு அரைக்கச் சொல்லி ஒருவைரத் தோட்டு மகராசி சட்டமிட்டுப் போனு. சமையல்காரின்னு நினேச்சுட்டாளோ என்னவோ! அதுக்கு மேலே அங்கே உட்கார்ந்திருக்கப் பிடிக்கலே. ஏண்டா வந்தோம்னு ஆயிடுத்து. நம்ம அஞ்ஞானத்துக்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும்.''

பஸ்ஸுக்காகக் காத்து நின்றபோது கப்பல் போன்ற சோழா ஹோட்டல் கார் ஒன்று அவர்களைக் கடந்து சென்றது. ரவியும் ராஜியும் சிரித்துப் பேசியவாறு அதில் சென்று கொண்டிருந்தது தெரிந்தது.

—ரகுவையும் மீறி ஒரு நெடுமூச்சு அவன் நெஞ்சிலிருந்து எழுந்தது. 'அவரவர் உலகம் அவரவருக்கு' என்று நினைத்துக் கொண்டான்.

---

# ஆன்றோர் வாக்கு...



பல நினுசான தப்புத் தண்டாக்கள், பாபங்கள் ஜன்ம ஜன்மமாகப் பண்ணி விட்டோம். அந்தப் பாபங்கள் தீருகிற மட்டும் நமக்கு ஆத்மாநுபவம் என்கிற பேரானந்தம் சித்திக்காது. கர்மாக்களுக்கெல்லாம் பலன் தருகிற பலதாதாவான ஈஸ்வரன் நம் பாவத்துக்கெல்லாம் தண்டனே கொடுத்துத் தீர்த்து வைத்த பிறகுதான் நமக்கு அந்த சாசுவதமான பேரின்பம் கிடைக்க முடியும்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்

தொண்டினும் சிறந்த ஒன்று இருக்கிறதா? எனக்கு ஒன்றும் தோன்றவில்லே. தொண்டே எனது வாழ்க்கை; எனது செல்வம்; எனது ஆருயிர்; எனது சமயம்; எல்லாம்; எல்லாம். விளேவு என்ன ஆனாலும் ஆக. அது பற்றிய கவலே எனக்கில்லே. 'என் கடன் பணி செய்து கிடப்பதே'. எனக்குப் பிறப்பு வேண்டும். பிறப்புப் பயன் கருதாத் தொண்டுக்குப் பயன்படுதல் வேண்டும். சாதி, மதம், மொழி, நிறம், நாடு முதலியவற்றைக் கடந்து நிற்கும் பொதுமை அறத்துக்குரிய சன்மார்க்கத் தொண்டு செய்தல் வேண்டும். இதுவே எனது வேண்டுதல்.

—திரு. வி. க.

தேசத்தின் கேவலமான நிலே பலருக்குத் தெரிகிறது. ஆனல் வெளியில் சொல்லப் பயப்படுகிருர்கள். அது தேச விரோதக் காரியம் என்று கருதப்பட்டு விடுமோ என அச்சப்படுகிருர்கள். மோசமான நிலேயை உணர்ந்து கொள்ளாமல் வியாதியைக் குணப்படுத்துவது முடியாத காரியம். ஒத்துழைப்பது என்பது வேறு. எதைச் சொன்னலும் 'ஆமாம்' என்று கேட்டுக் கொண்டு செயல்படுவது வேறு. ஒத்துழைப்பு என்பதின் பேரால் அடிமைத்தனத்தை வளர்ப்பது தேசத்துக்கு ஒரு நன்மையும் உண்டு பண்ணுது.

—ராஜாஜி

மனிதன் கண்ட தீர்வுகளே விடக் கடவுளின் புதிர்கள் மன நிறைவு அளிப்பவை.

ஜி. கே. செஸ்டர்டன்

5 வருடம் உத்திரவாதமுள்ள 'மெரி' சூப்பர் ஸ்பெஷல் தங்க கவரிங் நகைகளை 15 வருட ஆராய்ச்சியின் பலனாக இந்தியாவில முதல் முறையாகத் தயாரித்து இந்தியா முழுவதும் அதிக அளவில் வி.பி.பி. மூலம் அனுப்பி வரும் ஸ்தாபனம். சகல விபரங்களுக்கும் இனாம் கேட்லாக் வாங்கிப் பார்க்கவும் இதில் உள்ள நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் பொருட்கள் அனுப்பப்படும். (வி.பி.பி. சார்ஜ் தனி)




# மெரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

ஸ்தாபிதம்: 1963
டிரேட் மார்க்: 346088.

தபால் பெட்டி 1405, 14, ரெங்கநாதன் தெரு, தி.நகர் சென்னை-600 017.



# சரவணா
## மாவரைக்கும் இயந்திரம்

சரவணா கிரைண்டர்கள்

- 4 பேரிங்குகளால் தயார் செய்யப்படுகிறது
- ஒரு வருட உத்திரவாதமுள்ளது
- பெரிய நகரங்களில் எங்களுடைய மாவரைக்கும் இயந்திரங்களுக்கு ஆயுட்கால இலவச சர்வீஸ் செய்து தரப்படுகிறது



*தயாரிப்பாளர்கள் :*

**சரவணா இன்ஜினீயரிங் டிரேடர்ஸ்**
**கோயமுத்தூர் — 641002**

*ஸ்டாக்கிஸ்ட்ஸ் :*

NEETHA TRADING AGENCIES, BOMBAY - 14 Phone: 440490
V. G. PANEERDAS & CO., SION, BOMBAY - 22 Phone: 474789
TAMILNADU STORES, KAROLBAUGH, NEWDELHI - 5 Phone: 562320
KARTHIK ENTERPRISES, MADRAS - 28 Phone: 71624

OSR

# கானம்

(மலையாளம்)



● தெலுங்கு நாட்டிலிருந்து ஒரு சங்கராபரணம், கேரள நாட்டிலிருந்து ஒரு 'கானம்' இசைக்குமுன்று வாரிசுகளைப் படத்தில் காட்டியிருக்கிறார்கள். பாலமுரளியும் ஜேசுதாசும் போட்டிபோட்டுக்கொண்டு கான மழை பொழிந்துள்ளார்கள். அத்தனையும் தேன்.

என்றாலும் கதை நகருவதில் உள்ள நிதானம் படம் பார்ப்பவர்களைச் சோர்வடையச் செய்து விடுகிறது. இடைவேளைக்குப் பிறகுதான் விறுவிறுப்பாக நகருகிறது.

அரவிந்தாக்ஷனாக வரும் அம்பரீஷிடம் ஒரு சங்கீத மேதைக்கு உள்ள கம்பீரமும் வேகமும் இல்லை. மிருதங்க வித்வானாக நடித்துள்ள நெடுமுடிவேணுவைப் பாடகராகப் போட்டிருக்கலாமோ என எண்ண வைக்கிறது அவரது தோற்றம்.

பூர்ணிமா ஜெயராமனைப் பேச வைப்பதை விட ஆட வைப்பதில் அதிக கவனம் செலுத்தியிருக்கிறார்கள். நன்றாகவே ஆடியிருக்கிறார்.

பாலக்காடு ருக்மிணியாக வரும் லட்சுமி கச்சேரி செய்யும்போது சங்கீத பாவங்களை வெளிப்படுத்தி நடித்திருப்பது சிறப்பு.

டைரக்டர் ஸ்ரீ குமாரன் தம்பி. இசைக் கலைக்குத் திரையில் ஆராதனை செய்ய முயன்றிருக்கிறார்.

காதுகளைத் தாராளமாக நீட்டலாம்.



ரமேஷ்

● 'ஆணிவேர்' படத்தில் "Betterன்னு என்னன்னு தெரியுமா?'' என்று கேட்ட சிறுவன்தான் ரமேஷ். 'அலைகள் ஓய்வதில்லை' படத்தில் ஐந்து வாண்டுகளுள் ஒரு வாண்டாக வருகிறான்.

எந்தப் பாட்டைக் கேட்டாலும் அப்படியே ஆடிக் காட்டி விடுகிறான்.

'தொட்டால் சுருங்கும்' படத்தில் அனைவரது மனச் சாட்சியாக வந்து ஆடியிருக்கிறான்.

# காமிராவைச் சுற்றி

எனக்குப் பல வருடங்களுக்கு முன் பார்த்த திருமணப் படப்பிடிப்பு ஒன்று ஞாபகத் துக்கு வந்தது. தாலி கட்டும்போது டைரக் டர்கத்தியை வரவழைத்துத் தாலியின் நீளத் தைக் குறைக்க அதை அறுத்தார். தாலி கட்டுவதற்கு முன்பே தாலி அறுக்கும் படலம்!





தாலி கட்டும் போது...

● ஸ்ரீராமநவமி தினத்தன்று ஸ்ரீவெங்கடேசப் பெருமாள் திருமண மண்டபத்தில் இராகு காலத்தில் சிரஞ்சீவி பிரபுவுக்கும் சௌபாக் கியவதி ராஜலட்சுமிக்கும் திருமணம் நடை பெறுவதாக டைரக்டர் துரை அவர்களால் நிச்சயிக்கப்பட்டிருந்தது.

அழையாத விருந்தாளியாகத் திருமணத் துக்குப் போயிருந்தேன். 'நலந்தானா?' எனக் கேட்டு என்னை வரவேற்றார் துரை. படத்தின் பெயரும் அதுதான்!

கல்யாண மண்டபம் நிஜமாகவே அமைக் கப்பட்டிருந்தது. மணக் கோலத்தில் பிரபுவும் ராஜலட்சுமியும் அமர்ந்திருக்க, சாஸ்திரிகள் மந்திரம் ஓதிக் கொண்டிருந்தார். தேங்காய் பழம், குத்துவிளக்கு, தோரணம், உற்றார், உறவினர் இத்யாதி... இத்யாதி.

நாகராஜ சாஸ்திரிகளை முழுமையாக மந்திரம் ஓதவிடாமல் 'கட்..கட்' சொல்லிக் கொண்டிருந்தார் துரை.

தாலி கட்டுவது நின்றது. தேவி பிரசாத் காமிராக் கோணங்களை மாற்றப் போகிறு ராம்!

ஒரு பக்கமாக இருந்த மேனகாவின் அம்மா டைரக்டரைப் பார்த்து ''தாலிகட்டு கிறசமயம் பார்த்து அபசகுனம் மாதிரி 'கட் கட்' என்கிறீர்களே'' என்றார் தமாஷாக.

''கட் கட்'' என்று இங்கிலீஷில் சொன் னேனே அதற்குச் சந்தோஷப்படுங்கள். அதையே தமிழில் ''அறு அறு''என்று சொல்லியிருந்தால் என்னவா யிருக்கும்?'' என்றார் துரை. அனைவரும் சிரித்துவிட் டார்கள்.



இங்கே, கல்யாணம் முடிந்தவுடன் 'பிரேக்' என அறிவித்தார்கள். இதுகூட அபசகுன மான வார்த்தைகள்தானே! பிரபுவும் ராஜ லட்சுமியும் எழுந்து என்னை நோக்கி வந் தார்கள்.

பிரபு என்னைப் பார்த்து, ''நான் நடிகனான பிறகு இன்றுதான் எனக்கு முதல் திருமணம் நடக்கிறது'' என்றார்.

''உங்கள் விஷயம் எப்படி?'' என்றேன் ராஜலட்சுமியைப் பார்த்து.

''தெலுங்குப் படத்திலே ஆறு. தமிழிலே மூனோ நாலோ'' என்று எண்ணிப் பார்த்து விட்டு ''சுமார் பத்து கல்யாணம் ஆகி இருக்கும்'' என்றார் சிரித்தவாறே.

''கல்யாணம் முடிந்து விட்டது. பாயஸத் தோடுதானே சாப்பாடு'' — கேட்டார் மேனகா.

''நாங்கள் எடுக்கிற காட்சிக்குத் தகுந்த மாதிரி இன்று பாயசத்தோடு சாப்பாடு போடத் தயார். வேறு மாதிரியான காட்சி எடுக்கும்போது அதுக்குத் தகுந்த மாதிரி பட்டினி கிடக்கத் தயாரா?'' — துரை.

**மேனகா படம்: ச. வே. ரா. மோகன்**

**லூஸ் மோகன்**

● லூஸ் மோகன் செட்டில் என் காலடியில் வந்து பவ்யமாக அமர்ந்து பேச ஆரம்பித்தார். அவரை எழுப்பி சோபாவில் உட்கார வைப்பதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.

''நான் புள்ளைக் குட்டிக்காரனுங்கோ.... இப்பத்தான்நாலு படம் வருது..சந்தோஷமா இருக்கேன்'' என்றார்.

சிரிப்புக்களுள் எத்தனை வகை உண்டோ அத்தனையையும் சிரித்துக் காட்டினார். ''ரசிகர்களிடமிருந்து கடிதம் கூட வருகிறது'' என்று பெருமைப்பட்டுக் கொண்டார்.

படம்: அருண்



**சிவாஜி அழுதார்**

● பாலாஜியின் 'தீர்ப்பு' படத்துக்காக சிவாஜி கணேசனும் சுஜாதாவும் நடித்துக் கொண்டிருந்தார்கள். மகள்நித்யாவையாரோ ஒருவர் கற்பழித்துவிட, அது தெரிந்து இருவரும் கட்டிப் பிடித்துக்கதறி அழவேண்டும்.

சிவாஜி எப்படி அழுகிறார் என்று பார்க்க ஆசையோடு ஒதுங்கி நின்றேன்.

நன்றாகப் பேசிக் கொண்டிருந்தவர் ''நான் ரெடி. நீங்க டேக் சொல்லுங்க. நான் அழுதுடறேன்'' என்றார்.

கண்களில் கிளிசரைன் கூடப் போட்டுக் கொள்ளாமல் போய் உட்கார்ந்தார்.

கிளாப் அடித்து 'ஆக்ஷன்' என்றதும் அவர் உணர்ச்சிவசப்பட ஆரம்பித்தார். 'ராதா' என்று தழுதழுக்கக் கூறியவாறே கண்களைக் குளமாக்கிக் கொண்டு அழுதார். கண்ணீர் அவர் சொன்னபடி யெல்லாம் கேட்டதைப் பார்த்து அசந்து போய் நின்றேன்.

அவர் சிரித்தும் பார்த்திருக்கிறேன். அழுதும் பார்த்திருக்கிறேன். சிரித்துக்கொண்டே அழுவதையும் நான் பார்த்திருக்கிறேன் என்றாலும் ஒவ்வொரு முறையும் வியப்பு.

அவர் எழுந்து வந்தார்.

''துறவி சௌக்கியமா?'' என்றார். என்னை அவர் அப்படித்தான் அழைப்பது வழக்கம். ''துறவி ஞானி எல்லாம் ஒண்ணுதானே'' என்பார்.

முன்தினம் சேம்பர் தமக்கு அளித்த பாராட்டு விழா பற்றிச் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

''சினிமாத் தொழிலைச் சட்ட ரீதியான அமைப்பாக அரசாங்கம் அங்கீகரிக்கவில்லை என நேற்றுப் பேசினார்கள். நல்ல கருத்துத்தான். தொழில் சட்டப்படி வேலை செய்பவர்களைக் குறிப்பிட்ட வயது வரை வேலைக்கு வைத்திருக்க வேண்டும். போனஸ், பிராவிடெண்ட் ஃபண்ட், சம்பளம் எல்லாம் தர வேண்டும். சினிமாத் தொழிலில் நம்மால் யாரையும் நிரந்தரமாக வேலைக்கு வைத்துக் கொள்ள முடிவதில்லை. படம் எடுக்கும் வரை வேலைக்கு ஆள் தேடப்படுகிறது. வைத்துக் கொள்கிறோம். அப்புறம் போகச் சொல்லிவிடுகிறோம். இவர்களுக்கு என்ன செய்ய முடியுமோ அதற்குப் பாடுபடுவோம்'' என்றார்.



## எதிரே வந்த சரிதா

வாகினிக்குள் நுழைந்து கொண்டிருந்த போது எதிரில் காரில் வந்தார் சரிதா. என்னை பார்த்ததும் காரை நிறுத்தி ''அம்மா படத்திலே நடிச்சிட்டு வரேன். தலையிலே அடிபடற மாதிரி சீன். நிஜமாகவே தலையிலே அடி விழுந்திடுச்சு வலிக்குது'' என்று தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டே சொன்னார். கார் போனதும் ஸ்கூட்டரில் வந்தார் எஸ். வி. சேகர்.

''என்னையும் சாந்தி கிருஷ்ணாவையும் சேர்த்து ராஜாமணி (விசு சகோதரர்) ஒரு 'கெகிக' ளைப்பி விட்டிருக்கிறார். ஷாட்டுக்குச் சாந்தி தேவைப்பட்டால் என்னைத் தேடினால் போதுமாம்'' என்று வருத்தப் படாமல் சொன்னார் சேகர்.

''தொட்டு நடிக்கக் கூடாது என்று சாந்தி கிருஷ்ணா சொன்னாலும் சொன்னார். வெரி குட் பப்ளிசிடி அவருக்கு. அதைப் பற்றி எழுதாதவங்களே இல்லே'' என்றேன் நான்.



### ஏ. எஸ். பிரகாசம்

''நடை பாதைப் பிச்சைக்காரர்களின் அவல நிலை சீர்திருத்த பதினொரு லட்சம் ரூபாய் செலவு செய்து படம் எடுத்துள்ளேன்'' என்றார் 'எச்சில் இரவுகள்' தயாரிப்பாளரும், டைரக்டருமான ஏ.—எஸ். பிரகாசம்.

''அந்தப் பணத்தில் அவர்களுக்கு அன்னதானம் செய்து அவர்கள் பசியைப் போக்கி யிருக்கலாமே'' என்றார் ஒருவர்.

''அன்னதானம் செய்வதால் அவர்களை அதிகப்படுத்தலாமே தவிர அவர்களின் பிரச்னைக்குத் தீர்வு காண முடியாது. நான் இப்படத்தில் தீர்வு சொல்லியுள்ளேன். அதேசமயம் படம் வெளிவரும் நாளன்று வெளியூர்களில் என் செலவில் அன்னதானம் செய்யவும் ஏற்பாடு செய்துள்ளேன்'' என்றார் பிரகாசம்.

## அந்த வார்த்தை!

'அபூர்வ ராகங்கள்' இந்திப் படத்தில் கமலஹாசனும் ஹேமமாலினியும் நடித்துக் கொண்டிருந்தார்கள். மற்றொரு பக்கம் மெகமூத்.

தமிழில் வெளிவந்தபோது அப்படத்தில் ஒரு ஆபாச வசனம் இடம் பெற்றது என் ஞாபகத்துக்கு வந்தது. அந்த 'வசனம்' இந்தியில் என்னவாக இருக்கும்?

பாலசந்தர் 'பிஸி'யாக இருந்ததால் உதவியாளர் அனந்தைக் கேட்டேன்.

''இப்பொழுதுவெளிவரும் பெரும்பாலான படங்களில் அமிதாப் அந்த வார்த்தையைப்பயன்படுத்தியிருப்பதாகச்சொன்னார்கள் அதனால் டைரக்டர் அதை வேறு விதமாக மாற்றுவாரோ என்னவோ?'' என்றார் சந்தேகத்துடன். என்னவாக இருக்கும் அது?

'கல்கி' படித்து மகிழும் - கார்த்திக்
போட்டோ: அருணா



நாளுக்கு நாள் கொழுத்துக்கிட்டே போறியே... யாரோட ரத்தத்தை உறிஞ்சுறாய்?

ஹி... ஹி... ஹீ மூணாவது மாடியிலே, டார்டாய்ஸ் கொசுவர்த்தி சுருளை உபயோகிக்காத ஒருத்தன் இருக்கிறான்.

என் பொண்ணு சீதா, பட்டுசரி சமையல் நல்லாத்தெரியும். பாட்டு நடனம்... பிரமாதம். எல்லாத்துக்கும் மேலே, திடமான கை...

திடமான கையா?

கொசுக் கடிக்காது

தலைவரே, என்ன போராட்டம் நடத்துறீங்க?

கொசு ஒழிப்பு போராட்டம்!

ஒரு
பெரிய வியாபாரிக்கு
கொசுக்களை விரட்டிட
இனிய
'பாடி—கார்டு'
தேவை.

அனுபவத்திற்கேற்ற
சம்பளம்.

எட்டுமணி நேரம் எரிந்து, கொசுக்களை
எட்டாத தூரத்திற்கு விரட்டுகிறது—

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்

தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
:.போர்ட், பம்பாய்-400 023. :.போன்: 273831

everest/82/BCL/194-tm

# கரைபுரளும் கற்பனை









# ஜெயந்தன்!

14

**சிறிய கூண்டிலிருந்து பெரிய கூண்டிற்கு!**

காலை,

எட்டு மணி வரை வீடு மௌனத்தில் போய்க் கொண்டிருந்தது. பொன்னுத்தாயி தன்பாட்டிற்குக் காலை ஆகாரம் செய்து கொண்டிருந்தாள். வரதராஜுலு குளித்து விட்டு டிபனுக்குத் தயாராகி பேப்பர் பார்த்துக் கொண்டிருந்தான். கலோசனு ஏழு மணி வாக்கில் வாய் கொப்பளித்து, பொன்னுத்தாய் கொடுத்த காப்பியைக் குடித்ததோடு சரி. படுக்கை அறையிலேயே குடியிருந்து கொண்டிருந்தான்.

சரியாக எட்டு மணிக்கு வரதராஜுலு ஃபோன் ஸ்டாண்டுக்கு வந்து எண்களைச் சுழற்றினான்.

''ஹலோ, ஸ்டேஷன்? நான் எஸ்.ஐ. பேசறேன்.''

''......''

''நாகப்பன் வந்தாச்சா?''

நாகப்பன் என்ற பெயர் கேட்டதும் கலோசனு விருட்டென எழுந்து வந்து அறைக் கதவோரம் நின்று ஒட்டுக் கேட்டான்.

''யாரு நாகப்பனு?''

.....

''வீட்டுக்கு வா.''

.....

''பரவாயில்ல வா.''

.....

''இப்பவேதான்.''

'ஆஹா நாகப்பனு? இப்போது வரப் போகிறானு? சபாஷ்!' என்றது கலோசனுவின் மனம். இப்படி இருவரும் இங்கே ஒரே நேரத்தில் இருக்கும் சந்தர்ப்பத்திற்காக இவன் ஒரு வாரம்கூடத் தாமதிக்கத் தயாராக இருந்தானே.

என்ன நெஞ்சழுத்தம் இந்த நாகப்பனுக்கு!

முதலில் கொஞ்சம் தயங்கினாலும், இவன் பரவாயில்லே வா என்று சொன்னதும் சரியென்று வருகிறானே. முந்தாநாள் கையும் மெய்யுமாகப் பிடிபட்டவன் இப்போது தன் முகத்துக்கு எதிரே எந்த முகத்தை வைத்துக் கொண்டு வருவான்? அது சரி, இவன்களுக்கெல்லாம் முகம் என்று ஒன்று இருந்தால் அல்லவா வைத்துக் கொண்டு வருவதற்கு! அம்மா நான் என்னு செய்வேன், எஜமான் உத்தரவு போடுறப்ப?' என்று சொன்னாலும் போச்சு.

வரதராஜுலு, நாகப்பனை அவசரமாக வரச் சொல்லக் காரணம், ரேவதிக்கு அவசரமாகக் கொஞ்சம் பணம் கொடுத்தனுப்ப வேண்டியிருந்தது. நேற்று அவள் அந்தக் கிழங்கள் இருந்ததால் ஒரு சீட்டு நீட்டியிருந்தாள். 'இதுகளை மரியாதை செய்து அனுப்ப நூறு ரூபாய் தேவைப்படுகிறது. இல்லாவிட்டால் ஊரில் மானம் போய்விடும்.'

கலோசனு கணக்குப் போட்டுப் பார்த்தான். நாகப்பன், அதிகப்பட்சம் போனால், இன்னும் பதினைந்து நிமிஷங்களில் வந்து விடுவான். க்விக். என்ன செய்யலாம்? முதலில் பொன்னுத்தாயை வெளியே அனுப்பியாக வேண்டுமே.

அவன் வெறுமனே கீழே வெளிக் கதவு வரை வந்து கொஞ்சம் தாமதித்துவிட்டுத் திரும்பி வந்து பொன்னுத்தாயிடம், 'பொன்னுத்தாயி, ஒரு ஆளு சைக்கிளில் வந்து சொல்லிட்டு ஓடறான், ஒன் மருமவ கெணத்துல விழுந்திட்டாளாம்' என்றான்.

திகைத்துப் போன பொன்னுத்தாயி, ''ஏம்மா எந்தக் கெணத்துல?'' என்றாள்.

''தெரியல, சீக்கிரம் போ.''

அவளை டிபனை மட்டும் எடுத்து வைத்து விட்டுப் போ என்று சொல்லலாமா என்று நினைத்த வரதராஜுலு பிறகு, சரி வேண்டாம், ஹோட்டலில் இருந்து ஸ்டேஷனுக்கு வரவழைத்துக் கொள்ளலாம் என்று பேசாமல் இருந்து கொண்டான்.

பொன்னுத்தாயி போனதும் கலோசனு நேரே, மேலே அந்தத் தெருவின் தென் முனையைப் பார்த்திருக்கும் ஜன்னலின் முன் போய் நின்றான் — நாகப்பனின் தலையைத் தேடியபடி.

ஓர் இரண்டு மூன்று நிமிஷத்தில் நாகப்பனின் சைக்கிள் தெரிந்தது.

'ஓ. கே. மிஸ்டர் நாகப்பன், யூ ஆர். வெல்கம்' என்று சொல்லிக் கொண்டே, அவன் அந்த அறையில் இருந்த பீரோவுக்கு வந்தான். அதிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்து பின்கைப் கட்டியிருப்பவன் போல அதைப் பின்னால் மறைத்துக்கொண்டு வரதராஜுலுவின் முன் வந்து நின்றான்.

பேப்பரிலிருந்து தலையை உயர்த்திய வரதராஜுலு இவன் திடீரென்று முன்வந்து நிற்பதைக் கண்டு, இவன் எதற்காக வந்திருப்பான் என்று யோசித்தபடியே, 'என்ன' என்பது போல் அவனைப் பார்த்தான்.

''நான் போகணும்.''

''காலையிலேயே ஆரம்பிச்சுட்டியா?''

அவன் ஆங்கிலத்தில் கேட்டான்: ''அனுப்பும் உத்தேசம் அறவே இல்லே இல்லையா?''

''அனுப்பறதா இருந்தா நேத்து சாயங்காலமே போகச் சொல்லி யிருப்பேன்.''

கலோசனு கைத்துப்பாக்கியை முன்னால் நீட்டிச் சுட்டான்.

முதல் குண்டு வெடித்தது.

இதை எதிர்பார்க்காத வரதராஜுலுவின் கண்கள் ''என்ன இது கலோசனு?'' என்று

விளங்காது விரிந்து முடியு முன் இரண்டாவது குண்டும் பாய அவன் மயங்கிச் சரிந்தான்.

சுலோசனாவுக்குத் தனது கபாலத்தில் ஆயிரம் ஓட்டைகள் விழுந்து, உள்ளிருந்து புகை பீரிட்டு வெளிப் பரவிக்கண்ணை மறைப்பது போல் தள்ளாடிக் கொண்டு வந்தது.

'அது யார்? யார் சரிவது தன் முன்னால்? யார் ரகுவா?' இது இல்லை யென்று தெரிவதற்கே அவள் இரண்டு மூன்று முறை கண்ணைச் சிமிட்டிக் கொண்டு பார்க்க வேண்டியிருந்தது.

'ஆல் ரைட்' — அவள் தன்னைத் திரட்டிக் கொண்டாள். 'எனது இரண்டாவது இரை எங்கே?'

அவள் வந்து மேல் கட்டிற்கு இறங்கும் படிகளின் முனையில் நின்று கொண்டாள். துப்பாக்கி பழையபடி பின்னால் மறைந்து கொண்டது.

இவன் வாசலுக்கு வரவும் மேலே வெடிகள் கேட்கவும் சரியாயிருக்க, அதிர்ச்சியடைந்த நாகப்பன், சைக்கிளில் இருந்து குதித்தான்.

'என்ன, ஐயா இந்தக் கிறுக்கியைக் கட்டு விட்டாரா? அவ்வளவு தூரத்துக்குப் போக மாட்டாரே. இதென்ன பெரிய வம்பாக இழுத்துக் கொண்டு விட்டார் போலிருக்கிறதே. இது இவரோடு போகிற காரியமில்லையே. நாளைக்குக் கோர்ட் கேஸ் என்று வரும்போது ரேவதி, நான் எல்லாருமல்லவா கூண்டில் நிற்க வேண்டும்' என்று நினைத்துக் கொண்டே உள்ளே வந்தபோது, மேலே சுலோசனா நிற்க அவனுக்குப் பகீர் என்றது.

'அடிப் பாவி, இந்தக் கிறுக்கியா அவரைச் சுட்டுவிட்டாள்! இருந்தாலும் அவன் தன்னை அறியாமல் பல் இளித்து, அசடு தெறிக்க, ''என்னங்க அம்மா? என்னங்கம்மா வேட்டுச் சத்தம்?'' என்று கேட்டான்.

சுலோசனாவிடமிருந்து பதில் இல்லை. அவள் தான் ஏதோ சூனியத்தை வெறித்துக் கொண்டிருப்பது போலவும், இவன் குறுக்கே வருவதைச் சட்டை செய்யவில்லை என்பது போலவும் நின்றாள்.

நாகப்பன் மூன்று படிகள் ஏறி நின்று மீண்டும் கேட்டான்: ''என்னாங்க அம்மா?''

......

ஆறாவது படியில்

......

ஒன்பதாவது படியில் நின்று கேட்டான். இன்னும் மூன்று படிகளே பாக்கி.

சுலோசனா இப்போது இவனது நெஞ்சுக்கு நேராகவும் துப்பாக்கியை எடுத்துப் பிடித்தாள்.

ஒன்று

இரண்டு

நாகப்பன் அப்படியே துள்ளி மல்லாந்து விழுந்து படிகளில் உருண்டான்.

''ராஸ்கல்.''

அவள் வந்து சோபாவில் உட்கார்ந்து கொண்டாள்.

ரகு சொல்கிறான், ''நேமி நம்ம உடம்புல Sensual not sexual Zoneனு சில பகுதிகள்



இருக்கு. அதுக்கு நாம் சரியானபடி தூண்டு தல் கொடுத்தா, We set maximum sexual pleasure உதாரணத்துக்கு..... இப்பிடி வாயேன்...''

கவோசனு உதறினுன். சீ, எதைச் செய்து விட்டு உட்காரும்போது எது நினைவுக்கு வரு கிறது.

இனி ஆகவேண்டியதைப் பார்க்க வேண் டுமே. என்ன செய்யலாம்? ஸ்டேஷனுக்குப் போன் செய்ய வேண்டும். அவன் சென்று எண்களைச் சுழற்றினுன்.

''ஹலோ, ஸ்டேஷன்? நான் இங்க எஸ்.ஐ வீட்ல இருந்து அம்மா பேசறேன்.''

அங்கு ரிசீவரை எடுத்தது ரைட்டர்.

'சொல்லுங்க அம்மா.''

நான் இங்க, உங்க எஸ். ஐ. வரதரா ஜுலையும் கான்ஸ்டபிள் நாகப்பனையும் —டுட்டேன்.''

''என்னம்மா சொல்றீங்க?''

இவன் திரும்பச் சொன்னுன்.

''ஏம்மா வெளையாட்டுக்கு ஏதும்....''

''நோ. என்ன விளையாட்டு வேண்டிக் கெடக்கு?''

அங்கு அந்த ரைட்டர் அலறுவது போனி லேயே கேட்டது. 'ஏட்டையா, என்னுங்க, நம்ம எஸ். ஐ. சம்சாரம் அவரையும் நம்ம நாகப்பனையும் சுட்டுட்டதாச் சொல்லுது.''

''என்னடா, இது இன்னிக்கு ஏப்ரல் மொத தேதி கூட இல்லியேடா.''

''இல்லிங்க. அது ஒரு மாதிரி ஜூலாப் போய்க்கிட்டு இருக்குன்னுதான் நாகப்பன் கூடச் சொல்லிக்கிட்டு இருந்தான்.''

''நான் ஏட்டு பேசுறேன் அம்மா....''

''ஆமா. நான்சொல்றது உண்மைதான்.''

அங்கு ஏட்டு இதைச் சொல்வதும் கேட் டது. ''என்னடா இது. சர்க்கிள் இன்ஸ் பெக்டர் வேறெ ஊர்ல இல்ல.''

கவோசனு போனை வைத்துவிட்டு வந்து ஜன்னல் வழியாகத் தெருவைப் பார்த்தான்.

இந்தக் குறுகிய நேரத்திற்குள் அந்த ஊரில் பாதியே இந்த வீட்டின் முன் கூடிவிட் டிருந்தது.

''அந்தா... அந்தா.... அந்தம்மாதான்... பாக்குது... பாக்குது....''

கூட்டத்தின் முகப்பில் பொன்னுத்தாயி மிரண்டு போய்க் கையைப் பிசைந்து நின்று கொண்டிருந்தாள்.

அவளை மட்டும் மேலே வரச் சொல்ல லாமா? வருவாளா? வேண்டாம். அவள் எதற்காக வர வேண்டும்?

ஓர் ஏழெட்டு நிமிஷத்திலே ஜீப்பு பூட் காலடி ஓசைகள் சரசரத்தன.

வந்த போலீஸ்காரர்கள் நாகப்பன் உடல் கிடந்த நிலையைக் கண்டே விக்கித்துப்போய் விட்டார்கள். உறைந்து போன ரத்தத்தில் சவம் தலை கீழாக அலங்கோலமாகக் கிடந் தது. கூடவே அவர்களுக்கும் பயம். புரு ஷனைச் சுட்டுவிட்டு இவனையும் சுட்டுத் தள்ளி இருக்கும் இறுக்கி தங்களையும் கண்டதும் சுடமாட்டாள் என்பது என்ன நிச்சயம்?

ஏட்டு இந்தச் சவத்திடம் இரண்டு காவல் காரரை நிறுத்திவிட்டு மற்றவர்கள் பின் தொடர மெல்ல மேலேறினுர். நிலைப்படி வந்ததும் சட்டென்று உள்ளே நுழைந்து விடாமல் அங்கேயே நின்று கொண்டு 'அம்மா' என்ருர்.

''யெஸ். கம் இன்.''

உள்ளே நுழைந்த ஏட்டு, இது சரியா, முறையா என்றுகூட யோசிக்க முடியாத பதற்றத்தில் சோபாவில் உட்கார்ந்திருந்த அவளுக்கு ஒரு சல்யூட் அடித்தார்.

கவோசனுவுக்கு இடதுபுறம் கொஞ்சம் தள்ளியிருந்த இன்னொரு சோபாவில் வரத ராஜுலுவின் சடலம் கிடந்தது. துப்பாக்கி இன்னும் கவோசனுவின் கையில்தான் இருந் தது.

இரண்டு காவல்காரர்கள் போய் வரத ராஜுலுவுக்கு உயிர் இருக்கிறதா என்று பார்க்க, ஏட்டு இவளிடம் 'அந்த துப் பாக்கியை இப்படிக் குடுங்க' என்று அதை வாங்குவதற்காக டவுசர் பையிலிருந்த ஏதோ துணியை எடுத்தார்.

''தர்றேன். நீங்க மத்த வேலைகளைப் பாருங்க.''

''அது உங்க கிட்டஇருக்கக் கூடாதும்மா''

''பரவாயில்லே. இன்னும் ஒரு கால் மணி நேரம்தான்.அதுவரையிலயும்இருக்கட்டும்.''

'சட்டப்படி மொதல்ல நாங்க அதை வாங் கிடணும்.''

கவோசனு திடீரென்று கோபமாகச் சொன்னுள்: ''நோ''

'இதென்னடா வம்பாப் போச்சு' என்று வந்தது ஏட்டுக்கு. 'இவன் தரமாட்டேன் என்று சொல்வதே அதில் இன்னும் குண்டு இருக்கிறது என்று சொல்றதே.'

''சரி. அந்த ரூமுக்குள்ளாவதும் போங்க''

''ம்.''

கவோசனு எழுந்து படுக்கை அறைக்குப் போனுன். அங்கு போனதும்தான் ஏன் துப்பாக்கியை ஒப்படைக்க மறுத்தோம் என்ற கேள்வியே அவளுக்குத் தோன்றியது.

மியாமி பல்கலைக் கழக மாணவர் களுக்கு ஒரு சலுகை உண்டு. தகுதியைத் தக்க வைத்துக் கொள் பவர்களுக்கு டியூஷன் ஃபீஸ் திருப்பித் தரப்படுகிறது. நூறு முதல் இரண்டா யிரத்து இருநூறு டாலர்வரை இவ் வாறு திருப்பித் தருகிறது பல்கலைக் கழகம். இதுவரை 228 மாணவர்கள் இச்சலுகையை அடைந்திருக்கிருர்கள்.
—தி வால் ஸ்ட்ரீட் ஜர்னல்—ராமுசாமி



# மாலை சூட்டி மகளுக்கு
# மண வாழ்த்தொலிக்க ஓலை தீட்ட வாரீர்
# உங்கள் தவம் பலிக்க...



வாழ்நாள் கனவுகள் பலிக்க...
வாச மல்லிகை வீசிட,
வாழைகட்டி உங்கள்
வாசலில் கொட்டுமேளம் வாசிக்க...

ஆசைச் செல்விக்கு இல்லற வாசல்
திறக்க...

வருகுதே நாளும் கோளும், வருகுதே
வரன் - -
கல்விமானும், கைநிறைவாய் நல்வருவாய்
காண்பவனும், நற்குடி மகனும்,
பெற்ற தாய்தந்தைக்கு
இனியாய்ப் பெண் மீது
பேரன்பு பொழிபவனும்...

எப்படி எங்கு தேடுவீர் அப்படி ஒருவனை ?
ஏடு விரித்து அழைக்கின்றோம்
தேடிக்கொள்வீர் - - தேர்ந்த வரன் !
குலமும் கோத்திரமும்
உயர் குடும்ப நிலையும்,
படிப்பும் பணமும் பண்பும் ஏற்றமுறப்
பொருந்துமாறு - -

எடுத்த எடுப்பில் கிட்டும் - -
பல்லாயிரம் குடும்பங்கள் ஆதரித்த
பாதையிலே, உங்கள் செல்விக்கு - -
மனம்போல் மாங்கல்யம் ...

உளம்போல் தேர்ந்தெடுப்பீர்,
விளம்பர மேடை இதோ

**THE TIMES OF INDIA**

THE MATRIMONIAL COLUMNS
BOMBAY • DELHI • AHMEDABAD

டைம்ஸ் ஆஃப் இந்தியா திருமணப் பத்திகள்
'காலங்கள்' எல்லாம் சுபம் சுபம் சுபம் !

SIMOES/BC/MAT/ 5/81

# யூ.எல்.ஐ.பி. +

## பாதுகாப்புக்கு மறு பெயர்



### அனைத்தும் அடங்கிய ஒரே சேமிப்புத் திட்டம்

லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பொரேஷன், ஜெனரல் இன்சூரன்ஸ் கார்ப்பொரேஷன், யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா—மூவரும் இணைந்தளிக்கும் இணையற்ற திட்டம் யூ.எல்.ஐ.பி. + உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் பாதுகாப்பு அளிக்கும் சேமிப்புத் திட்டம்.

யூ.எல்.ஐ.பி. + ன் நன்மைகள்

- உயர்ந்த வருமானம். உங்கள் சேமிப்புத் தொகை ரூ. 12000 திட்ட முடிவில் (10 ஆண்டில்) ரூ. 18000 மாகவும் (15 ஆண்டில்) ரூ. 22000 மாகவும் உயர்ந்து விடுகிறது.
- வரிச்சலுகை. இத்திட்டத்தில் முதலீடு செய்யும் உங்கள் தொகைக்கு பூரண வருமான வரி விலக்கு உண்டு.
- விபத்து பாதுகாப்பு. நீங்கள் எடுக்கும் திட்டத்தின் மதிப்பு எதுவானாலும், ரூ. 15000 வரை உங்களுக்கு விபத்து பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.
- ஆயுள் பாதுகாப்பு. நீங்கள் சேரும் திட்டத்தின் தொகைக்கு சமமாக உங்களுக்கு ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. மருத்துவ பரிசோதனை தேவையில்லை.
- ரூ. 24000 வரை சேமிக்கலாம் ரூ. 12000க்கு ஒரு திட்டமும் அதிலிருந்து 3 வருடங்கள் கழித்து அதே தொகைக்கு மற்றுமொரு திட்டமும் எடுத்துக் கொள்ளலாம்.

பாதுகாப்பான வாழ்க்கைக்கு இன்றே யூ.எல்.ஐ.பி. திட்டத்தில் சேர்ந்திடுங்கள்.

இதர விபரங்களுக்கு எங்களையோ அல்லது எங்கள் ஏஜெண்டுகள் மற்றும தலைமை பிரதிநிதிகள் அல்லது உங்களுக்கு அருகிலுள்ள பாங்க் ஆப் பரோடாவின் கிளைகளையோ அணுகுங்கள்.

எங்கள் தலைமை பிரதிநிதிகள் :

ஏ. தனபால், 10 ஜே. ஹஸ்ஸர் ரோடு, கோயம்புத்தூர் 641 018. போன் : 34776 (கோயம்புத்தூர், பெரியார் மாவட்டங்களுக்காக)

எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 (மதுரை மாவட்டத்துக்காக)

கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007. போன் : 1224 (தஞ்சாவூர் மாவட்டத்துக்காக)



# யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்) தலைமை செயலகம் : பம்பாய்-20

தெற்கு பிராந்திய செயலகம் :
ரெஜினு மேன்ஷன், 46, செகண்ட்லைன் பீச், சென்னை-600 001. தொலைபேசி : 27433

## உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாகவே இருக்கட்டும்

UTI-101-81-Tam

ஆம், ஏன் ஒப்படைக்க மறுத்தேன்? கொடுக்காததால் எனக்கு என்ன நல்லது வரப் போகிறது?

விடை கிடைக்கவும் நேரமாகவில்லை. இது நிகழ்ச்சிகளின்மேல் தனது கடைசிப் பிடி. இது இருக்கும்வரை இரண்டு பேரை இரண்டடி தள்ளி நிறுத்தத் தன்னால் முடியும். இதையும் கொடுத்த பிறகு...

போலீஸ்காரர்கள் வந்து விட்டதால் பொன்னுத்தாயி துணிந்து மேலே வந்திருந்தாள். அவள் இவளது அறைக் கதவோரம் நின்று வாயில் முந்தானையை வைத்துக் குலுங்கிக் குலுங்கி அழுது கொண்டிருந்தாள்.

கலோசனு உள்ளுக்குள்ளே எரிந்து விழுந்தாள். இந்த மூதி எதற்காக இப்படி அழுகிறாள்? இவளது மாமன் மகள் அத்தை மகள் செத்துப் போய்விட்டாளா? அல்லது சித்தப்பன் மகள், பெரியப்பன் மகள் தாலி அறுக்கப் போகிறாளா?

அவளுக்கு வாசலில் நின்று கொண்டிருந்த கூட்டத்தின் முகம் கண்ணில் வந்தது. இந்த முகங்கள், இனி காலமெல்லாம் தன்னை, 'இந்தா புருஷனைச் சுட்டவள், இரட்டைக் கொலை செய்தவள்' என்று அடையாளம் நீட்டிக் கொண்டே இருக்கப் போகிற முகங்கள். இந்த முகங்களைப் பற்றித் தான் இதற்கு முன் சிந்தித்திருக்கிறாளா? இல்லையே. இது மட்டுமா, இதுவரை மீண்டும் மீண்டும் சுழன்று சுழன்று வந்த அந்தச் சிந்தனையெல்லாம் 'சுடுவது' என்ற எல்லை வரைதானே வந்திருக்கிறது! சுட்ட பிறகு என்னஎன்பதைப்பற்றி யோசித்திருக்கிறாளா? அநேகமாக ஒன்றுமில்லையே. காரணம் பயமா?

பின்! விளைவுகள் காரணமாக, முன் வினைகள் நின்று போகலாம் என்ற பயமா?

சரி, இப்போதுதான் என்ன? இனி என்ன நடக்கப் போகிறது?

தான் நிஜமாகச் சிறைக்குப் போகப் போகிறாள். — தான் ஆக்ரோஷத்தோடு உடைத்தெறிந்த தார்மீகச் சிறைகளுக்குப் பதிலாக.

வழக்கு விசாரணைகளில், தன் கட்சி ஜெயித்து நீதி நிலைபெற எதையும் செய்யத் தயாராக இருக்கும் பப்ளிக் பிராஸிகூட்டர் தன்னைச் சீண்டி நிலைதடுமாற வைத்துக் கிழே வீழ்த்த அசிங்கமான இரட்டைப் பொருளிலும் கொச்சையாகவும் கேட்கப் போகும் கேள்விகளுக்கெல்லாம் பலர் முன்னிலையில் பதில் சொல்லப் போகிறாள் — நாகப்பன் கண் முன்னால் அம்மா என்று சொல்லிப் பின்னால் நாக்கை நீட்டியதைப் பொறுக்காத காரணத்திற்காக.

தூக்கு மேடையில் சாவை அணைக்கப் போகிறாள் — அசலான வாழ்க்கை எது என்று தேடிய குற்றத்துக்காக.

அல்லது சிறையில் வார்டர்கள், காவலர்கள் சொல்லுக்குப் பயந்து மாவு திரிக்கவும் கூடை முடையவும் போகிறாள் — அண்ணன் சொல்லிலும் கணவன் சொல்லிலும் தன்மானத்தைத் தேடி அவைகளை நிராகரித்ததற்காக.



## ஞான திராட்சை!

ஓர் இளைஞன் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரிடம் சென்று "சுலபமாக ஞானம் பெற வழி என்ன?" என்று கேட்டான்.

"தினமும் கீதையைப் படி. நிவேதனம் செய்த பிறகு திராட்சைப்பழம் சாப்பிடு" என்று உபதேசம் செய்தார்.

"தினமும் எவ்வளவு திராட்சைப் பழம் நிவேதனம் செய்து சாப்பிட வேண்டும்?" என்றான் அந்த இளைஞன்.

"தினமும் எத்தனை சுலோகங்கள் கீதையில் படிக்க வேண்டும் என்று கேட்டிருந்தாயானால் உனக்கு ஞானத்தில் நாட்டம் இருக்கிறது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியும். எவ்வளவு திராட்சை நிவேதனம் செய்து சாப்பிட வேண்டும் என்றால் உனக்கு வயிற்று வலி பெறுவதற்குத் தான் தகுதி இருக்கிறது. இப்பொழுது ஞானத்தைப் பற்றிப் பேசாதே. போய் வா" என்றார் பரமஹம்சர்.

—தி. சரோஜா

பொதுவாக உள்ளத்தைப் பாதித்த சின்னக் கூண்டு ஒன்றை உடைத்துக் கொண்டு அங்கே உடலையும் பாதிக்கின்ற பெரிய கூண்டு ஒன்றிற்குள் போகப் போகிறாள். சபாஷ்.

நோ நோ. அவள் திடீரென்று வலது காலால் தரையை உதைத்தாள். இந்தப் பெரிய கூண்டையும் என்னால் உடைக்க முடியும். சும்மா கூண்டு விட்டுக் கூண்டு மாறிக் கொண்டிருக்கக் கலோசனு ஒன்றும் பூஜ்யம் அல்ல. எந்தக் கூண்டையும் கலோசனுவால் உடைக்க முடியும். முடியும். முடியும்.

ஒவ்வொரு 'முடியும்' விற்கும் அவள் தரையை உதைத்தபோது அங்கே வரதராஜுலுவைச் சுற்றி நின்றிருந்தவர்கள்எல்லாம் இங்கே பார்த்தார்கள். யாரோ ஒரு காவலர், "ஏட்டையா, செமத்தியாத்தான் பிடிச்சிருக்கு" என்றார்.

திடீரென்று ஒரு ஆள் கத்தினான். "ஏட்டையா உயிர் இருக்கு."

"என்னு?"

''ஆமா, ஒதடு அசையுது பாருங்க!''

இது காதில் விழ, கலோசனுவும் திரும்பிப் பார்த்தாள்.

அங்கு பெரும் பரபரப்பு. 'ஓடு, ஓடு, யாராச்சும் டாக்டன்ரக் கூட்டியா'

யாரோ இருவர் விரைந்தார்கள்.

ஒரு அரை நிமிஷம்.

''என்னமோ சொல்றுங்க.''

ஏட்டுவும் ரைட்டரும் குனிந்து வரதராஜுலுவின் உதட்டுக்கு வெகு அருகில் காது வைத்துக் கேட்டார்கள்.

''என்னமோ சொல்றாரே.... என்ன, சிலகாவா? அது என்ன சிலகா?''

இது காதில் விழுந்த சிலகா நிமிர்ந்து விரைத்து அந்த அறையைப் பார்த்தாள். என்ன சிலகாவா? எதற்காக சிலகா?

நொண்டிக் கணக்கன் இருந்தும் கெடுத்தான், செத்தும் கெடுத்தான என்ற கதையா? வாழ்கிற காலமெல்லாம் எவளேயோ தலை மேல் வைத்துக் கொண்டிருந்து விட்டு இப்போது போகிறபோது அம்மி மிதித்து வந்தவளை நெஞ்சில் கொண்டு போகப் போகிறயாக்கும். அல்லது போகிறபோது கூட உச்சரித்துக் கொண்டே போனுனே என்று பலர் பேசும் காதல் ஸ்தாபிதமா? அல்லது இந்த முட்டாள், இனி மீதி நாட்களை யெல்லாம், ஐயோ இந்தக் காதலனுக்குப் போய் இப்படிச் செய்தோமே என்கிற சுய சித்ரவதையால் குறுகிச் சாகட்டும் என்ற நினைப்பா?

அவள் மேஜை மேல் வைத்திருந்த துப்பாக்கியை மீண்டும் எடுத்துக் கொண்டு விடுவிடென்று இங்கே வந்தாள். அங்கிருந்த பரபரப்பில் யாரும் இவளைக் கவனிக்காது போகவே வசதியான இடைவெளியில் துப்பாக்கியை நீட்டி மீதி இரண்டு குண்டுகளையும் தீர்த்தாள். வரதராஜுலுவின் தலைமாட்டிலும் கால்மாட்டிலும் இருந்து ஏட்டுவும் ரைட்டரும் ஆளுக்கொரு திசையில் எகிறி விழுந்தார்கள்.

**லா**க்கப்பில் இருந்தவளை வந்து பார்த்த அம்மா அழுது புலம்பினுள். ''இப்பிடிப் பண்ணிட்டியே அம்மா. புருஷனையும் இழந்து கெட்ட பேரும் வாங்கிக்கிட்டியே அம்மா. அவளுக, ஒனக்கு எவன் கூடயோ பழக்கம் இருந்ததுனால இல்ல இப்பிடிப் பண்ணிட்டேனு சொல்றுங்களே. ஒன் பெரிய நாத்தினு என்னைக் கண்டதும் நடு ரோட்டிலே மண்ணை வாரித் தூத்தி சடு போடுருளே அம்மா. சாகுறப்பக் கூட என் தம்பி சிலகா சிலகான்னு சொல்லி யிருக்கானே; அதுகூட ஒறைக்கலியே நீ பெத்த தேவடியாளுக்குன்னு சொல்றுளே அம்மா.''

கலோசனுவிடமிருந்து பதில் இல்லை. பதில் வராது. அவள் அங்கிருந்தால்தானே கேள்வி பதில் எல்லாம்.

சிறிதும் பெரிதுமான இரண்டு கூண்டுகளையும் உடைத்துக் கொண்டு வெளியேறி, தனக்கெனத் தானே சிருஷ்டித்துக்கொண்டு விட்ட சுதந்திர வானத்தை நோக்கி எப்போதோ பறந்து போய் விட்டதே அந்தக் கிளி.

**(முற்றும்)**

# துந்துபி புத்தாண்டுக்கு நல்வரவு!

துந்துபி புத்தாண்டில் தூய மகிழ்ச்சியும்
வளம் நிறை வாழ்க்கையும்
யாவரும் பெற்றிட மக்கள் நலனே
சீர்மிக்க சேவையென பணியாற்றிவரும்
டி ஐ நிறுவனம் வாழ்த்துகின்றது!



**டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்**

சென்னை : 600 001

சைக்கிள்கள், சைக்கிள் சீட்டுகள், செயின்கள்,
டைனமோ லாம்ப் செட்டுகள், எஃகு குழாய்கள்,
எஃகு ஸ்டிரிப்புகள், மெட்டல் செக்ஷன்கள்
மற்றும் 'Z' பர்லின்கள் தயாரிப்பாளர்கள்.

Imageads M-TI- 1535 Tam

# இதோ ஒரு கிராமம்:

# திட்டமிட்டா வளருது திட்டச்சேரி?

இட்டச்சேரி முஸ்லிம் மெஜாரிட்டியினர் நிறைந்தது. ஆகவேதான் இக்கிராமம் திட்டச்சேரி, கொந்தை எனும் இரண்டு பிரிவுகளாகக் காணப்படுகிறது. திட்டச்சேரியில் முஸ்லிம்களின் ஆதிக்கமும், கொந்தையில் இந்துக்களின் ஆதிக்கமும் காணப்படும் — அந்நாளில். ஆனால் இன்று? இந்து முஸ்லிம் ஒற்றுமையின் சின்னமாகத் திட்டச்சேரி விளங்குகிறது. இரு மதத்தவரும் ஒருவரோடொருவர் சகோதர பாசத்துடன் பழகுவதை இங்கு காண முடியும். பள்ளிவாசல் விழாக்களில் இந்துக்கள் பெருமளவில் கலந்துகொள்வர். அதுபோலவே சென்ற ஆண்டு காஞ்சி காமகோடி ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் திட்டச்சேரி வருகை புரிந்தபோது முஸ்லிம்களும் அன்புடன் அவரை வரவேற்றனர்.

தஞ்சை மாவட்டத்தின் ஏனைய கிராமங்களைப் போலவே விவசாயமே திட்டச்சேரியின் உயிர்த் தொழிலாக விளங்குகிறது. ஆனால் விவசாயிகள் மகிழ்ச்சிகரமான வாழ்க்கை நடத்துகிறார்கள் என்று கூற முடியாது. திட்டச்சேரியைப் பொறுத்தவரை எந்த ஒரு விவசாயியும் நவீன சாகுபடி முறைகளைப் பின்பற்றத் தயாராக இல்லை என்பதை எண்ணும்போது வருத்தம் ஏற்படவே செய்யும். ஆனால் அதற்கான காரணங்களை அவர்கள் விளக்கும்போது நியாயமானதாகவே படுகிறது. திட்டச்சேரியின் பெரிய விவசாயிகளில் ஒருவராக விளங்கும் திரு வெங்கிடாசலம் என்பவர் சில புள்ளி விவரங்களுடன் விவசாயத்தில் ஏற்படும் இன்னல்களை எடுத்துக் கூறியபோது அவர்களை நினைத்து நாம் அனுதாபப்படவேண்டியிருக்கிறது.

பத்தாண்டு கால வளர்ச்சியில் திட்டச்சேரியில் கல்வி கற்பவர்களின் எண்ணிக்கை பன்மடங்கு உயர்ந்திருக்கிறது. முதலியார் தெரு (கொந்தை) என்னும் ஒரு தெருவில் மட்டும் ஏறத்தாழ பத்துப் பட்டதாரிகள் உருவாகியிருக்கிறார்கள். முஸ்லிம்களில் பெரும்பான்மையோர் பட்டதாரிகளாகக் காட்சியளிப்பதும் களிப்புற வேண்டிய ஒன்று. முஸ்லிம் பெண்களில் ஒருவர் டாக்டராகி சவூதி அரேபியா சென்றிருப்பதும் ஒருவர் வக்கீலாகி இருப்பதும் ஆனந்தப்பட வேண்டிய விஷயம் அல்லவா? திட்டச்சேரி சன்றெடுத்த திரு பாலபாஸ்கரன் என்னும் இளைஞர் இன்று சென்னை ஐ.ஐ.டி. ஹைட்ரோ டர்போ மெஷின் பிரிவில் விரிவுரையாளராக இருப்பதும், சமீபத்தில் மேற்படிப்பிற்காக அவர் இங்கிலாந்து சென்று வந்ததும் எங்கள் ஊருக்கே பெருமை.

படித்துப் பட்டம் பெற்று வேலை இன்றி இருக்கும் இளைஞர்கள் தங்களுக்குள் ஓர் ஒற்றுமையை வளர்த்துக் கொண்டு ஊர் நலனுக்காகப் பாடுபடுகின்றனர். ஊழல் செய்த ஊராட்சி அதிகாரி ஒருவரை சட்டத்தின் முன் கொண்டு வந்து நிறுத்திய இந்தப் பட்டதாரிகளைப் பக்கத்து ஊரில் இருப்போரும் பாராட்டுகிறார்கள். தனியார் பேருந்து ஒன்றில் முஸ்லிம் பெண்களை




அந்தப் பேருந்து நடத்துனர் சிலர் கிண்டல் செய்ததை ஆட்சேபிக்கும் வண்ணமாகத் திட்டச்சேரியைச் சார்ந்த யாரும் அந்த பஸ்ஸில் ஏறுவது இல்லை என ஒட்டு மொத்தமாகத் தீர்மானம் செய்து, ஒரு வாரத்துக்கு மேல் புறக்கணிப்பு செய்து, அவர்களை மன்னிப்புக் கேட்கச் செய்ததை யாராலும் மறக்க முடியாது. திட்டச்சேரியைச் சேர்ந்த அரிஜன இளைஞர் திரு செந்தமிழ்ச் செல்வன் இன்று கஸ்டம்ஸ் கலெக்டராக வீற்றிருப்பதிலிருந்து இங்கு எல்லா ஜாதியினரும் சீராக முன்னேறியிருக்கிறார்கள் என்று விளங்குகிறது.

இளைஞர்களில் பெரும்பான்மையோர் இந்துவாக இருப்பினும் முஸ்லீமாக இருப்பினும் வெளி நாடு செல்ல முயற்சி செய்து கொண்டிருப்பது இங்கு அதிகமாகஇருக்கிறது துபாய், குவைத், ஈரான் போன்ற நாடுகளின் பெயர்கள் இங்கு சர்வ சாதாரணமாக அலசப்படுகிறது. தினமும் 10 பேர் வெளி நாட்டிலிருந்து வருவதும் 10 பேர் போவதுமாக இருக்கிறார்கள். இதனால் பணப் புழக்கம் அதிகமாகியிருக்கிறது. திட்டச்சேரியில் இயங்கும் ஒரே வங்கியான பாங்க் ஆஃப் தஞ்சாவூர்க் கிளையில் ஒரு நாளைக்கு நூற்றுக் கணக்கான வெளிநாட்டு டிராப்டுகள் வந்து குவிகின்றன.

திட்டச்சேரியில் ஏற்பட்டிருக்கும்இவ்வளவு மாற்றங்களை எழுதும்போது அதன் குறைகளையும் கூறத்தான் வேண்டும். இவ்வளவு பட்டதாரிகளையும் உருவாக்கிய உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைந்து வருவது அதிர்ச்சி தரத் தக்கதாக இருக்கிறது. இதற்

குக் காரணம் படித்த பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குத் தரமான கல்வி வேண்டுமென்றால் அதனை அந்த அரசு உயர்நிலைப்பள்ளியில் பெற முடியாது என்று கருதுவதுதான். ஆகவே இவர்கள் தங்கள் குழந்தைகளைப் படிக்க வைக்க காரைக்காலுக்கோ, நாகப்பட்டினத்துக்கோ அனுப்பி விடுகிறார்கள். இந்நிலை காரணமாகத் திட்டச்சேரியின் திறமை மிகு இளம் வக்கீல்களில் ஒருவரான திரு சேக்லாவுதீன் போன்றோர் முயற்சி செய்தும் ஹையர் செகண்டரி ஸ்கூலாக இதனை மாற்ற இயலவில்லை.

திட்டச்சேரி மக்களை இன்று மிகவும் பாதித்திருக்கும் விஷயம், முஸ்லிம்களுக்குள் ஏற்பட்டிருக்கும் ஒரு சிறு பிளவு. திட்டச்சேரி ஜமாஅத்தின் முன்னாள் தலைவர் திரு கபூர் அவர்களுக்கும், திரு முகம்மது தம்பி என்பவரின் தலைமையில் ஏற்பட்டிருக்கும் அதிருப்தியாளர்களுக்கும் ஏற்பட்டிருக்கும் பூசல் ஊர் ஒற்றுமையைக் குலைத்துவிடுமோ என எல்லோரும் அஞ்சுகிறார்கள். திட்டச்சேரி ஊராட்சியின் முன்னாள் துணைத் தலைவரும், இரக்க மனம் கொண்ட இனிய மனிதர் என்று எல்லோராலும் போற்றப்படும் திரு வைத்தியலிங்க முதலியாரின் தலைமையில் சமாதானப் பேச்சுக்கள் நடந்து வருகின்றன. இப்பேச்சுக்கள் வெற்றிபெற்று ஊர் ஒற்றுமை காக்கப்பட வேண்டும் என்று அனைவரும் விரும்புகின்றனர்.

ஒற்றுமையுடன் எவ்வளவோ காரியங்களைச் சாதித்திருக்கும் திட்டச்சேரி மக்கள் எவ்வளவோ போராடியும் எம். பி. பி. எஸ். படித்த டாக்டர் ஒருவரை அரசாங்க மருத்துவமனைக்குக் கொண்டுவர இயலவில்லை. இந்த டாக்டரில்லாக் குறையினால் மக்கள் அவதியுறுவது கண்கூடு. திட்டச்சேரியிலேயே உருவான மூன்று நான்கு டாக்டர்கள்தான் இன்று அரசு வேலையில் இருப்பதால் இப்பொழுது உருவாகிக் கொண்டிருக்கும் மாணவர்களில் யாராவது ஒருவராவது திட்டச்சேரியிலேயே தங்களுடைய கிளினிக்கை அமைத்துச் செயல்பட வேண்டும் என்பது இவ்வூர் மக்களின் விருப்பம்.

திட்டச்சேரியின் இந்து மக்கள் வருந்தக் கூடிய விஷயம் ஒன்று இருக்கிறது. இவ்வூர் பெருவுடையார் கோவிலின் கும்பாபிஷேகம் தடைப்பட்டிருப்பதுதான் அது. இதன் பரம்பரை நிர்வாக டிரஸ்டியாக விளங்கிய திரு இராஜகோபால் முதலியார் அவர்களின் பெரு முயற்சியில் கும்பாபிஷேக வேலைகள் தொடங்கப்பட்டது. ஆச்சாரிய சுவாமிகள் இக்கோயிலுக்கு விஜயம் செய்து ஆசி அருளினார்கள். அதன் பிறகு அரசு இட்ட சட்டங்களின் காரணமாகப் பரம்பரை டிரஸ்டி முறை ஒழிக்கப்பட்டதால், கும்பாபிஷேக வேலைகள் பாதிக்கப்பட்டு, கோயில் பரிதாபகரமாகக் காட்சி அளிக்கிறது.

ஒரு டூரிங் டாக்கீஸ், நூலகம், கூட்டுறவு சங்கம், மற்றும் வசதியில்லா மருத்துவமனை என்று ஏனைய கிராமங்களைப் போலவே திட்டச்சேரியும் திகழ்ந்தாலும், ஊரின் வளர்ச்சி இப்பத்தாண்டுகளில் இதயத்துக்கு இதமூட்டுவதாகவே இருக்கிறது.

-கோ. வை. அரங்கநாதன்



# டிரம்ப் கார்ட்

கடமைக்கும் பாச உணர்வுக்கும் ஏற்படுகிற மோதல்தான் நாடகத்தின் கரு. பெண் மீதுள்ள பாசத்துக்காகக் கடமையைத் துறந்து இறுதியில் தானே முன்வந்து குற்றவாளியாகச் சரணடைகிறார் ஜெயில் சூப்பிரண்ட். ''முள் ரோஜாவுக்குப் பாதுகாப்பாக இருக்க வேண்டுமே தவிர; ரோஜாவையே அழிக்கக் கூடாது. அதுபோலத்தான் சட்டமும் மனித குலத்துக்கு'' என்று தத்துவம் பேசுகிறார். இடைவேளை வரைக்கும் என்ன நேருமோ என்கிற நிலை உண்டுபண்ணி அப்புறம் தொய்ந்து விழுந்து விடுகிறது. ஆங்கிலத் தலைப்பைக் கொண்ட இந்தத் தமிழ் நாடகம். காரணம் கதாசிரியர்தான்!

முருகனாக நடித்த முத்துவை நிச்சயம் பாராட்டியாக வேண்டும். குரலிலும் சரி, முக பாவத்திலும் சரி, பயத்தையும் கெஞ்சல் தோரணையையும் இயல்பாக வரவழைத்து நடித்தார். ஜெயில் சூப்பிரண்டாக வந்த பிரபுவுக்குத் தோற்றம், குரல், மிடுக்கு எல்லாம் பிளஸ் பாய்ண்டுகள்தான். மகளை ஒருத்தன் கிட்நாப்செய்து விட்டான் என்கிற செய்தியை மறைப்பதற்காகப் பொய்க்கு மேல் பொய்யாகச் சரமாரியாகச் சொல்லிக் கொண்டே போகும் இடத்தில் நன்றாகச் செய்திருக்கிறார்.

தமிழ் நாடகத்துக்கே உரிய அபத்தமான வில்லி ஜோக்குகளும் உண்டு. ''அவர் ஜான் கென்னடி; இவன் சாண் (உயர) கென்னடி!'' அரசியல் வாதிகளைச் சாடுகிற வசனங்களும் இல்லாமல் இல்லை. ''கொள்ளைக்காரனாக மாறப் போகிறேனென்று சொன்னான்; இப்போ எம். எல். ஏ. ஆக இருக்கிறான்!''

சோ மாதிரி சமூக அநியாயங்களைச் சாடும் ஆவேசமும், பாலச்சந்தர் போல் புதிய டெக்னிக்குகளைக் கையாளும் ஆர்வமும் பிரபுவுக்கு இருப்பது தெரிகிறது. அந்த ஆவேசமும் ஆர்வமும் வெற்றி பெற இன்னும் அழுத்தமான கதையும் வலுவான வசனங்களும் அவசியம். -தமயந்தி

# தெரிந்த தொழிலைத் தொடங்குவோமே?



பெயர் : என். ஏகாம்பரம்

தகுதி : பி.எஸ் ஸி (இரசாயனம்)

விலாசம் : 170, கடைத்தெரு, கலவை-632506

கட்டுரையில் வேதனையான தம் அனுபவங்களைக் கூறும் இந்த வேலையில்லாப் பட்டதாரி மனம் கசந்து அமர்ந்து விடவில்லை. கூட்டாகத் தொழில் தொடங்க நண்பரைத் தேடுகிறார். ஒத்துழைக்க முன் வருவோர் நேரடியாக அவருடன் தொடர்பு கொள்ளலாம்.

**பி.** எஸ் ஸி. படிக்கும்போதே படித்து முடித்தவுடன் சொந்தமாகத் தொழில் தொடங்க வேண்டும் என்பது என் ஆசை. படித்து முடித்தவுடன் போதுமான நிதி வசதியில்லை. அதனால் சிறிது காலம் வேலைக்குச் சென்று சம்பாதிக்கலாம் என்றெண்ணி வேலை தேடும் முயற்சியில் இறங்கினேன். விழுப்புரத்தில் உள்ள எம். வி. எஸ். வனஸ்பதி ஆலையில் 'கெமிஸ்ட்' வேலை கிடைத்தது. மகிழ்ச்சியுடன் நேர்முகத் தேர்வுக்குச் சென்றேன். முதல் வகுப்பில் தேறியவர் அனைவரும் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. பின்னர் ஓர் ஒப்பந்த ஃபாரம் கொடுத்துச் சம்மதித்துக் கையொப்பமிடச் சொன்னார்கள். குறைந்த சம்பளம் மற்றும் குறிப்பிட்ட காலம் அங்கேயே வேலை செய்ய வேண்டும் என்ற கட்டாயம் இவை பிடிக்காமல் வேலையில் சேராமல் ஊருக்குத் திரும்பி விட்டேன். பின்னர் பெற்றோரின் திருப்திக்காக வேலை தேடியதுண்டு. இடையில் எங்களது மளிகைக் கடையையும் தந்தை மற்றும் சகோதரனுடன் கவனித்து வந்தேன். நாளடைவில் இங்கும் சம்பாதித்துக்கொண்டுதான் இருக்கிறோம், வேலையில் சேர்ந்தாலும் சம்பாதிக்கத்தான் போகிறோம் என்று எண்ணி வேலை தேடுவதையே விட்டு விட்டேன்.

ஆனால் இடைவிடாமல் சொந்தமாகத் தொழில் தொடங்குவதற்கான முயற்சியில் ஈடுபட்டேன். சென்னை கிண்டியில் உள்ள சிறு தொழில் சேவை நிறுவனம், அதன் நூல் நிலையம், தேவி தியேட்டர் கட்டிடத்தில் உள்ள மத்திய அரசின் சிறு தொழில் தகவல் நிலையம் இவற்றுக்கு அடிக்கடி சென்று விவரம் சேகரித்து வருகிறேன். போதுமான பணமும் விவரங்களும் சேர்ந்தவுடன் எனது தொழில் துவங்கும் திட்டத்தைச் செயல் படுத்துவேன்.

என்னுடைய லட்சியம் சொந்தமாகத் தொழில் செய்து அதன் மூலம் உயர்ந்து பெரிய தொழிலதிபராக வேண்டும் என்பது தான். என்னுடைய லட்சியம் நிறைவேறும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

என்போன்ற வேலையற்ற பட்டதாரிகளும் இது போன்ற முயற்சியில் ஈடுபடுவது நல்லது என்பது என் கருத்து. அவ்வாறு தொழில் துவக்க முன் வருபவர்களுக்கு எனக்குத் தெரிந்தவரையில் விவரங்கள் கொடுத்து ஆலோசனை கூறுவதற்கும் தயாராய் இருக்கிறேன். கூட்டாகத் தொழில் தொடங்க வருவோரும் என்னை அணுகினால் அதற்கேற்பத் திட்டம் தயாரித்து அமல் செய்யவும் நான் தயார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

-என். ஏகாம்பரம்

மானேஜர் : ''உன் கல்யாணத்துக்கு ஏம்பா எனக்கு அழைப்பிதழ் தரலே?''

கிளார்க் : ''நீங்க வந்து நின்னு காரியம் கெட்டுப் போகும் ஸார்! இந்தக் கம்பெனிக்கு நான்தான் மானேஜர்னு சொல்லிக் கொழுத்த டௌரி வாங்கியிருந்தேன் பெண் வீட்டாரிடம்!''

-உ. ராஜாஜி



# உங்கள் புதிய ஜான்ஸன் மிக்சர் கிரைண்டர் வேலை செய்யும் பொழுதே சூடான இலவச டிகாக்ஷன் காபி!

## JOHNSON®

## மிக்ஸர் கிரைண்டர்

## இதோ! இப்பொழுது

## ரூ. 85 மதிப்புள்ள இலவச பரிசுகள்




முன்னதாகவே
வாங்கிடுவீர் இந்தச் சலுகை
ஸ்டாக் இருக்கும் வரை மட்டும்.



இன்ஸ்டன்ட் காபி
பர்கொலேட்டர்

**JOHNSON®** தென் இந்திய சமையலுக்கும் ஏற்ப மிக உறுதியானது



# வாழ்க எம்.எல்.ஏ.க்கள்!

'628'

படத் தயாரிப்பாளர் அந்த ஏ.ஸி. அறையில் உட்கார்ந்திருந்தார்.

கதவைப் படாரென்று திறந்துகொண்டு உள்ளே நுழைந்தார் கதாசிரியர்.

''அண்ணே! நம்ப படத்துல எம். எல்.ஏ. பத்தி வர சீனெல்லாம் கட் பண்ணனும்.''

''ஏன்?''

''எம்..எல். ஏ.க்களை சினிமாவில இன்டல் பண்ணினு நடவடிக்கை எடுப்போம்னு துணை சபாநாயகர் சொல்லி இருக்கார்.''

''நம்ப படத்துலே அவங்களைக் இன்டல் பண்ணலியே?''

''எங்கே எம். எல். ஏ. சம்பந்தமா நீங்க செட் பண்ணின சீன் எல்லாம் சொல்லுங்க''

''பட ஆரம்பத்திலே ஒரு எம். எல். ஏ., தான் ஜெயித்த தொகுதிக்குப் போய் மக்களைச் சந்திக்கிறாரு.''

''இந்த மாதிரி இன்டல் பண்ணினு ஒத்துக்கவே மாட்டாங்க. கண்டிப்பா நடவடிக்கை எடுப்பாங்க. அடுத்த சீன்?''

''அடுத்த சீன்ல குழாயடியிலே இரண்டு பொம்பளைங்க ''நான்தான்டி தமிழ்ப் பொம்பளை. நீ தண்ணி புடிக்க எங்க ஊருக்கு வந்தவ. ஓடு உங்க ஊருக்கு. கழுதை. நாயே. சோமாறி''ன்னு திட்டிக்கிட்டு இருக்காங்க. அந்த வழியா வர்ற எம். எல். ஏ. இப்படியெல்லாம் தரக் குறைவா பேசக் கூடாதுன்னு அவங்களைத் திருத்தறாரு.''

''ஆனாலும் நீங்க இவ்வளவு ஒப்பனு எம். எல். ஏ.க்களைக் இன்டல் பண்ணக் கூடாதுங்க. சட்ட சபையில அவங்க பேசறதை அப்படியே உல்ட்டாப் பண்ணிட்டீங்களே? பேசாமக் கட் பண்ணிடுங்க!''

''என்ன இது அநியாயமா இருக்கே? எம்.எல்.ஏ.வை நல்லவிதமாத்தானே காட்டியிருக்கேன். அது தப்பா?''

''நீங்க சொன்னவரை கட் பண்ணித்தான் ஆகணும். அடுத்த சீன் எப்படி?''

''ரஜினிகாந்த் படத்துக்கு டிக்கட் கிடைக்காத காரணத்தாலே,ஹீரோயின் தன் தோழிகளோட, தெரிஞ்சவங்க மூலமா சட்ட சபை நிகழ்ச்சிகளைப் பார்க்கப் போறா!''

''ரொம்பத் துணிச்சல் அண்ணே உங்களுக்கு! படத்துல வர்ற ஸ்டண்ட் காட்சிகளை விட சட்டசபையில் ரொம்ப த்ரில்லிங்கா இருக்கும்னு நாசுக்காக் காட்டியிருக்கீங்களே? பேசாம இதை யெல்லாம் கட் பண்ணிடுங்க. எதுக்கு வம்பு? வேற ஐடியா செட் பண்ணிக்குவோம்.''

''நல்ல கருத்துக்களைப் படத்துல சொல்லவே முடியாது போல இருக்கே?''

''ஏங்க முடியாது? ஒரு போலீஸ்காரர், இன்ஸ்பெக்டர் காமெடி செட் பண்ணிக்குவோம். யாரும் ஒண்ணும் சொல்ல மாட்டாங்க. போலீஸ்காரங்களை எவ்வளவு வேணு மானாலும் இன்டல் பண்ணலாம். எம்.எல் ஏங்களைத்தான் பண்ணக் கூடாது. என்ன?''

''ஆனா நெறையப் படத்துலே போலீஸ்காரர் காமெடி வந்துடுச்சே!''

''அப்ப இருக்கவே இருக்காரு கோயில் குருக்கள்.''

''எப்படி?''

''கோயில் குருக்கள் என்ன பண்ணுவாரு சொல்லுங்க?''

''பூஜை பண்ணுவாரு.''

''இதாங்க உங்களுக்கு அவார்டு கிடைக்க மாட்டேங்குது. சாதாரணமா கோயில் குருக்கள்ஒரு ஹரிஜனப்பெண்ணைத்தான்வளப் பாரு. அந்தப் பொண்ணுக்கும் குருக்களுக்கும் ஒரு மாதிரி இதுன்னு முடிவு பண்ணி ஜனங்க அவரைக் கல்லால அடிக்கறாங்க. வெறுப்பிலே அவர் 'பார்'லேபோய்த்தண்ணி அடிச்சுட்டு காபரே பாக்கறாரு. பயங்கரமா போவுங்க இந்தக் காமெடி.''

''நல்லா வரும்போல தோணுதே!''

''நல்லா வருங்க. ஆனா ஒண்ணு. புதுமை பண்றேன்னு வேற கோவில்களைக் காட்டிடாதீங்க. இந்துக் கோயில் மட்டும் வெச்சுக்குங்க.யாரும் கேள்வி கேட்கமாட்டாங்க.''

''சரி, அப்ப நாளைக்கு எழுதிடுவோம்.''

''சரி அண்ணே!''

# வட்ட மேஜை

மருத்துவத் துறை சந்திக்கின்ற மிகப் பெரிய பிரச்னைகளில் புற்றுநோய் ஒன்று. புற்று நோய் ஆராய்ச்சிக்கும் அதனைக் கட்டுப்படுத்தும் முயற்சிக்கும் ''புற்று நோய் பதிவு'' இன்றியமையாதது.

சென்னை நகர வாசிகளில் புற்று நோய் யாரை யெல்லாம் தாக்கி யிருக்கிறதோ— பழைய புதிய கேஸ்கள் எதுவாயினும் — அவர்கள் எல்லோரும் சென்னை அடையாறில் உள்ள கான்ஸர் இன்ஸ்டிடியூட்டில் அது பற்றிய விவரங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன். இது தேசிய அளவில் நடக்கிற புள்ளி விவரச் சேகரிப்பின் ஓர் அங்கமே. நீங்கள் தரும் தகவல்கள் ரகசியமாகவே காக்கப்படும். மருத்துவத் துறையினர், மக்கள் ஆகிய இரு சாராரின் ஒத்துழைப்பையும் வேண்டுகிறேன்.

சென்னை-600020 டாக்டர் வி. சாந்தா
இயக்குனர், கான்ஸர் இன்ஸ்டிடியூட்

மடிப்பாக்கத்தைப் பற்றிய கட்டுரை படித்தேன். இவ்வூர்முன்னேற்றத்துக்குப்பாடு பட்டு வருபவன் என்ற முறையில் சில விளக்கங்களைத் தர விரும்புகிறேன்.

வாணுவம்பட்டு அருகில் உள்ள கல்வர்ட் எங்கள் சங்கத்தின் முயற்சியால் இப்போது புதுப்பிக்கப்பட்டுள்ளது. பரங்கிமலை ரயிலடி வரை உள்ள சாலையும் நேர்படுத்தப்பட்டுள்ளது.

பல்லவன் போக்கு வரத்தும் எங்கள் முயற்சிகளை ஊக்குவித்து எம்-11, எம்-15 எனும் மினி பஸ்களை விடுகிறது.

சாலைகளில் மின் விளக்கு வசதி யில்லை என்று கட்டுரையில் உள்ளது. ஆனால், நாங்கள் இங்குள்ள மக்கள் தங்கள் தெருவுக்குத் தேவையான மின் வசதி பற்றிக் கூறுமாறு கேட்டோம். இது குறித்து நாங்கள் அரசு அதிகாரிகளைச் சந்தித்து ஆவன செய்வதாகக் கூறியும் எவரும் இதுபற்றி எங்கள் சங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வரவில்லை.

எப்போதும் அரசாங்கத்தையே குறை கூறுமல் நாமும் சிறிது முயற்சி செய்தால் பல சாதிக்கலாம்.

சென்னை-91 கே. நந்தகுமார்
தலைவர், யூத் சாட்டிலைட் சங்கம்

இரண்டு மைனஸ் ஒரு பிளஸ் கதையில் கண்டது போல் இரத்தச் சேமிப்பு நிலையத்தின் தேவையான குரூப் ரத்தத்தைக் கடையில் போய் வாங்குவது போல் வாங்க முடியாது. ஒவ்வொரு பாட்டில் தரும்போதும் பேஷண்ட் ரத்தத்துடன் கிராஸ் மாட்ச் செய்து பொருந்தினால்தான் தருவார்கள்.. ஒரே குரூப்கூட ஒத்துக்கொள்ளாமல் இருக்கலாம் என்பதற்காக இந்த ஏற்பாடு.

திருநெல்வேலி எஸ். ராமநாதன்

'மணல் பாலம்' சிறு கதை படித்தேன். ஓர் உன்னதமான சிறுகதை. கதாபாத்திரங்களின் உணர்ச்சிப் போராட்டங்களுடன் அழகிய நடையில் பின்னி, மனத்தில் பதியும் வண்ணம் சிறப்பாகப் படைத்து விட்டார் கதாசிரியர் அரவிந்தன்.

மருதூர் வி. சுவாமிநாதன்.

ஓரிரு படங்களில் நடித்துவிட்டால் கர்வமும், ஆணவமும், மிகதற்பெருமை அடித்துக் கொள்ளும் இந்தக் காலத்துக் கலைஞர்களின் மத்தியில் அடக்கமும், ஒடுக்கமும், நீண்ட கால நடிப்பு அனுபவமும் கொண்ட பூர்ணம் விசுவநாதன் அவர்களின் பேட்டிக் கட்டுரை அவரைப் போலவே அழகாகவும் அடக்கமுடையதாகவும் இருந்தது!

ஈரோடு-10 மேஜர் தாசன்

விசிட்டர் அனந்தின் வரி விளம்பரங்கள் ஒன்பதும் ஏக டாப். ஜோசியம் கை ரேகை, எனது மொத்தச் சிரிப்பையும் வெளிக் கொணர்ந்து விட்டது. ஒரு பக்கம் சோ... மறு பக்கம் விசிட்டர் அனந்த்... போட்டி போட்டுக் கொண்டு அரசியலை அலசுகின்றனர்.

செம்பனார்கோயில் ஆர். நாகராஜன்

துரியோதனன் சாப்பிடுவதற்காக ஒரு கவளம் எடுத்தவுடன் தட்டில் உள்ள மீதி உணவு புழுக்களாக மாறிவிடும்படி ஒரு முனிவரின் சாபம் உள்ளபடியால்தான் அவ்வாறு ஒவ்வொரு தட்டிலும் ஒரு கவளம் சாதம் சாப்பிட்டதாக ஒரு கர்ண பரம்பரைச் செய்தி கேள்விப்பட்டிருக்கிறேன்.

மதுரை-20 ஆர். கிருஷ்ணமூர்த்தி

மாப்பிள்ளைப் பையன்: ''சற்று முன் உங்க பெண் பாடிய 'நீ ஷிஷங்கா யெனில்' பாட்டு என்ன ராகம்?''

பெண்ணின் அப்பா: ''ஜலதோஷ ராகம்! நானு நான் ஜலதோஷத்துடன் உங்களுக்காகக் குழந்தை கஷ்டப் பட்டு 'நீ இரங்காயெனில்' கற்றுக் கொண்டு பாடிக்காண்பித்தாள்!''

— உ. ராஜாஜி

# சாதாரண மனிதன்

## லக்ஷ்மி

### முன்கதை

சந்தியா பள்ளிக்கூட ஆசிரியையாகப் பக்கத்து டவுனில் வேலை பார்க்கிறாள். கிராமத்தில் அப்பா விட்டுப் போன வீடும் தோட்டமும்தான் அவளது சொத்து. கூட துணைக்கு விதவையாகி விட்ட அத்தை இருக்கிறாள். சந்தியாவின் இளைய அக்காவின் கணவன் குமரேசன் செய்வது மோட்டார் ரிப்பேர் வேலை என்றாலும், வாங்கல் விற்கல் போன்றதிலே மிக்க ஈடுபாடு உண்டு. கமிஷனுக்காக., கல்யாணத் தரகர் வேலையையும் ஏற்கிறார். சந்தியாவின் வீட்டை விற்று - அவளைக் கல்யாணம் செய்து வைத்து இருவகையிலும் கொஞ்சம் இடையே லாபம் தட்ட நினைக்கும் அவருக்கு கிராமத்தில் கிளினிக்கைத் துவக்கிய டாக்டர் கிரிதரனுடன் அவள் நெருக்கமாகப் பழகுவது பிடிக்காத விஷயமாகி விடுகிறது - கிரிதரனை வரதக்ஷிணை மூலம் பிரிக்க முயற்சி செய்கிறார். சந்தேகங்களை எழுப்பி... சந்தியாவின் மனத்தைக் குழப்பத் திட்டம் தீட்டுகிறார்.. சந்தியா சஞ்சலத்தில் உழல்கிறாள்..

### 14

சந்தேகம் என்பது பேயுமல்ல பிசாசுமல்ல — முகம் பளிச்சென்று தெரியாதபடி தூசி படிந்த பொம்மையைப் போலக் காட்சியளிக்கச் செய்யும் ஒரு மெல்லிய திரை. மனம் விட்டுப் பழகிவிட்டவர்களைப் பிரிக்கத் தானே இடையே எழும்பிவிடும் ஒரு மெல்லிய திரை.

அப்படித்தான் அன்று மாலை அவளுள் ஒரு கற்பனை உதயமாகியது. திங்கள் கிழமை மாலை அவள் பள்ளிக்கூடத்திலிருந்து வெளிப்பட்டு வழக்கம்போல் பஸ் நிலையத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தாள். அவளையுமறியாது ஏற்பட்டுவிட்ட அந்தப் பழக்கத்தில் சாலையின் எதிர்ப்பக்கம் நோக்கி மெல்லத் திரும்பினாள். திக்கென்ற உணர்வில் அவள் கண்களை ஏதோ ஒரு தூசிப் படலம் மறைத்துக் கொண்டுவிட்டது போன்ற பிரமையில் அதிர்ந்துபோய் நின்று விட்டாள்.

மோட்டார் சைக்கிளை எடுக்க வந்த கிரிதரன் பின்னால் வேகமாக ஓடிவந்த ஒரு இளம் நர்ஸைக் கண்டதும் நின்றுவிட்டான். கஞ்சியில் விறைத்துக்கொண்ட சீருடையில் சிறகு விரித்துப் பறந்து வந்த புறாவைப் போல அவள் ஓடிவந்த காட்சி மிகவும் அழகாகவே இருந்தது. — அவளும் பார்க்க அழகாக — இளமையாக இருந்தாள்.

தன் சீருடைப் பையிலிருந்து அவள் எதையோ எடுத்து அவனிடம் கொடுக்க அதை வாங்கித் தன் சட்டைப் பைக்குள் பத்திரப்படுத்திக் கொண்ட வண்ணம் அவன் நிதானமாக நின்று அவளுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான். அவளும் சூழ்நிலையை மறந்தவள் போல் தன்னை மறந்து அவனுடன் சிரிப்பும் பேச்சுமாக நின்றுகொண்டிருந்தாள். அந்தக் 'காட்சியை நேரில் கண்ட சந்தியாவின் நெஞ்சில் நெருப்புத் துண்டுகள்' விழுந்து விட்டன போன்றதொரு எரிச்சல். கிரிதரன் மீது அவள் கோபப்படவோ ஆத்திரப்படவோ அவளுக்கு என்ன உரிமை இருக்கிறது?...

ஆனாலும் ஏனோ ஆத்திரம் ஆவேசமாகப் பிசாசு உருவிலே மனத்தை ஆக்ரமிப்பதை உணர்ந்தாள்.

உடம்பு முழுவதும் கோபத்தில் நடுங்க—கால்கள் தள்ளாட, பின்னால் வந்த ஒரு மோட்டார் ஓட்டி ஹாரனைப் பலமுறை சப்திக்க, திடுக்கிட்டு விழிப்புற்றவள் போல ஓட்டமும் நடையுமாகப் பஸ் நிலையத்தை அடைந்தாள். அது சமயம் பஸ் வந்து நின்றதும் மறுபடி திரும்பிப் பார்க்க நேரமின்றிக் குபுகுபுவென்று உள்ளே புகுந்து கூட்டத்துடன் இடித்துக் கொண்டு ஏறிக்கொண்டாள். பஸ் கொஞ்ச நேரம் அங்கு நின்ற போதிலும் அவள் எதிர்ப்பக்கத்து ஜன்னல்ஓரமாகத் தள்ளப்பட்டு விட்டதால் மறுபடி அந்தச் சாலையின் எதிர் பக்கத்தைப் பார்க்க இயலவில்லை.

ஏமாற்றமும் கோபமு

மாகத்தான் அன்று அவன் வீடு திரும்பினான். காப்பியை ஒரே விழுங்கலில் முடித்துக் கொண்டு வழக்கத்துக்கு மாறாக வெகுநேரம் ரச்சைத் தண்ணீரைச் செம்பில் எடுத்துத் தலையில் ஊற்றிக் கொண்டு குளியல் அறையில் உட்கார்ந்திருந்தாள்.

அந்த அண்டாவில் நிறைந்து வைத்திருந்த அத்தனை தண்ணீரை மேலே ஊற்றிக் கொண்டும் உடல் முழுதும் இன்னமும் நெருப்பாக எரிவதை உணர்ந்தாள்.

அத்தான் குமரேசன் அவர்களது வீட்டை விற்க முயன்றபோது ஏற்பட்ட ஆத்திரத்தை விட, செல்லக்குட்டியையும், அதன் கன்றையும் பிரித்து விற்றுவிட உபதேசிக்கப்பட்ட போது எழுந்த கோபத்தை விட அவளுக்காக வரன்களைத் தேடிக் கொண்டு வந்து அத்தான் வம்புக்கிழுத்தபோது அவள் மனத்தில் பொங்கிப் புரண்ட ஆவேச உணர்வைக் காட்டிலும் கிரிதரனுக்கு ஏற்கனவே வேறு ஒரு பெண்ணிடம் தொடர்பு உண்டு என்று அத்தான் விதைத்த அந்த விஷ வித்தின் வேகம்... அவள் அன்று கண்ட காட்சி இரண்டும் மனத்தில் புயலாக ஒரு கோபத்தைக் கிளப்பி விட்டிருந்தன.

கிரிதரன்மீது இவ்வளவு கோபம் கொள்ள அவளுக்கு என்ன உறவு, உரிமை இருக்கின்றன?

அந்த வீடு தோட்டம், மாடு கன்று, ஸாம்சன் என்று எல்லாவற்றின் மீதும் அவள் வைத்திருந்த தீவிர அன்பைக் காட்டிலும்... அத்தை மீது அவளுக்கிருந்த ஆழமான பாசத்தை விட ஒருசில நாட்களுக்குள் ஏற்பட்ட பழக்கத்திலே அவளுக்குக் கிரிதரன் மேல் இத்தனை ஆழமான ஒரு காதலா?

தெரியாமலா கவிஞர்கள் வர்ணித்திருக்கிறார்கள்? தன்னுடைய தீவிரமான அன்பு நிராகரிக்கப்பட்டால் அந்தப் பெண்ணின் மனம் நரகத்தின் தீயைவிடக் கொடுமையாக எரியும்....

கிரிதரன் வாய் திறந்து அவளிடம் இன்னமும் ஏதும் வெளிப்படையாகச் சொன்னதில்லை.

அவளாக அனுமானித்துக் கொண்ட காதல் அது போலியாகி விட்டது என்ற கோபத்தைத் தாங்க முடியாது... கையிலிருந்த செம்பைத்



தூக்கி மூலையில் ஓங்கி விசிறிப் போட்டு விட்டு மேலே போர்த்தியிருந்த ஈரத் துண்டிலிருந்து நீர் சொட்டச் சொட்ட... அத்துடன் போட்டியாகக் கண்களில் நீர் கொட்டக் கொட்டக் குமுறி அழுதபடி அவள் குளியலறை மேடையின் ஓரத்திலே சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தாள்.

''சந்தியா! இருட்டிப் போச்சே... பூஜை விளக்கை ஏற்ற வேணுமா?'' — அத்தை சமையல் அறையிலிருந்து குரல் கொடுத்த போதுதான் உலகத்து நினைப்பு வந்தது. அவசரமாக மாற்றுப் புடவை அணிந்து கொண்டு ஈரத் தலையைத்துவட்டி — துவாலையுடன் பெரிதாக முடிந்துகொண்டு வெளியே வந்தாள். பூஜை விளக்கை ஏற்றிவிட்டு, பாடங்கள் தயாரிக்க மேஜை அருகே வந்து உட்கார்ந்து கொண்டாள். குளத்திலே போட்ட கல்லால் சுற்றிச் சுற்றி வட்டமாக அலைகள் எழுந்து நீர் விளிம்பைத் தொட்டுக் கொண்டோடி வருவது போல் அவள் மனத்திலே எண்ணங்கள் அலை பாய — குறிப்புப் புத்தகத்திலே எழுத்துக்கள் நடனமாட அமைதி இன்றிப் பித்தம் பிடித்தவள் போலக் குமைந்தபடி வெகு நேரம் அமர்ந்திருந்தாள்.

அன்று இரவு பாயைத் தரை மீது விரித்துக்கொண்டு தலையணை மீது சாய்ந்த அவளுக்குத் தூக்கமே வரவில்லை.

வெகு நேரம் புரண்டு படுத்து அலுத்துப் போனவள் கையை மெல்ல நீட்டிப் பக்கத்திலே சற்றுத் தூரத்தில் படுத்திருந்த அத்தை ஜகதாவின் கரத்தை மெல்லத் தொட்டாள்.

விடுக்கென்று அத்தையம்மாள் எழுந்து உட்கார்ந்தாள்.

''தூங்கிட்டீங்கன்னு நெனைச்சேன்....'' சமாளித்தாள் சந்தியா.

''எப்படித் தூக்கம் வரும்? நானும் சாயங் காலம் பிடிச்சுப் பார்த்துக்கிட்டேதானே இருக்கேன்?.. குமரேசன் அத்தான் இங்கே வந்துட்டுப் போனதிலிருந்து உன் முகமே ரொம்ப மாறிப்போயிடுச்சு. என்னவோ இடி விழுந்துட்டாப் போல மூஞ்சியிலே ஒரு கலவரம். இன்னிக்குப் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தப்பவும் கவனிச்சேன்— ரொம்பக் கோபமாத் தெரிஞ்சே... பள்ளிக்கூடத்திலே என்ன தொந்தரவோ தொல்லைகளோன்னு பேசாம இருந்தேன். என் மேலே காட்ட முடியாத கோபத்தைப் பாவம் அந்தச் செம்பு மேலே தீர்த்துக்கிட்டே. தடால்னு சத்தம் கேட்டதென்னு நான் பயந்து போனேன். அன்னிக்கு அந்தப் பையன் வேடிக்கையாச்சொன்னது நிசமாயிட்டதோ? குளியலறைத் தொட்டி முற்றத்திலே இந்தப் பொண்ணு வழுக்கி விழுந்து தொலைச்சுடுத்தோ... நமக்கு எல்லாம் போராத வேளையா இருக்கேன்னு நடுங்கிப் போனேன். கையும் காலும் முழுசா நீ வெளியே வந்த பிறகு மெல்லப் போய் அறையை எட்டிப் பார்த்தேன். சொம்பு ஒரு பக்கமாய்க் கோணி லொடக்னு நசுங்கிப் போயிருக்கு! ஒரு பொண்ணுக்கு அப்பிடியா கோபம் வரும்? உங்கப்பனுக்குக் கோபம் வந்தாக் காப்பி டம்ளர் வாசலுக்குப் போயிடும். அவர் ஆண்பிள்ளை — ஆர்ப்பாட்டமா தமது கோபத்தைப் பொருட்படுத்திக்கிட்டு அட்டகாசமாய் வாழ்ந்துட்டு... நாலுபேர் கிட்ட நல்ல பேரும் பத்துப்பேர் கிட்ட முரட்டு மனுஷன் என்கிற பொல்லாப்பும் வாங்கிக் கட்டிக்கிட்டுப் போயிட்டார்.

''நீ இத்தனை ஒரு கோபக்காரியா, படபடன்னு பொரிஞ்சுக்கிட்டிருக்க முடியுமா? பெண் ஆச்சே?''

''ஆண் என்றால் கோவிச்சுக்கலாம்—எதை வேணாலும் செய்யலாம் தனி உரிமை இருக்கு. அப்படித்தானே சொல்ல வரீங்க?''

''புரியுது சந்தியா! நீ என்னத்தை மனசிலே வச்சுக்கிட்டு இப்படி ஒரு கோபத்திலே கொந்தளிக்கிறேன்னு எனக்கு நல்லாவே தெரிஞ்சுடுச்சு. சந்தியா! குமரேசன் சொன்னதைக் கேட்டுக்கிட்டுத்தானே நீ இப்படி ஆர்ப்பாட்டம் பண்றே? பாவம் அந்தப் பையன்!''

''அத்தை! நீங்க அவருக்காக ஒண்ணும் அனுதாபப்படத் தேவையில்லை. என் கண்களாலேயே நான் பார்த்தேன். இன்னிக்கு— அவர் அந்த பாலி கிளினிக்கிலே வேலை பார்க்கிற ஒரு இளம் நர்ஸ் பெண்ணோட ரொம்ப நெருக்கமாப் பேசிச் சிரிச்சுக்கிட்டிருந்தார். இப்படிப்பட்டவர் சென்னையில் இதே மாதிரி ஒரு காரியத்தைச் செய்துட்டு... ஏமாத்திட்டு ஏன் வந்திருக்க மாட்டார்?''

''சிரிச்சுக்கிட்டு ஒருத்தரோட பேசினா என்ன தப்பு? நானும் கேட்கிறேன்? ஒரு டாக்டருடைய தொழிலுக்குப் பொறுமையும் சிரிச்சுப் பேசற ஒரு நல்ல குணமும்தான் தேவை. சொல்லப் போனா ஒரு பொண்ணுக்குப் பொறுமை ரொம்பத் தேவை. மனுஷங்களைப் புரிஞ்சுக்கிற நிதானம் தேவை. வாத்யார் வேலை பார்க்கிற பொண்ணுக்கு அமைதியாச் சிந்திக்கிற மூளை ரொம்பத் தேவை....''

''அத்தை!....''

மனைவி: நாலு ஊர்களில் நடைபெறும் பொதுக்கூட்டங்களில் பேச வரும்படி கடிதம் வந்ததே... ஏன் போகலே?''

அரசியல்வாதி: நாலு ஊர்களின் பெயர்களும் திண்டுக்கல்... பழவந்தாங்கல்... திருத்தங்கல்... சிக்கல்னு கல்லில் வந்து முடியுதேன்னுதான்!''

—உ. ராஜாஜி



''இந்த மிரட்டல் என்கிட்டச் சாயாது. கிரிதரன் நல்ல பிள்ளை. உங்க ரெண்டு பேருக்கும் விருப்பம் இருந்தா குறுக்கே நான் நிக்க மாட்டேன். ரொம்பச் சந்தோஷப் படுவேன். — அந்த நல்ல நாள் சீக்கிரமா வரணும்னு எதிர்பார்ப்பேன்....''

''ஏற்கனவே அவருக்கு ஒரு...'' சந்தியா முடிக்கு முன் அத்தை அன்புடன் அவள் முதுகை மெல்லத் தட்டினாள். ''சரியான பைத்தியம் நீ — குமரேசனின் கதைகளை நம்பிக்கொண்டு வீணா ஆத்திரப்படறே. அப்படியே ஒரு ஆண்பிள்ளைக்கு ஏதோ முன்னே பின்னே ஒரு தொடர்பு இருந்துச்சுன்னு வச்சுக்கோ... அதனால குடியா முழுகிப் போகும்?''

''அத்தை! ஆண்பிள்ளைகளுக்கு ஒரு நீதி பெண்களுக்கு ஒரு நீதி என்று நினைச்ச உங்க காலம் மலையேறிப் போயிடுச்சு. என்வரை— என்னை விரும்புகிறவர் என்னைப் போல மனசாலும் உடலாலும் பரிசுத்தமானவராக இருக்கணும்....''

''உடல் பரிசுத்தமா இருக்கணும்னு வேணா ஒத்துக்கறேன். மனம் இருக்கே— அது ஒரு குரங்கு. அழகான பெண்களைப் பார்த்துக் கொஞ்சம் தாவி இருக்கலாம். உடனே அதன் பரிசுத்தம் அழிஞ்சு போச்சுன்னு சொல்லிட முடியுமா? அன்னிக்கு நீ உன் அத்தானோட தர்க்கம் பண்ணினியே-ஒரு ஆண் பிள்ளையோட பேசினா என்ன தப்பு... கற்பு காற்றிலே பறந்துடாதுன்னு அவரை மட்டம் தட்டினியே... அதையே உன் கிட்டே திருப்பிக் கேட்கிறேன். அழகான நர்ஸ் பெண் கிட்ட அந்தப் பிள்ளை மனம் விட்டுப் பழகினான்னு வச்சுக்கோ... அவளைக் காதலிச்சான்னுகூட வைச்சுக்கோ. மன அளவிலே மட்டும் இருந்த அந்த அன்பு கைகூடாக் காதலாப் போயிருந்தா அதுக்காக நீ அவன் மேலே ஆத்திரப்படுவதிலே நியாயம் என்ன இருக்கு? தன் வாழ்க்கையிலே நடந்த கஷ்டமான சங்கதிகளை உன்கிட்டப் பிட்டு வைக்கணும்னு அவனுக்கென்ன தலையெழுத்தா? உனக்குத் தெரியுமா சந்தியா! என்னைக் கட்டிக்கிட்ட உன் மாமன் சின்ன வயசிலே அப்படியும் இப்படியும் இருந்தவர்தான். ஆனால் என்னைக் கட்டிக்கிட்ட பிறகு என்னை ஒரு வகையிலும் சிறுமைப் படுத்தலே.... எனக்குத்தான் கொடுப்பினை இல்லே. அவரைப் பறி கொடுத்துட்டு இங்கே வந்துட்டேன்...அருந்ததி காலத்திலே வாழப் பிறந்தவள்தான். ஆனால் உன்னோட கூட ரொம்ப வருஷமாப் பல வருஷம் இருந்திட்டதாலே உன் முற்போக்குச் சிந்தனை என்னையும் தொத்திக்கிட்டிருக்கு.''

''என்ன அத்தை சொல்றீங்க?''

''அந்தப் பிள்ளையாண்டானைப் பத்தித் தெரிஞ்சுக்க'ணும்னு நீ அவனையே வெளிப்படையாக் குமரேசன் சொன்னதைப் பத்திக் கேட்டுடு... அதை விட்டுட்டு... அவன் கிரிதரன்யாரையாவது தேடிக்கேட்டா உண்மை வராது. நண்பன் விட்டுக் கொடுக்க மாட்டான். தங்கமானவன்... யோக்கியன் அப்படின்னு சப்பைக் கட்டுக் கட்டுவான். கிரிதரனுடைய விரோதிகள் யாரையாவது அண்டி விசாரிச்சா இல்லாததும் பொல்லாததும்தான் சொல்லுவாங்க. உண்மை வேணுமானா நேரிடையாக்கேட்கிறதுதான் முறை-''

''ஐயோ அத்தை... எனக்குப் பயமா இருக்கு....''

''மீசைக்கும் ஆசை, கூழுக்கும் ஆசைன்னு இருக்க முடியுமா? ஞாயிற்றுக் கிழமை இந்தப் பக்கம் வருவான். நீயே மெள்ளக் கேட்டுப் பாரு... என்ன பயம் வச்சிருக்கு?''

திடீரென்று சந்தியா சிரித்தாள். ''அத்தை நீங்க ரொம்பப் பொல்லாதவங்க. கொம்பைப் பார்த்தா அடுத்த வீட்டுக்காரர் பசு போலத் தெரியுது — வாலைப் பார்த்தால் எதிர் வீட்டுக்காரர் பசுவாகத் தோணுது என்று கோர்ட்டிலே வௌவால் சாட்சி சொன்னாப் பலே இரண்டு பக்கமும் பறிஞ்சு பேசறீங்க... உண்மையைச் சொல்லுங்க. நீங்க யார் பக்கம்?''

''எனக்கு உங்க ரெண்டு பேரையுமே பிடிக்கிறது. அதனாலே இரண்டு பக்கமும் பரிவு.''

அத்தை அப்படியே மெல்லப் படுக்கை மீது சாய்ந்தாள். சந்தியா இன்னமும் கெட்டியாக அத்தையின் கரத்தை ஆதரவுக்காகப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

அத்தை சொல்வது உண்மைதான். — அவள் பொறுமையாக — நிதானமாக சிந்தித்துப் பேசத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஒரு டாக்டருக்கு மனைவியாக ஆசைப்பட்டால் அதற்கு வேண்டிய தகுதிகளை முதலில் உருவாக்கிக் கொள்ள வேண்டும். பூரணமான — கலப்படமில்லாத — சந்தேகத்தின் களை இல்லாத நம்பிக்கை நிறைந்த அன்பு அவனுக்குத் தேவை.

அந்த அன்பு அவளிடம் இருக்கிறதா?... அத்தை கூறுவது போல வெளிப்படையாக அவரையே கேட்டுவிட்டால்?...

யோசித்தபடியே அத்தையின் கரத்தைப் பற்றியபடி சிறு குழந்தையைப் போல அவள் சிறிது பொழுதில் நன்றாகவே உறங்கிப் போனாள்.

(தொடரும்)







கல்லில் மலர்ந்த காவியம்: 11

# தாரமங்கலம்

தாரமங்கலம் ஒரு சிற்றூர். சேலம் மாவட்டத்தில் உள்ளது. அங்குள்ள கயிலாயநாதர் ஆலயம் ஒரு சிற்பக் கருவூலம். பல அழகிய சிற்பங்கள், அரிய வேலைப்பாடுகள் மிக்க தூண்கள், மேல் தளம் முதலியன காண்போர் கண்களையும் கருத்தையும் களிக்கச் செய்யும்!

முதலில் காண்பது மன்மதன் சிற்பம். இடக்கரத்தில் சுரும்பு நாணுடன் கூடிய கரும்பு வில்; வலக்கரத்தில் (தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் ஆகிய) பஞ்ச பாணங்கள். இப்படியாகக் கிளியின் மீது ஒய்யாரமாக வீற்றிருக்கும் மன்மதனின் காம்பீர்யம் நம் கவனத்தைக் கவர்ந்திழுக்கும்.

அடுத்தது தூண்களும், மேல் தளமும். அவற்றை நோக்கும் நாம் வியப்பில் ஆழ்ந்து விடுவோம். தூண்களில் உள்ள பல்வேறு உறுப்புக்கள், போதிகையின் வனப்பு, அதில் தொங்கும் சங்கிலி இவை எல்லாம் நம்மைத் திகைக்க வைப்பனவாகும்.

அதற்கு மேலே, அத்தூண்கள் தாங்கி நிற்கும் விதானத்தில்தான் எத்தனை வேலைப்பாடுகள்! அதில் உள்ள ராசி மண்டலம், கமல மலர், கிளிகள், சங்கிலிகள் எல்லாம் நம்மை ஒரே மலைப்பில் மூழ்கச் செய்துவிடும். தச்சனின் சிற்றுளி அத்தகைய அற்புத சாதனையைச் செய்திருக்கிறது.

நமது முன்னோர்கள் நமக்குப் பரம்பரைச் சொத்தாக அளித்துவிட்டுச் சென்றுள்ளது இந்தக் கலைப் பொக்கிஷங்கள். இன்றைய மதிப்பீட்டில் இச் சிற்பங்கள் பல கோடி ரூபாய்க்குச் சமம். இந்த அரிய பொக்கிஷத்தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி, வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம் கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப் படைப்பின் அடிப்படை தூய்மை என்னும் பக்தியும், நேர்மை என்னும் சக்தியும் தான்! அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றுவது நமது லக்ஷ்மி மில்ஸ். "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை செய்வதையே தனது தலையாய கடமையாகக் கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!

**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**

# ரவிகுல திலகன்

## செம்பியன்

### பூர்வகதை

சங்க காலச் சோழ மன்னர்களுக்குப் பிறகு பன்னெடுங்காலம் சோழர்கள் குறுநில மன்னர்களாகவே வாழ்ந்து வந்தனர். இந்நிலை மாறி சோழ தேசம் தனது பழம் பெருமையை அடைந்து சுதந்திர சாம்ராஜ்யமாக விளங்க வேண்டுமெனக் கனவு கண்டான் சிற்றரசன் குமாராங்குசன். இவனது குமாரன் விஜயாலயன் மாவீரனாக வளர்ந்தான். தலைநகர் பழையாறையில் ஒரு பெரும் தீவிபத்தின்போது மக்களைக் காக்கும் முயற்சியில் முகத்தில் தீத் தழும்புகளைப் பெற்றான். இதனால் முத்தரையர் குல மகள் உத்தமசீலியைப் பெண் கேட்டு அவர்கள் தலைநகர் சந்திரலேகைக்குத் தன் ஒற்றர் தலைவன் ஆகவமல்லனை விஜயாலயன் தூது அனுப்பியபோது, அவையிலிருந்த ஒரு தானைத் தலைவன் விஜயாலயனை விகாரமானவன் என ஏளனம் செய்ய, அது கேட்டு அந்தப் பேரழகியும் சிரித்துவிட்டாள். இதை அறிய வந்த விஜயாலயன் கடும் சினம் கொண்டு முத்தரையரின் ஒரு நகரமான தஞ்சையைத் தாக்கிக் கைப்பற்ற உறுதி பூண்டான்.

ஆனால் முத்தரையனும் சரி, சோழன் குமாராங்குசனும் சரி, பல்லவனுக்குத் திரை செலுத்தி வந்தனர். படையெடுப்பைப் பார்த்துக் கொண்டு பல்லவ சக்கரவர்த்தி வாளா இருப்பாரா என்ற கேள்வி எழ, அதற்கான சில திட்டங்களை வகுக்கிறான் விஜயாலயன்.

அவன் கானகத்தில் குவளையைக் கண்டு மையல் கொள்கிறான். ஆனால் அதே சமயத்தில் எழிலரசி உத்தமசீலியைக் கணப்போதும் தன் நினைவிலிருந்து அவனால் அகற்ற முடியவில்லை. ஓவியக் கலைஞருமான ஒரு புலவன், உத்தமசீலியை வண்ணச் சித்திரமாகவும் கவிதையாகவும் வடித்தெடுக்க அவை விஜயாலயனை மேலும் வருத்துகின்றன.

விஜயாலயனின் அன்பைப் பெறுவதைப் பெரும் பாக்கியமாகக் கருதும் குறிஞ்சி மகள் குவளையோ தன் கூட்டத்தாருடன் சேர்ந்து அவனுக்குப் பல விதங்களிலும் உதவுகிறாள். கானகத்தில் ரகசியப் படை திரள்கிறது.

ஒற்றர் தலைவன் ஆகவமல்லனைத் தன் முன் கோபத்தால் விஜயாலயன் விரோதித்துக்கொள்ள அவன் பல்லவ சக்கரவர்த்தியின் மாதண்ட நாயகர் பராசிரயனுடன் ரகசியத் தொடர்பு கொள்கிறான். இது பற்றித் தன் மெய்க் காவலனான சீனன் மூலம் அறிந்த விஜயாலயன் ஆகவமல்லனைச் சிறையிலிடுகிறான்.

சீனனும் குவளையும் அவள் தந்தை, தம்பி, தோழி ஆகியோரும் பாண்டியநாடு சென்று அங்கு சக்கரவர்த்தி ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனைச் சந்திக்கின்றனர். சில ஆபத்துக்களுக்கு உட்பட்டுத் தப்பும் அவர்கள் பாண்டியருக்கும் பல்லவருக்கும் இடையே தலைமுறை தலைமுறையாக இருந்து வரும் பகையைப் பயன்படுத்தி, சோழன் விஜயாலயனின் நோக்கங்களுக்கு உதவச் சில தந்திரங்களை ஸ்ரீமாறனிடம் கையாள்கின்றனர். அவை பலிக்குமா என்ற வினாவுக்கு இன்னும் விடை கிட்டாத போதே கூடல்மாநகரில் அவர்கள் தங்கள் முயற்சியைத் தொடர அனுமதித்துவிட்டு, நாம், சரித்திரத்தில் ஒரு திருப்பு முனையை உருவாக்கப் போகிற முக்கியமான நிகழ்ச்சியைக் காணச் சோழ நாடு திரும்புகிறோம்!

**14**

பழையாறையிலிருந்து தஞ்சைக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் அதிகமான போக்கு



வரத்து இல்லை என்றாலும், வண்டிகளிலோ குதிரைகளிலோ, அல்லது கால்நடையாகவோ பயணப்பட்ட சிலர் அன்று ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டார்கள். ஓர் அராபிய வாலிபன் உயர்ஜாதிப் புரவி மீது கம்பீரமாக அமர்ந்து, தனது தலையிலே கட்டியிருந்த பட்டானது காற்றிலே பின்புறம் நீண்டு படபடக்க வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்தான். அவனது விநோத தலையலங்காரமானது அவனது உச்சந்தலையையும் நெற்றியையும் கன்னங்களின் பெரும் பகுதியையும் காதுகளையும் மறைத்துப் பின்னால் நீண்டு படர்ந்தது. அது இடம் நழுவாதிருக்கப் பலமான இரட்டைக் கயிறுகள் அவன் நெற்றியையும் தலையின் பின் பகுதியையும் இணைத்துச் சுற்றி இறுகியிருந்தன. தலையிலிருந்து பின்னால் இறங்கிய வரிக் கோடுகளிட்ட அந்த நீண்ட பட்டு காற்றிலே படபடக்கையில் ஏதோ இளவரசனுக்கு உரிய ஆட்சிக் கொடி பறப்பது போலவே ஒளி சிந்தியது. பரந்த மார்பும், திரண்ட தோள்களும் உடைய அந்த இளைஞனின் உடலை மறைத்த உடையும்அராபியபாணியில்தொள தொளப்பான ஒற்றை ஆடையே. அவனுக்குப் பின்னால் வேறு ஐந்தாறு குதிரைகள் சேணமின்றி ஆனால் கடிவாளம் மட்டும் பூட்டப்பெற்று அவன் வேகத்துக்கு ஏற்பப் பாய்ந்தோடி வந்தன. அவற்றின் கடிவாளக் கயிறுகளை அவன் பற்றியிருந்ததால் மட்டுமல்லாது அவை மிகுந்த அறிவுள்ள ஜீவன்களாகத் தோன்றியமையாலும் அவனுடைய வேகத்துக்கு அனுசரித்துத் தங்கள்வேகத்தை நிர்ணயித்துக் கொண்டன. அவனுக்குச் சற்றும் சிரமம் தராமல் இயங்கின.



சாலையோடு சென்ற வழிப் பயணிகள் மட்டுமின்றி அவ்வப்போது கிராமங்களை அவன் கடந்தபோதும் மக்கள் அடங்கா ஆர்வத்துடன் அவனைப் பார்த்தனர். அவனை ஓர் அராபியக் குதிரை வியாபாரி என்று சிலர் உடனே புரிந்து கொண்டு மற்றவர்களுக்கு ஆர்வத்தோடு அதை உணர்த்தினர். இம்மாதிரி அராபியக் குதிரை வியாபாரிகளை உள்நாட்டில் பார்ப்பது அபூர்வம் என்றாலும் துறைமுகப்பகுதிகளில் அடிக்கடி காணலாம் என எடுத்துக் கூறினர். கேட்டுக் கொண்டவர்களோ இவ்வாறு உடையணிந்த மனிதனையும் சந்தித்ததில்லை; இவ்வளவு செழிப்பாக வளர்ந்த குதிரைகளையும் அறிந்ததில்லை. எனவே அவர்கள் ஆச்சரியம் அளவற்றதாக இருந்தது. சாதாரணமாக அராபிய வியாபாரிகள் கப்பலை விட்டுக் குதிரைகளை இறக்கியதுமே அவற்றைக் குதிரைச் செட்டிகளிடம் விற்றுவிட்டுத் திரும்பிவிடுவார்கள் என்றும், உள்நாட்டில் பல்வேறு தேச அரசர்களுக்கோ அல்லது பெரும் தனவந்தர்களுக்கோ அவற்றைக் கொண்டு சென்று விற்பது இந்தக் குதிரைச் செட்டிகளே என்றும், எனவே இது ஓர் அபூர்வக் காட்சிமட்டுமல்ல; ஏதோ முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிகழ்ச்சியும் கூட என்றும் அவர்கள் பேசிக் கொண்டனர்.

ஆறேழு குதிரைகள் குளம்பொலி எழுப்பி விரைந்ததால் உயர்ந்து எழுந்த கனத்த புழுதி மண்டலம் இருமலையோ தும்மலையோ உண்டாக்கியதைக் கூடப் பொருட்படுத்தாமல், புழுதித் திரையினூடே சிரமப்பட்டு நோக்கினார்கள், அந்த அராபியன் கண்ணுக்கு மறையும்வரை.

இடையில் எங்கும் இளைப்பாறக்கூட அவசியம் இல்லை என்று கருதியவன் போல் அவன் நிற்காமல் விரைந்தான். அந்த அளவுக்கு அவன் வாட்ட சாட்டமானவனாக விளங்கினான். குதிரைகளும் கொழு கொழுவென்றிருந்தன.

ஆஜானுபாகுவான அந்தக் கட்டிளம் காளை தஞ்சைக் கோட்டையை நெருங்கியதும்தான் சற்று நிதானித்தான். அப்போதும் வேகம் குறைந்ததே யன்றித் தயக்கம் சற்றும் எட்டிப் பார்க்கவில்லை. சுறுசுறுப்பும் தன்னம்பிக்கையும் கலந்த அந்த நிமிர்ந்த நடை காரணமாகவே கோட்டை வாயில் காப்போர் அவனைத் தடுக்கவே அஞ்சி ஒதுங்கி வியப்புடன் அவனை நோக்கினர். அவன் அவர்களைக் கடந்து முன்னேறிய பின்னர்தான் திடுமெனக் கடமையுணர்வு வரப்பெற்றவர்களாக விழித்துக் கொண்டு, அவன் பின்னால் ''ஐயா! ஐயா!'' என்று விளித்துக் கொண்டே ஓடினர். அப்போதும் அவன் நிற்காமல் குதிரையைச் செலுத்திச் செல்ல, வாயில் காப்போரில் இருவர் தங்கள் குதிரைகளின் மேல் ஆரோகணித்து விரைந்து அவன் முன்னால் சென்று மடக்கினர். அவன் நினைத்திருந்தால் தன் குதிரைகளைத் தட்டிவிட்டிருக்க முடியும்; அவர்களிடம் சிக்காமல் வெகுதூரம் சென்று மறைந்திருக்கவும் முடியும். ஆனால் அவன் அப்படிச் செயல்படவில்லை. நாட்டின் விதி முறைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க ஆர்வம் கொண்டவனாகவே தென்பட்டான்.

அவனை அணுகிய வீரர்கள் அவனுக்குத் தமிழ் விளங்கவில்லை எனச் சீக்கிரமே தெரிந்து கொண்டு கை ஜாடையாக அவன் எங்கே செல்கிறான் என வினவினர்.

புரிந்து கொண்டதற்கு அடையாளமாகத் தன் தலையைப் பலமாக ஆட்டிய அவ்வாலிபன், ''ஜெயசிங்கன், ஜெயசிங்கன்!'' என்றான்.

அந்தப் பெயரைக் கேட்டதுமே வாயில் காப்போரான அவர்கள் அவனுக்கு முன்னிலும் மதிப்பும் மரியாதையும் தரத் தலைப்பட்டனர். தங்கள் தலைவனின் அனுமதி பெற்றுத் திரும்பி, 'எங்களைப் பின் பற்றி வா' என்று சமிக்ஞை செய்து விட்டு முன்னால் சென்றனர்.

அராபியன் நகர வீதிகளில் கவனமுடன் குதிரையைச் செலுத்திச் சென்றானென்றாலும் அவன் பார்வை சாலையில் மட்டும் லயிக்கவில்லை. சுற்று முற்றும் நோக்கினான். வரும்போதே அகழியையும் அதை அடுத்த கோட்டைச் சுவரையும் கண் வீச்சுக்களால் ஆய்ந்திருந்த அவன் அவை நன்கு பராமரிக்கப்படாமல் பலவீன நிலையில் இருப்பதைக் கண்டு கொண்டான். வீதிகளின் அமைப்புக்களை மனத் திரையில் ஓவியமாக்கிக் கொண்டான். காவலர்களைக் கண்ட இடத்து அவர்களின் உடலுறுதியையும் மன உறுதியையும் எடை போட்டான்.

சற்றுத் தொலைவில் ஓர் அரச மரத்தடியில் நிசும்ப சூதனி சிலை ஒன்றினை அவன் கண்டான். அது ஏதோ சுபசூசகமாக அவனுக்குத் தோன்றியது. 'அன்னையே! உன்னை இப்போது நான் வணங்க மாட்டேன்! இந்த அராபிய உடையில் இருக்கும்வரை வணங்கவும் முடியாது. ஆனால் பராசக்தி! சீக்கிரமே இந்த நகர் சோழ நாட்டின் ஒரு பகுதியாகப் போகிறது. சோழ நாட்டின் தலைநகரமாகவும் விளங்கப் போகிறது. எதிர்கால சோழ சாம்ராஜ்யம் என்ற ஆலமரத்துக்கு இங்கே தான் வித்து ஊன்றப் போகிறேன்! தாயே! எனக்கு அருள் செய்! இந்த நகரைத் தலை

அவர்: வடக்கே உங்க பெண்ணைக் கட்டிக் கொடுத்த ஊரிலே ஒரே வெள்ளமாமே, எப்படி இருக்கா உங்க பொண்ணு?

இவர்: 'முழுகாம!'

—என். பாலகிருஷ்ணன்



சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு

# லலிதா பார்மஸி

ஸ்தாபிதம் : 1942

தலைமை ஆபீஸ் : கும்பகோணம் – 612001 (தமிழ்நாடு) (போன் : 123)

டிரக் லைசென்ஸ் நிர். 40/31-8-78

சட்டுத் தொகைக்கு மத்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது

உங்களுக்குத் தேவையான **ஆயுர்வேத மருந்துகள் யாவும் கிடைக்கும்**

எமது விசேஷ தயாரிப்புகள் :

**மிகச் சிறந்த டானிக்**

1. யௌவநீ
2. பூர்ண சந்த்ரோதயம்
3. பனஜா
4. அச்வகந்தி தைலம்

எமது பிராஞ்சுகள் :

1. லலிதா பார்மஸி, 52-A, மஹாதானத் தெரு, மாயூரம்-609 001 போன் : 379
2. லலிதா பார்மஸி, 81, வடக்கு வீதி, சிதம்பரம்-608 001
3. லலிதா பார்மஸி, 39, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-600 017 போன் : 441454
4. லலிதா பார்மஸி, 105, கச்சேரி ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 004 போன் : 73007

உங்கள் உபாதைகளுக்கு டாக்டர் V.R.L. சர்மா அவர்களிடம் நேரிலோ அல்லது பதிலுக்கு (35Np தபால் தலை அனுப்பி) கடிதம் மூலமோ தலைமை ஆபீசுடன் தொடர்பு கொள்ளவும். கடிதங்களை தமிழில் அல்லது இங்கிலீஷில் Type செய்தோ அல்லது மிகத் தெளிவாகவோ எழுதக் கோருகிறோம். கடிதங்களிலும் முக்கியமாய் கார்டிலும் ரொம்பவும் நுணுக்கமாய் எழுத வேண்டாம் எனக் கூறுகிறோம். தெளிவில்லாமலும், பதிலுக்கு 35Np ஸ்டாம்ப் அனுப்பாமலும் வரும் கடிதங்களுக்கு பதில் எழுதப்பட மாட்டாது.

---

# நீல்கிரீஸ் 1905

## டிபார்ட்மெண்ட் ஸ்டோர்ஸ்

58 டாக்டர் ராதாகிருஷ்ணன் ரோடு
மயிலாப்பூர், சென்னை 600 004

**14-4-82 முதல் முழு அளவில் திறக்கப்பட்டுள்ளது**

சுமார் 40 வருடங்களாக பெங்களூர் மக்களை சிறப்பாக, மகிழ்வித்த எங்கள் சேவை, இப்பொழுது சென்னை மக்களுக்கு அளிக்கப்படுகிறது.

பேக்கரி, கன்பெக்ஷனரி தயாரிப்புகள்:
புத்தம் புதிய பால், தயிர், வெண்ணை,
நெய், க்ரீம், மற்ற உணவு வகைகள்,
டின்களில் தின்பண்டங்கள்,
பழரசங்கள் மற்றும் பல்வேறு
வீட்டிற்கான பொருள்கள் —
எங்கள் ஸ்டோரில் கிடைக்கும்.



**நீல்கிரீஸ் 1905**

Phone : 85111

# எங்கம்மாவுக்கு இன்னொரு பாப்பா பொறக்கப் போறதாமே

# அப்பறமா அம்மா என்னை கவனிக்க மாட்டாங்களோ?



## இந்த நிலை தேவையா?

davp 81 235

விவேகமுள்ள பெற்றோர் ஒரு குழந்தைக்கும் அடுத்ததுக்கும் இடைவேளை ஏற்படுத்திக் கொண்டு, குடும்பத்தையும் திட்டமிட்டுக் கொள்ளுகின்றனர்—நிரோத் உபயோகிப்பதன் மூலம்




நிரோத்—உயர்தர ரப்பர் கருத்தடைச் சாதனம்,
நம்பகமானது, சௌகரியமானது, ஒவ்வொன்றும் மின்னணுச்
சாதனத்தினால் பரிசோதிக்கப்பட்டது.
அரசு ஆதரவு காரணமாக மிக மலிவானது.

**நிரோத் உபயோகியுங்கள் உயர் ரக கருத்தடைச் சாதனம்**

விநியோகஸ்தர்கள்: ப்ரூக் பாண்ட், லிப்டன், ஹிந்துஸ்தான் லீவர், யூனியன் கார்பைட், [illegible], [illegible], இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷன், பாரத் பெட்ரோலியம், ஹிந்துஸ்தான் பெட்ரோலியம், [illegible].



1923ம் ஆண்டில் சிகாகோ கோர்ட்டில் ஒருவனுக்கு விதிக்கப்பட்ட சிறைத்தண்டனைக் காலம் இருபத்தைந்து செகண்டுகளே!

அவன் செய்த குற்றம்: தன் மனைவிக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் படித்தது!

-எம்.கே. நாராயணன்

நகர் என்ற தகுதிக்கேற்ப அரண்களால் பலப்படுத்தும்போது உனக்கும் ஒரு கோயில் எழுப்புவேன். அதன் கும்பாபிஷேகம் முடிந்த பிறகுதான் இங்கு சோழ மன்னரின் மகுடாபிஷேகம் நடக்கும்!' என்று மனத்துக்குள் பிரார்த்தித்தபடி குதிரையைச் செலுத்தினான்.

நிசும்ப சூதனி கோயில் மட்டுமென்ன, அதற்குச் சுமார் நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பிறகு தஞ்சையில் ராஜ ராஜேச்சுவரமே எழ இருந்தது. மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் உருவாகி, கடல் கடந்த நாடுகளிலெல்லாம் பிரசித்தி பெற்ற தலைநகரமாக விளங்கப் போகிற தஞ்சை இன்று ஒரு சிறிய நகரமாகவே காட்சியளித்தது. பெரிய மாளிகைகள் என்று விரல் விட்டு எண்ணி விடக் கூடிய சிலவே காணப்பட்டன. அவற்றுள் ஒன்றின் முன்னால் இவனுக்கு வழி காட்டிச் சென்ற இருவரும் நின்றனர்.

மாளிகை முன் வம்பு பேசிக் கொண்டிருந்த ஒருசில பணியாளர்களிடம் கோட்டைக் காவலன் அதிகாரத் தொனியில் ''பதினெண் பூமி வணிக நகரத்தார் ஜெயசிங்கரைப் பார்க்க அராபியக் குதிரை வியாபாரி ஒருவர் வந்திருப்பதாகச் சென்று கூறுங்கள்'' என்று உத்தரவிட்டான். உடனே ஒருவன் உள்ளே ஓடிச் செல்லவும் அராபிய இளைஞன் குதிரை மீது அமர்ந்தவாறே சுற்று முற்றும் பார்த்தான். மாளிகையின் மச்சுக்கும் மேலே சிறகு விரித்த நிலையில் ஒரு கருடன் உருவம் வரையப்பெற்ற 'கொடி காற்றிலே மெல்ல அசைந்தபோது மெய்யாலுமே ஒரு கருடன் அம்மாளிகையை வட்டமிட்டுக் காப்பது போலிருந்தது. மாளிகை முகப்பில் சர்வ அலங்காரங்களுடன் கூடிய ஒரு யானையின் உருவம் கல்லிலே வடிக்கப்பட்ட சிலையாகக் காட்சியளித்தது. ஐயவர்மன் என்று பெயர் கொண்ட அந்த யானை பதினெண் பூமி வணிகப் பிரிவினரின் சின்னம் என்று அவன் அறிந்திருந்தானாயினும் இப்போது அதன் கலையழகை அவன் ரசித்தான். அடுத்து மாளிகையின் எடுப்பான தோற்றத்தையும் அதன் செல்வச் செழிப்பையும் கவனித்து விட்டுச் சுற்றிலும் இருந்த மலர்த் தோட்டத்தின் அழகை ரசிக்க முற்பட்ட தருணத்தில் மாளிகையினுள்ளிருந்து திருமகளின் பூரண அருள் பெற்றவன் எனப் பறைசாற்றும் திவ்வியமான அலங்காரத்துடனும், தேக ஆரோக்கியத்தை உணர்த்தும் வளமான உடற்கட்டுடனும், அறிவுக் கூர்மையை வெளிப்படுத்தும் பிரகாசமான கண்களுடனும் எழிலும் ஏற்றமும் மிக்க வாலிபன் ஒருவன் வெளிப்பட்டான்.

இதற்குள் தங்கள் குதிரைகளிலிருந்து இறங்கிவிட்டிருந்த காவலர்கள் அவனைக் கண்டதும் பணிவுடன் வணங்கி நின்றனர். ''ஐயா! இவனுக்குத் தமிழ் தெரியவில்லை. இவன் மொழியோ எங்களுக்குப் புரியவில்லை. எனினும் உங்கள் பெயரை இவன் கூறியதால் தடை விதிக்காமலும், தாமதிக்காமலும் இவனை நேரே இங்கு அழைத்து வந்தோம்'' என்றான் காவலருள் ஒருவன்.

மற்றொருவன், ''இவனிடம் தீர்வை ஏதும் வசூலிக்கவில்லை ஐயா!'' என்று நினைவூட்டினான்.

ஜெயசிங்கன் அந்த அராபியனை ஏறிட்டு நோக்க அப்போதுதான் புன்னகையுடன் அந்த அராபியனும் தன் குதிரையை விட்டு இறங்கினான். தனக்குச் சமமான அந்தஸ்து உடையவனைச் சந்தித்த பிறகும் அவன் கீழே நிற்கத் தான் மட்டும் குதிரை மீது ஆரோகணித்திருப்பது தவறு என்பதை உணர்ந்து அவன் செயல்பட்டதாகத் தோன்றியது. குதித்து ஒரு துள்ளலுடன் நின்றவன், அடுத்து இடுப்பிலிருந்து குனிந்து கரமசைத்துச் சலாமிட்டான். ஜெயசிங்கன் பதிலுக்குக் கரம் கூப்பி வணக்கம் தெரிவித்தபடியே அவனைக் கூர்ந்து ஆராய்ந்ததுடன் அவன் குதிரைகளையும் நோட்டம் விட்டான். இவனுடன் வியாபாரம் செய்வது தனக்கு மிகவும் லாபகரமாக இருக்கும் என்பதை நொடியில் புரிந்து கொண்டவன், அவனுக்கு வழிகாட்டி அழைத்து வந்த இருவருக்கும் ஆளுக்கொரு பொற்காசு தந்ததுடன், ''இது உங்கள் தலைவனுக்கு'' என்று கூறியபடியே மேலும் இரு பொற்காசுகளை வழங்கினான். ''சுங்கத்தை இன்று மாலை மயங்கு முன்னரே செலுத்திவிடுவேன். என்னையோ என் கணக்கனையோ நீங்கள் எதிர்பார்க்கலாம்'' என்று கூறி மகிழ்ச்சி ததும்பும் முகத்தினராக அவர்களை அனுப்பி வைத்தவன், ஏதோ இனம் புரியாத ஓர் ஐயத்தோடு அந்த அராபியனை மறுபடியும் உற்றுப் பார்த்தான். பிறகு குதிரைகளைச் சுட்டிக் காட்டி தனக்குத் தெரிந்த சிறிதளவு அராபிய மொழியில் விலை விசாரித்தான்.

அராபியன் சுற்று முற்றும் பார்த்து, பணியாட்கள் யாரும் அருகில் இல்லை என உறுதிப்படுத்திக் கொண்ட பிறகு, ''ஜயசிங்கா! வாசலில் வைத்து விலை விசாரிப்பதுதான் பதினெண் பூமி வணிகரின் பாரம்பரியமா?'' என்றான் சன்னமான குரலில். தூக்கிவாரிப் போட நிமிர்ந்தான் ஜயசிங்கன். அவன் தமிழ் பேசியது ஒன்று; தன் நடத்தையில் பெரும் குறையொன்றைக் கண்டு கூறியது

ஒன்று, என இரண்டுமாகச் சேர்ந்து அவனை உலுக்கி விட்டதெனில் அதற்கும் மேலே அவனை வேறு ஓர்எண்ணமும் அலைக்கழித்தது. 'இந்த முகம்... இந்தக் குரல்... இவனை இதற்கு முன் எங்கு எப்போது பார்த்திருக்கிறோம்....?' புரிந்தும் புரியாமலும் இருந்த ஒரு மர்ம முடிச்சை அவிழ்க்க முடியவில்லையெனில் வெட்டித்தானாக வேண்டும் எனக் கருதியவனாக, ''ஐயா, நீர் யார்? நன்றாகத் தமிழ் பேசும் நீர் எதற்காக இப்படி அராபியன் போல் வேஷமணிந்திருக்கிறீர்?'' என்றான்.

''ஜெயசிங்கா! உரக்கப்பேச வேண்டாம்'' என்று கேட்டுக் கொண்டான் அந்த வேடதாரி. ''உனக்கே என்னைத் தெரியவில்லை என்றால் என் மாறுவேடம் பெரிய வெற்றி தான். சரி, உள்ளே போய்த் தனிமையில் பேசுவோமா?''

'இதில் சூது ஏதும் இருக்குமோ' என்று ஒரு கணம் தயங்கிய ஜெயசிங்கன், அந்த வேடதாரி தனது குதிரைகள் அனைத்தையும் தன்னுடைய பணியாட்கள் பொறுப்பிலேயே விடுவதையும் மேலோட்டமாகப் பார்க்கையில் அவனிடம் ஆயுதம் ஏதுமில்லை என்பதையும் கண்ட பிறகு மனம் மாறி, என்ன நேர்ந்துவிடப் போகிறது என்ற துணிவுடன் அவனை உள்ளே அழைத்துச் சென்றான்.

வெளியேயிருந்து பார்த்தபோது அளித்த வளமையான தோற்றத்துக்குச் சற்றும் குறைவில்லாத விதமாக அம்மாளிகையின் உட்புறமும் அமைந்திருந்தது. நீண்ட கூடங்கள்; விசாலமான அறைகள். அலங்காரப் பலகணிகள், பட்டுத் திரைச்சீலைகள், முத்தை அரைத்துப் பூசினார்களோ என்று எண்ணும் படி வழுவழுத்த சுவர்கள். அரசர்க்குரியன போன்ற அரியாசனங்கள், அவற்றில் மிருதுவான திண்டுகள். மணக்கும் அகிற் புகை. கவனத்தை ஈர்க்கும் சுவர்ச் சித்திரங்கள். அலங்காரமாக அமைந்த மலர்கள். இரவில் தீப ஒளி சிந்திப் பகலில் கலைப் பொருளாக விளங்கும் சரவிளக்குகள். இவற்றுக்கு இடையில் காலால் இட்ட பணியைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றக் காத்திருக்கும் சித்திரப் பாவைகள்!




''இப்படி அமருங்கள்''என்று கூறிக் கை தட்டவும் அந்தச் சித்திரப் பாவையரில் இருவர்உயிர் பெற்றெழுந்துபழரசம் கொணர்ந்து வைக்க, ஜெயசிங்கன், தானே தன் கரத்தால் ஒரு கோப்பையை நிரப்பித் தந்தான். நீண்ட பயணத்தின் விளைவாக மிகுந்த தாகத்துடன் இருந்த இளைஞன் அதைப் பருகியவாறே சமிக்ஞை செய்ய, ஜெயசிங்கன் பணிப் பெண்களை வெளியே அனுப்பியதுடன், ''நாங்கள் வியாபார நோக்கில் அந்தரங்கமாகப் பேச வேண்டியிருக்கிறது. சற்று நேரம் யாரையும் உள்ளே அனுமதிக்காதீர்கள்'' என்றான்.

இது அவர்களுக்குப் பழக்கம் தான் என்பதால், ''சித்தம் ஐயா''என்று கூறித் தங்கள் ஒய்யார நடையிலேயே எழில் காட்டி ஏங்க வைத்துப் பிரிந்தனர்.

அவர்கள் கண்ணுக்கு மறையவும் அராபிய வேடத்திலிருந்த வாலிப வீரன் தான் அணிந்திருந்த அங்கியின் ஒரு பையிலிருந்து சிறிய சதுரமான ஒரு கறுப்புப் பட்டுத் துணியை எடுத்தான். அதனைத் தனது வலது கண்மீது பொருந்த வைத்து, அப்பட்டையின் இரு முனைகளிலுமிருந்த நீண்ட பட்டு நாடாக்களை மேலும் கீழுமாகக் கொண்டு சென்று தலையின் பின்புறம் முடியிட்டான்.

முடிந்து முடியும்வரை காத்திராமல் அவன் பாதங்களில் விழுந்து வணங்கிய ஜெயசிங்கன், அந்தச் சரணாகதி நிலையில் இருந்தபடியே பேசினான்: ''பிரபோ! இது என்ன கோலம்? எதற்கு இந்த வேடம்? ஒளிவு மறைவு? தஞ்சைக்குத் தாங்கள் வரவேண்டும் என்று கோடி காட்டினாலும் போதுமே, முத்தரையரே இங்கு தங்களை ராஜ மரியாதையும் உபசாரமும் செய்து வரவேற்க ஆவன செய்திருப்பாரே?''

குனிந்து அவன் தோள்களைப் பற்றிஉயர்த்தி ஆலிங்கனம் செய்து கொண்ட விஜயாலயன், ''ஜெயசிங்கா! காரணமில்லாமல் இப்படி வேடமணிவேனா? இப்போது நீ கணமும் மறவாமல் நினைவில் கொள்ள வேண்டியது, நான் ஒரு சில வார்த்தைகளுக்கு அதிகமாகத் தமிழ் அறிந்திராத பெருஞ் செல்வந்தனான ஓர் அராபியக் குதிரை வியாபாரி என்பதைத்தான்!''

''பிரபோ! தங்களைப் பார்த்ததுமே மனத்தில் ஏதோஓர்உறுத்தல். ஆனால் உங்கள் மாறு வேடத்தை விடவும் உங்கள் கண்கள்தாம் என்னை ஏமாற்றி விட்டன. உங்கள் முகத்தின் வலப்புறத் தழும்புகளை இந்த அராபிய தலையலங்காரம் மறைத்து விட்டது. ஆனால் இந்த வலது கண் பார்வையைத் தாங்கள் எப்படித் திரும்பப் பெற்றீர்கள்? பேராச்சரியமாய் இருக்கிறதே!''

''எவ்வளவோ சொல்லவும் வேண்டும்; கேட்கவும் வேண்டும். விவரமாகப் பின்னர் பேசுவோம்... முதலில் நீராட வேண்டும்; பின்னர் பசியாற வேண்டும்'' என்ற விஜயாலயன் வலக் கண்ணை மறைத்த கறுப்புப் பட்டையை அகற்றியதுடன் அதை ஒளிக்கவும் செய்து மீண்டும் அராபியனானான்!

(தொடரும்)

## தமிழ்நாடு அரசு ஊழியர்களே ஒரு சொல் கேளீர்!



உங்களுக்குக் கிடைக்கும்

**அக விலைப் படி**

முழுவதையுமோ

அல்லது ஒரு பகுதியையோ

# தேசிய சேமிப்புப் பத்திரம் ஆறாவது வெளியீட்டில் முதலீடு செய்து, உங்கள் பணத்தை இரட்டிப்பாக்கிக் கொள்ளுங்கள்

தேசிய சேமிப்புப் பத்திரம்
ஆறாவது வெளியீடு ஒன்று தான்
6 ஆண்டுகளில் உங்கள்
முதலீட்டை இரட்டிப்பு ஆக்குகிறது

**ரூ.100 முதலீடு செய்தால்
6 ஆண்டுகள் முடிவில்
ரூ. 201-50 பெறலாம்**

கூட்டு வட்டி 12 சதவீதம்
சாதா வட்டி 17 சதவீதம்

அரிய வாய்ப்பை நழுவ விடாதீர்கள்

பத்திரங்கள் ரூ 10, 50, 100, 500 வகைகளில் எந்த அஞ்சலகத்தில் வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளலாம்.

வெளியீடு

சிறு சேமிப்பு இயக்குநர் 143, அண்ணா சாலை சென்னை-600 002

EP. DIPR

உங்களைப்
போன்றவர்களை
திருப்தி செய்ய
சார்மினாரால்தான்
முடியும்




சற்றே இளைப்பாறுவீர்! ஒரு சார்மினார் புகைப்பீர்

சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING: CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

90 பைசாவுக்கு 10

CASVS-259-203 TAM

Main Dealer: M/s CONCORDE AGENCIES, Madras-600006

# ஒன்றும் ஒன்றும் ஒன்று

## சவீதா



**ஸஞ்சனா பால் தம்ளருடன்...**

நடந்தாள். இரவு நேர அமைதியில் அவள் கை வளையல்கள் க்ளிங்கின.

'சிக்'கென்று அவளைச் சுற்றிக் கொண்டிருந்த பச்சை டெரீன் புடவையும், இறுக்கமான பச்சை ப்ளவுசும் அவளை மேலும் சிவப்பாகவும், மேலும் ஒல்லியாகவும் வர்ணித்தன. காதிற்குப் பின்னால் கூந்தலில் மதுரை மல்லிகை, ஷாம்பூ நுரை போல் பூத்துச் சரிந்தது. செம்பருத்தியின் நிறத்தில் நெற்றிக்கு இட்டிருந்தாள். ஒற்றைப் பின்னல் வலது தோள் வழியே முன் பக்கம் மார்பில் வழிய, மரபுக் கவிதையாக நடந்தாள்.

இருண்டிருந்த ஓர் அறைக்குள்ளே நுழைந்து சுவிட்சை அழுத்தினாள். குழல் விளக்கின் வெளிச்சத்தில் அலமாரியைத் திறந்தாள். அதன் தட்டுக்களில் மாத்திரைப் புட்டிகளும் அட்டைப் புட்டிகளும் நிறைந்து, குட்டிப் பார்மஸியே இருந்தது. நொடியில் காம்போஸ் தூக்க மாத்திரையைத் தேடிப் பிடித்தாள்.

மறுபடியும் பிரகாசமான ஹாலின் குறுக்கே நடந்தாள். சுவர்க் கடியாரம் டண்டிண்...டண்டிண் என்று பத்து அடித்தது. சாப்பாட்டு மேஜையைச் சுற்றிக் கொண்டு இன்னொரு அறைக்குள்ளே நுழைந்தாள்.

அங்கே அத்தைக்கும் மாமாவுக்கும் இரண்டு கட்டில்கள் 'ட' போலச் சேர்ந்து கிடந்தன. மாமா வற்றலாக நின்று ஸ்வெட்டரின் பொத்தான்களை நடுங்கும் விரல்களால் தடவித் தடவி மாட்டிக் கொண்டிருந்தார்.

''இந்தாங்க மாமா'' என்ற ஸஞ்சனா, பாலையையும் மாத்திரையையும் கொடுத்தாள். ''கண் எப்படி இருக்கு மாமா?'' என்று பரிவோடு விசாரித்தாள். அவரைச் சுற்றி மூக்குப் பொடியின் மெலிதான நெடி. அந்த நெடிக்கு அவளுடைய நாசி சின்ன எதிர்ப்புத் தெரிவித்த போதிலும் அவள் அதைக் காட்டிக் கொள்ளாமல் மாமாவின் அருகே நெருக்கமாக நின்று பேசினாள்.

''இப்ப வலி ஒண்ணுமில்லேம்மா. புதுக் கண்ணாடி பாரு. ரெண்டு நாளைக்கு அப்படித் தான் இருக்கும். ராகுல் நாளைக்கு வந்துட்டான்னா கண் டாக்டரைப் போய்ப் பார்த்துரலாம். சர்க்கரை போட்டுட்டியா?''

''இல்லே மாமா. உங்களுக்குப் போட மாட்டேன்.''

''மறந்தாப்ல போட்டுட்டியோன்னு கேட்டேன்.''

''நீ சாப்பிட்டியாம்மா?'' என்று பின்னால் படுக்கை விரிப்பை உதறிய அத்தை குழைவாகக் கேட்டாள். அவள் மூக்குக் கண்ணாடியில் தங்க பிரேம் மினுமினுத்தது. மாமாவை விடக் குறைந்தது பத்து வருடமாவது இளமையாகத் தோன்றினாள்.

''சாப்பிட்டேன் அத்தை. நீங்க படுத்திராதீங்க. உங்களுக்கும் எடுத்துட்டு வந்துர்றேன்.''

''வேண்டாம்மா. பாலே மட்டும் வெளியே மேஜைல வச்சிடு. மத்ததை நான் பாத்துக்குவேன். உனக்கு ஏன் சிரமம்?''

''ஸ்ரமம் ஒண்ணுமில்லே அத்தை'' என்ற ஸஞ்சனா வெளியேறினாள். மறுபடியும் மாத்திரைகள் இருக்கும் அறைக்கு நடந்தாள். அலமாரியைத் திறந்தாள். அதன் தட்டுக்களில் அத்தைக்காக வேறு ஒரு மாத்திரையைத் தேடினாள்.

சாப்பாட்டு மேஜை மீது ஏற்கனவே தம்ளரில் அவள் தயாராக எடுத்து வைத்திருந்த பாலில் புரொட்டின்பூல்சைக் கலந்து எடுத்துக் கொண்டாள்.

''இது என்ன மாத்திரையம்மா? பாட்டில் மேலே இருந்த பெயரை நல்லாப் படிச்சயா?'' அத்தைக்குக் கொஞ்சம் சந்தேகம் அதிகம்.

''காம்பிஸைம் அத்தை.''

''ஆ...அதான். ராகுல் சொல்லிட்டுப் போனானா?'' என்று சிரித்தபடி கேட்டாள்.

''இல்லே அத்தை.''

''அப்புறம் எப்படிச் சரியா ரெண்டு காம்பிஸைம் மாத்திரையும் புரொட்டிநூல்கம் எடுத்துட்டு வந்தே?''

''நேத்து நீங்களும் மாமாவும் என்னென்ன சாப்பிடறீங்கன்னு கவனிச்சுக்கிட்டிருந்தேன் அத்தை.''

''அப்படியா?'' ஆச்சரியத்தை இழுத்தாள். ''தாங்கும்மா. ரொம்பத் தாங்க். இந்த மாத்திரை நாளைக்கு இருக்காதே.''

''ஆமா. அத்தை. காலியாயிருச்சு.''

''நாளைக்கு ராகுல் வந்துட்டான்னா எது எது இல்லேன்னு பார்த்து லிஸ்ட் போட்டு வாங்கிக்கிட்டு வரச் சொல்லணும்.''

''பக்கத்து மெடிகல் ஷாப் இருந்ததுன்னா கார்த்தாலே நானே போய் வாங்கிருவேன் அத்தை.''

கட்டிலில் அமர்ந்து மப்ளரைத் தலையில் சுற்றிய மாமா குறுக்கிட்டு, ''அவன் வரட்டும்மா. நாளைக்குத்தான் வந்துருவானே. வடக்குச் சித்திரை வீதிலே ஒரு மெடிகல் ஷாப்ல அக்கவுண்ட் இருக்கு...'' என்றார்.

''இன்னேரம் மெட்ராசை விட்டுப் புறப்பட்டிருப்பான். பாதி வழி வந்திருப்பான்'' என்று அவளைப் பார்த்து அத்தை ஏதோ ஒரு அர்த்தத்தில் சிரித்தபடி சொன்னாள். அப்போது குபுகுபுவென்று உள்ளே புகுந்த காற்றினால் ஸஞ்சனா வின்புடவை சிலிர்த்தது. ஒரு ஆந்தை அகோரமாக வீட்டுக்குள் அலறிவிட்டுப் பறந்தது.

''ஜன்னலைச் சாத்திரட்டுமா அத்தை?''

''இது திறந்திருக்கட்டும்மா. மாமாவுக்குப் பக்கத்திலே இருக்கிற ஜன்னலை மட்டும் கோச்சுக்காம சாத்திருடா.''

ஸஞ்சனா ஜன்னலிடம் சென்றாள். தொலைவில் கருப்புப் பொட்டலம் போலத் திருப்பரங்குன்றம் தெரிந்தது. அதன் உச்சந் தலையில் அபாயச் சிவப்பு விளக்கு இடைவிடாமல் சுழன்றது.

''நீ போயிப் படுத்துக்கோம்மா.''

''வெந்நீர் கொண்டாந்து வைக்கட்டுமா அத்தை?''

''வேண்டாம்மா. பிளாஸ்க் நிறைய இருக்கு.''

ஸஞ்சனா அங்கிருந்து வெளியேறினாள். சமையற்கட்டுக்குள் போய்த்தம்ளரில் இருந்த பாலே மருந்து போல ஒரே மூச்சில் குடித்துக் காலி செய்தாள். ஹால் விளக்கை அணைக்கச் சென்றாள். படுக்கை அறைக்குள் அத்தையும் மாமாவும் தூங்காமல் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''உங்க யோகம் அப்படியே உங்க பிள்ளைக்கும் இருக்குங்க.''

''எப்படிச் சொல்றே?''

''என்னை மாதிரியே பொறுமைசாலியா வந்து சேர்ந்திருக்கா.''

''அவன் குணத்துக்கு அவனுக்கு எந்தக் குறையும் வராது.''

**மாடிக்குச் சென்ற ஸஞ்சனா...**

விளக்கைப் போடாமல் இருளில் நடந்தாள். ஜன்னல் ஓரம் சென்றாள்.

வெகு நேரமாக அவள் நெஞ்சுக்குள் தேக்கி வைத்திருந்த அழுகை வெடித்துச் சிதறியது. மேலே யிருந்து எவ்வளவு சப்தமாக அழுதாலும் கீழே படுத்திருக்கும் அத்தைக்கும் மாமாவுக்கும் கேட்காது. எனவே, ஆசை தீர, மனத்தின் பாரம் நீங்கும்வரை அழுது தீர்க்க முடிவு செய்தாள். கேவிக் கேவி அழத் தொடங்கினாள்.

ராகுல், மை டார்லிங்! சுவாசிக்கிறதுக்கு என் கூந்தல் மணம் இருந்தால்தான் நைட்ல தூக்கம் வருதுன்னு சொன்னீங்களே. எப்படித் தனியா ஒரு ராத்திரியைக் கழிச்சீங்க? ஏக்க நெருப்பிலே என்னைத் தள்ளிட்டு மெட்ராசுக்குத் தனியா ஓடிப் போக எப்படி உங்களுக்கு மனசு வந்தது டியர்? சொல்லுங்க டியர்.

அப்படி என்ன பிரமாத ஆபீஸ் வேலை?

நான் புதுசாக் கல்யாணமானவன் சார். மேரேஜ் ஆகி ஒரு மாசம் கூட ஆகலே. நானும் ஒய்ஃபும் ஹனி மூன்லேர்ந்து இன்னிக்குத்தான் திரும்பி வந்திருக்கோம். வேற யாரையாவது மெட்ராசுக்கு அனுப்புங்க, என்னால போக முடியாதுன்னு சொல்லி நீங்க தப்பிச்சிருக்கலாமே.'

கர்ட்டனை ஒதுக்கினான். பசுமலை மலையுச்சி பங்களாவின் விளக்குகள் திடீரென்று அணைந்தன. பசுமலையை விடச் சற்று உயரமான கானமலை நிழல்போலத் தோன்றி அவனுக்குள் அச்சத்தை ஏற்படுத்தியது.

'விடிஞ்சா வெள்ளிக் கிழமை. வெள்ளி



காலேல மறுபடியும் உன் பக்கத்திலே இருப்பேன்னு மாடிக்கு வந்து என் கையப் பிடிச்சு பிராமிஸ் பண்ணிட்டுப் போனீங்க. அத மறந்திராம ரயில் ஏறி வந்துக்கிட்டிருப்பீங்கன்னு நம்பறேன். நாளைக்குக் காலேல மட்டும் நீங்க இங்க வந்து சேரலேன்னு நான் உங்களைத் தேடி மெட்ராசுக்குப் புறப்பட்டுருவேன். உங்க அப்பாவுக்கும் அம்மாவுக்கும் பணிவிடை செய்யறதுக்குக் கஷ்டப்பட்டு நான் இப்படிச் சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க. நீங்க இல்லாம சத்தியமா ஒரு நிமிஷம் கூட என்னால தனியா இருக்க முடியல.'

ஜன்னலின் இரும்பு டிசைன்களைப் பற்றிக்கொண்டு குழந்தையைப் போலத் தேம்பினாள். இன்னொரு ஜன்னல் பக்கம் பெருமூச்சுடன் நகர்ந்தாள். மதுரைநகரின் பிரகாசமான வெளிச்சம் அடி வானத்தில் பரவி, கீழ் வானம் வெளுத்து விட்டதைப் போன்ற பிரமையை ஏற்படுத்தியது.

'திடீர்னு விடிஞ்சுட்டா எவ்வளவு நல்லா இருக்கும். நீண்ட கசப்பான இன்னொரு ராத்திரிய எப்படி நான் தொண்டைக்குள்ளே இறக்கப்போறேன்? நீங்களும் என்னேமாதிரி இந்த நேரத்திலே தூங்காம என்னே நினைச்சுக்கிட்டு அவஸ்தைப் பட்டுக்கிட்டிருப்பீங்களா? வேண்டாம் டியர், உடம்பு கெட்டுப் போகும். பர்ஸ்ட் கிளாஸ் காபின்ல சௌகரியமாக் காலே நீட்டித் தூங்கி ரெஸ்ட் எடுத்துட்டு வாங்க. நாளைக்குத்தான் இங்க விடிய விடிய முழிச்சிருக்கப் போறோமே. எதுக்குன்னு கேக்கறீங்க, ஒண்ணுந் தெரியாத மாதிரி. நேர்ல வாங்க கன்னத்தை நல்லாக் கடிச்சு வச்சிர்றேன். ஆபீஸ்ல இருக்கிறவங்கள்லாம் 'என்ன காயம் மிஸ்டர் ராகுல்'னு கேக்கணும்.

படுக்கையில் குப்புற விழுந்தாள். தலையணை அவள் கன்னத்தின் ஈரத்தை உறிஞ்சியது. முதல் இரவு திடீரென்று அவள் நினைவுக்கு வந்தது.

பால் தம்ளருடன் அவள் அவனை நெருங்கியபோது அவன் கட்டிலில் அமர்ந்து புன்னகைத்தான். பாலே வாங்குவதற்கு முன் இனி நீ என்னுடையவள் என்று முத்திரை குத்துவதைப் போல் அவள் புடவையின் ஃபோஹிப்புக்கு மேலே அடிவயிற்றில் முத்தம் பதித்தான்.

அவன் உதடுகள் அவள் வயிற்றில் முதன் முதலாகப் பதிந்த இடத்தில் ஒருவிதக் குறுகுறுப்பை உணர்ந்தவளாய் மல்லாந்து படுத்தாள். அந்த இடத்தை விரல்களால் வருடிக் கொடுத்தாள்.

கிர்ர்ர்....கிர்ர்ர். கீழே ஹாலில் பஸ்ஸர் ஒலித்தது. யாராக இருக்கும்? துள்ளி எழுந்தாள்.

கிர்ர்ர்.... கிர்ர்ர்ர்....

'ராகுல் வந்துட்டீங்களா! எனக்குத் தெரியும், உங்களால என்னைப் பிரிஞ்சு ரெண்டு நாள்கூட இருக்க முடியாதுன்னு.'

விளக்கைப் போட்டாள். கண்ணாடி பார்த்து புடவையையும், கூந்தலேயும் சரி செய்தாள், முகத்தைப் புடவைத் தலைப்பால் துடைத்துக்கொண்டு அந்த அறையை விட்டு அடித்துப் புரண்டு ஓடினாள்.



''உங்க மனைவியோட ஒரு லெட்டரைப் 'பொக்கிஷமா' பாதுகாக்கிறதாச் சொன்னீங்களே அது எதை?''

''அவ அம்மா வீட்டுக்குப் போயிருந்த போது அவுங்க அப்பா சமையலைச் சாப்பிட்டுட்டு 'உங்க சமையல்எவ்வளவோ தேவலாம்'னு ஊரிலேர்ந்து எழுதிய கடிதத்தை!'' -அ. இராமதாஸ்

**மாடிப் படியில் இறங்கி ஓடிய ஸஞ்சனா...**

ஹால் விளக்கைப் போட்டாள். அத்தையும் மாமாவும் கண்ணயர்ந்த நேரம். அந்த அறையின் விளக்கையும் போட அவர்கள் படுக்கையில் கண் திறந்து விழித்தனர்.

''அவர் வந்துட்டார்போல இருக்கு'' என்று அவசரமாகச் சொன்னவள் ஹாலுக்குள் ஓடினாள். வராந்தா விளக்கைப் போட்டாள்.

கிர்ர்ர்ர்... கிர்ர்ர்ர்....

பாதுகாப்புச் சங்கிலியை மாட்டிவிட்டுத் தாழ்ப்பாளை விலக்கினாள். கதவு அளவுடன் திறக்க இடைவெளியில் காக்கிச் சட்டை அணிந்தவன் நின்றான்.

''டெலிகிராம். கதவைத் திறங்க'' என்றான்.

இதயம் மார்புக் கூட்டுக்குள் படு உதை உதைக்கக் கதவைத் திறந்தாள்.

''மிஸஸ் ராகுல் நீங்களா?''

''ஆமா, கோயம்பத்தூர்லேர்ந்தா வந்திருக்கு?''

''இல்லேம்மா. மெட்ராஸ்.''

அவன் நீட்டிய பாரத்தையும் பென்சிலேயும் வாங்கி ஆயுளிலேயே மிகவும் மோசமான கையெழுத்தைக் கிறுக்கித் திருப்பிக்கொடுத்தாள். தந்தியை நடுங்கும் விரல்களால் கிழித்தாள். அவள் விழிகள் நீர் சொரியத் தொடங்கின.

''என்னம்மா?''

''என்ன தந்தி?''

''அவருக்கு ஏதோ ஆக்ஸிடெண்டாம்.. ஹாஸ்பிட்டல்ல அட்மிட் ஆயிருக்காராம். உடனே புறப்பட்டு வரச் சொல்லிருக்காங்க.''

''ஐயையோ....''

''யார் குடுத்திருக்காங்க?''

''ஹெட் ஆபீஸ்லேர்ந்து யாரோ சம்பத்னு ஒருத்தர் குடுத்திருக்கார்.''

''என்ன ஆக்ஸிடெண்டாம்?''

''இப்ப எப்படி இருக்காளும்?''

''எனக்கு ஒண்ணும் புரியலையே அத்தை. நானும் உங்களை மாதிரித்தானே.''

''எத்தனை மணிக்குக் குடுத்திருக்காங்க?''

''சாயந்திரம் அஞ்சரை மணிக்கு.''

''இப்ப யார் போறது?''

**மறுநாள் பிற்பகல் சென்னை எழும்பூரை**

அடைந்த வைகைஎக்ஸ்பிரஸிலிருந்துஸஞ்சனா இறங்கினாள், புடவையால் தோள்களைப் போர்த்திக்கொண்டு, கையில் சின்ன சூட்கேஸ்.

மதுரையில் வண்டி புறப்பட்டபோதும், திருச்சியிலும் சாப்பிட்ட இரண்டு காப்பிகளைத்தவிர வேறு எதுவும் வயிற்றில் இல்லாததால் இறக்கம். விடாமல் அழுததால் விழிகளில் ரத்தச் சிவப்பு. சென்னையின் ஈவிரக்கமில்லாத வெயில் அவளை மூர்க்கத்தனமாகத் தாக்கியது.

எங்கே செல்வது?

நேராக ஆஸ்பத்திரிக்கா?

இல்லை, அவருடைய தலைமை அலுவலகத்துக்கா?

இல்லை, தோழியை அழைத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போகலாமா?

காலையில் மாமாவிடம் எழுதிக் கொடுத்த தந்தியை அவர் காலா காலத்தில் அனுப்பியிருந்தால் கோயமுத்தூரிலிருந்து அப்பா இந்நேரம் கிளம்பியிருப்பார்.

அதிகம் யோசிக்காமல் நேராக ஆஸ்பத்திரி செல்ல ஆட்டோ ஏறினாள்.

இன்டென்ஸிவ் கேர் யூனிட்.

தலையில் பெரிய கட்டுடன் கண் மூடிப் படுத்திருந்தான் ராகுல்.

சிரசாஸனம் போலத் தலைகீழாகத் தொங்கிய புட்டியிலிருந்து சொட்டுக்கள் வடிந்து அவன் உடம்பில் ஏறிக் கொண்டிருந்தன.




ஸஞ்சனா புடவைத் தலைப்பினால் வாயைப் பொத்திக் கொண்டு விம்மினாள்.

''அடுத்த பன்னிரண்டு மணி நேரத்துக்குள்ள கண்ணைத் திறந்து பார்த்துட்டார்னா ஒண்ணும்பயமில்லேன்னு டாக்டர்சொல்றார். ஆண்டவன் மேலே பாரத்தைப் போட்டுட்டுத் தைரியமாக இருங்க'' என்று வராந்தாவில் சம்பத் சொன்னார்.

''எப்படி ஆக்ஸிடெண்ட் ஏற்பட்டுச்சாம்?''

''நேத்துப் பூரா ஆபீஸ்லதான் இருந்தார். சாயந்திரம் விருகம்பாக்கம்வரைக்கும் போகணும், டாக்ஸி இல்லே ஆட்டோ கொண்டான்னு ஒரு பியூன் கிட்டச் சொன்னார். எங்க ஆபீஸ்ல ராமசாமின்னு ஒருத்தர் விருகம்பாக்கத்திலேர்ந்து வர்றார். அவர் பைக் வச்சிருக்கார். விருகம்பாக்கத்துக்குன்னா என்னோட வந்திருங்க சார்னு அவர் கூப்பிட்டாரு. முதல்ல இவரு நீங்க போங்க ராமசாமி, நான் ஆட்டோ பிடிச்சுப் போயிக்கிறேன்னார். அப்புறம் எப்படி அவர் கூட பைக்ல ஏறிப் போனார்னு எனக்குத் தெரியாது. ராமசாமி ரொம்ப வற்புறுத்திக் கூப்பிட்டிருப்பார் போல இருக்கு. பாட் டைம் நமக்கு இருக்கும்போது அவரைச் சொல்றதுக்கு என்ன இருக்குங்க.''

''எப்படி பிளாட்பாரத்துல பைக்கை ஏத்தினார்? எதுத்தாப்ல வண்டி எதுவும் வந்திருக்குமோ?''

''ராமசாமி மேலேயும் மிஸ்டேக் இல்லேம்மா. ஸ்பென்சர்ஸ் பக்கத்துல ரைட் சைட்லேர்ந்து சிக்னலைப் பார்க்காம ஒரு டாக்சிக்காரன் கண்ணை மூடிக்கிட்டு வந்திருக்கான். ராமசாமி ஷார்ப்பா ஓடிச்சிருக்கார். வண்டி பிளாட்பாரத்திலே ஏறிருச்சு, ராகுல் மல்லாக்க எலெக்டிரிக் போஸ்ட் மேல விழுந்திருக்கார்.''

''அவரு எப்படி இருக்காரு?''

''யாரு?''

''மிஸ்டர் ராமசாமி?''

'' ஹி'ஸ் ஓ.கே. கையிலயும், காலிலேயும் லேசாச் சிராய்ச்சிருக்கு. சரி இப்ப உங்களோட யார் வந்திருக்காங்க?''

''தனியாத்தான் வந்திருக்கேன். அத்தை மாமாவால ட்ராவல் பண்ண முடியாது. அப்பாவுக்கு டெலக்ராம் கொடுத்திருக்கேன், அநேகமா அவர் இன்னிக்கு நைட் வந்துருவாரு.''

''அவர் எங்கேர்ந்து வரணும்?''

''கோயம்புத்தூர்.''

''அப்ப நான் ஒண்ணு பண்றேன்ங்க. வீட்டுக்குப் போய் ஒய்ஃப அழைச்சிக்கிட்டு வர்றேன். அவளோட சேர்ந்து நீங்க எங்க வீட்டுக்குப் போயிக் குளிச்சுக் கொஞ்சம் ரிலாக்ஸ் பண்ணிக்கிட்டு வாங்க.''

''தேங்க்ஸ் ஸார், நான் இங்கேயே இருக்கலாம்னு பாக்கறேன்.''

''இப்பயாரும் உள்ளேஇருக்கக்கூடாதுன்னு டாக்டர் சொல்லிட்டாரு. யாராவது ஒருத்தர் வராந்தாவில இருந்தாப் போதும். நீங்க வீட்டுக்குப் போயிட்டு வர்ற வரைக்கும் நான் பார்த்துக்கறேன். ஏன் சொல்றேன்னா..

''என்னைத்தயவு செய்து இங்கேயே இருக்க விடுங்க ஸார் ப்ளீஸ்'' புடவைத் தலைப்பால் பொங்கிய கண்ணீரைத் துடைத்தாள்.

''எதுக்குச்சொல்றேன்னுரொம்ப டயர்டா இருக்கீங்க. நீங்க தெம்பா இருந்தாத்தான் அவரைப் பார்த்துக்க முடியும். இல்லேன்னு ஒண்ணு பண்ணுங்க. எங்க வீடாவது சைதாப்பேட்டைல இருக்கு. இங்க பக்கத்திலேயே பூந்தமல்லி ஹைரோட்ல ஓட்டல் கிராண்ட் இருக்கு. ராகுல் அங்கதான் தங்கி இருந்தார். ரூமை இன்னும் காலி பண்ணலே. அவர் ஸூட் கேஸெல்லாம் அங்கதான் இருக்கு. ஒன் அவர்ல நீங்க போயிட்டு வந்துரலாம். நான் அந்த ஓட்டலுக்குப் போன் பண்ணிச் சொல்லிடறேன். ரிஸப்ஷன்லே சாவியைக் குடுப்பாங்க. வாங்கி ரெஸ்ட் எடுத்துட்டு வந்துடுங்க. ரொம்ப டீஸண்டான ஓட்டல்.''

''அவர் ஸூட் கேஸெல்லாம் அங்கதான் இருக்கா?''

''ஆமா.''

ஸஞ்சனா வராந்தாவுக்குக் கீழே வளர்ந்திருந்த பூச்செடியைப் பார்த்தபடி மௌனமாக நின்றாள்.

''யோசிக்காதீங்க. போயிட்டு வந்திருங்க'' என்ற சம்பத். ''ஆ... இத உங்ககிட்டக் குடுக்க மறந்துட்டேனே'' என்று பாண்ட் பைக்குள் இருந்த முரட்டு ப்ரௌன் நிற ஆபீஸ் கவர் ஒன்றை எடுத்தார். ''இதுக்குள்ள அவர் பர்ஸ், சாவி பணமெல்லாம் இருக்கு. ராமசாமி எடுத்து என்கிட்ட ஒப்படைச்சார்.''

**ஓட்டல் ரிசப்ஷனில் சாவியைப் பெற்றுக் கொண்ட ஸஞ்சனா...**

விலை உயர்ந்த 'ரக்'கின் மீது நடந்து லிஃப்டுக்குச் சென்றாள்.

நாலாவது மாடியில் லிஃப்டிலிருந்து வெளிப்பட்டாள். 302வது அறைக்கு எந்தப் பக்கம் செல்ல வேண்டும் என்று தெரியாமல் திகைத்தாள். வெள்ளைச் சீருடையில் பெல் பாய் போல வந்தவன், அவள் தடுமாற்றத்தைப் புரிந்து கொண்டு ''ரூம்பு நம்பர் என்னம்மா?'' என்று கேட்டான்.

''302.''

''நேரா போயி லெஃப்டிலே திரும்பினீங்கன்னு கட்சீ ரூம்புக்கு முந்தின ரூம்பு. அந்த ரூம்புலேர்ந்தவர் ஆக்ஸிடெண்டாகி பெரியாஸ்பத்திரில இருக்கார்மா. அவரப் பாக்கணுமா?''

''நான் அவரோட ஒய்ப். இப்பத்தான் ஊர்லேர்ந்து வர்றேன்.''

அவளைத் தலை முதல் பாதம் வரை ஒரு தினுசாகப் பார்த்தவன், ''இப்பத்தான் வர்றீங்களா?'' என்று முணு முணுத்தான். அவள் அதற்கு மேல் அவனிடம் நின்றுகொண்டிருக்கவில்லை. அவன் சொன்ன திசையில் விரைந்து இடமாகத் திரும்பி 302ஐக் கண்டு பிடித்தாள்.

அறையைத் திறந்தபோது விசாலமான டபிள் பெட் ரூம். கர்ட்டனை விலக்கினாள்.



மானேஜர்: ராயகிருஷ்ணன், உடனே பம்பாய்க்கு எஸ். டி. டி. போட்டு விஷயத்தைச் சொல்லிவிடுங்கள்.

கிளார்க்: வேண்டாம் சார். நானே பிளேன்லே போய் நேரிடையாவே சீக்கிரமா சொல்லிவிடுறேன். அதிகமா செலவும் ஆகாது! -அந்தரோன்

மாலை நேரச் சென்னை நகரம் மஞ்சள் வெயிலில் சக்கல் சக்கலாய்க் கிடந்தது. எதற்காக இவ்வளவு பெரிய ரூமை எடுத்தார்?

விலகிக் கிடந்த படுக்கைகளைப் பார்த்தாள். ஒன்றில் படுக்கை விரிப்பு கசங்கி இருந்தது. இதில்தான் ராகுல் படுத்திருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு ஆணி வேர் வெட்டப்பட்ட மரமாக அதில் சாய்ந்தாள். இதயம் இரும்பாகக் கனத்தது.

அப்பா வந்தால் சம்பத் அவரை நிச்சயம் இங்கே அனுப்பி வைப்பார். இவ்வளவு சீக்கிரத்தில் கோயம்புத்தூரிலிருந்து வர முடியுமா? தந்தி காலையிலேயே கிடைத்திருந்தால் உடனே புறப்பட்டிருப்பார். எப்படியும் பத்து பத்தரைக்குள் வந்து விடுவார்.

அப்பாவைப் பார்த்துச் சரியாக ஒரு மாத மாகிறது. புருஷன் வீட்டுக்கு வந்த பிறகு இன்றுதான் முதல் தடவையாகச் சந்திக்கப் போகிறேன். இப்படி ஒரு சந்தர்ப்பத்திலா அந்தச் சந்திப்பு நிகழ வேண்டும்?

மெல்ல எழுந்தாள். பாத்ரூம் கதவைத் தள்ளினாள். அது விரியத் திறந்தபோது ஒரு கணம் அதிர்ந்து சிலையானாள். ஹாங்கரில் ஒரு 'ப்ரா' தொங்கியது.

ட்ரெஸ்ஸிங் கண்ணாடியிடம் ஓடினாள். ஓல்ட் ஸ்பைஸ் பவுடர் டின் இருந்தது. அவர் உபயோகிப்பதுதான். கைப்பிடியுடன் கூடிய சீப்பைக் கையில் எடுத்துப் பார்த்தாள். இதுவும் அவருடையதுதான். அதில் ஒரு தலைமுடி கூட இல்லாமல் சுத்தமாக இருந்தது.

சம்பத் கொடுத்த கவரைக் கொட்டினாள். உப்பிய மணி பர்ஸும் சூட் கேஸ் சாவியும் விழுந்தன. சூட் கேஸை அவசரமாகத் திறந்து உள்ளே இருந்தவைகளை வாரி வெளியில் போட்டாள். எல்லாம் ராகுலின் பான்ட் ஷர்ட், பனியன், அண்டர்வேர்கள். ஒரு பாண்டுக்குள் இருந்து அவர்களுடைய திருமணப் படம் விழுந்தது.

படுக்கைகளின் மீதிருந்த விரிப்புகளை எடுத்து உதறினாள். மெத்தைகளை உருட்டி விட்டுக் கட்டிலின் மேல் ஏதாவது கிடக்

*எமது உளங்கனிந்த தமிழ் புத்தாண்டு வாழ்த்துக்கள்*

# அதிக நபர்களை உடைய சுகேசன்ஸ் வெற்றி நடை போடுகிறது

**இது உண்மை - முற்றிலும் உண்மை. உங்களைப் போன்ற ஆயிரக்கணக்கான முதலீடு செய்வோர்கள் ஒப்புக் கொண்ட உண்மை. மற்றும் உங்கள் முதலீடு தக்க பாதுகாப்பும், பத்திரமும் அளிக்கிறது.**

நாங்கள் டிபாசிட்டுகளையும் ஏற்றுக் கொண்டு பின்கண்ட விகிதத்தில் வட்டி அளிக்கிறோம்.

| | |
|---|---|
| 15% — 18% | மாதந்தோறும், காலாண்டுதோறும், அரையாண்டுதோறும் மற்றும் ஆண்டுதோறும் வட்டி தரப்படும் |
| 23. 19% (ஏறத்தாழ) | வட்டியும், டிபாசிட்டும் 3 ஆண்டு காலத்திற்கு பிறகு திரும்பப் பெற்றுக் கொள்ளலாம் |
| 66.67% (ஏறத்தாழ) | வட்டி, 3 வருட ரொக்க சர்டிபிகேட்டுகளுக்கு வழங்கப்படும் |

குறைந்தபட்ச டிபாசிட்டாக ரூ 1,000/ம் ரூ 500/ன் மடங்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.



**SUGESAN** FINANCE INVESTMENT

(COPYRIGHT REGISTERED)

38, Rajaji Road, Madras-600 001.
Phones: 36870, 22495, 22466/67.
Telex: 041/480. Grams: SUGESANS.

ADSERVICE S 1279

Branches: AHMEDABAD, BANGALORE, BOMBAY, CALCUTTA, COCHIN, COIMBATORE, HYDERABAD & RAJKOT

# சென்னை-பம்பாய்-பழனியில் சிகிச்சை

பெறுங்கள். உலக புகழ்பெற்ற பழனி சித்தவைத்தியபதி



**Dr. S. காளிமுத்து,** R.M.P. (IND) V.V.C., A.M.I.H., R.A.M.P., R.H.M.P.,

அவர்களின் சுற்றுப்பயணத்தில் அல்லது பழனியில் நேரில் சந்தித்து ஆலோசனை பெற்று இதுவரை கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுகவாழ்வு பெறலாம்! உங்கள் பிரச்சனையான-தாம்பத்திய வாழ்வில் மாறுபாடு-ஆண்மைகுறைவு சோர்வு-அணுக்கள் குறை-வீரியமின்மை-குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை நரம்பு துவளல்-தேகஉறுப்புகள் மெலிவு-கெட்டகனவுகள்-தூக்கம் இல்லாமை-குழந்தை செல்வம் இல்லாமை-வெட்கம்-நடுக்கம்-தோல்வி-ஆஸ்துமா இருமல்-வாதநோய்-சருமநோய் குடல்புண்-வயிற்றுகோளாறுகள்-நவமூல வியாதிகள் மற்றும் இதர வியாதிகளும் 55 வருட அனுபவ மருந்துகள் பெற்று சுக வாழ்வும்-மறுமலர்ச்சியும் பெறலாம்.

| | | |
|---|---|---|
| சென்னை விஜயம்: | தேதிகள் 10-11 & 17-18-19 | **நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்,** எட்வோர்ட்ஸ் எலியட்ஸ் ரோடு—சென்னை—4. போன்: 83111: |
| பம்பாய் செம்பூர் விஜயம்: | தேதிகள் 20-21 | **பிரகாஷ் லாட்ஜ்,** ரயில்வே சமீபம்—செம்பூர்—பம்பாய்—19. போன்: 521049. |

பழனியில்:— 23-ந் தேதி முதல் 31-ந் தேதி வரை தலைமை ஆபீஸ்—

**பழனி சித்தர் வைத்தியசாலை, (Regd) பழைய தாராபுரம் ரோடு, பழனி-1.**

போன்: 316—316 வீடு: 470 தந்தி: 'சித்தர்'

சென்னை—பம்பாய்—பழனி ஆலோசனை நேரம்—காலை 10 to 12 மணி மாலை 3 to 5 மணி வரை

மேலும் நேரில் ஆலோசனை பெற:
13-ந் தேதி: சேலம்-லக்ஷ்மி ராஜபவன், மாலை 2 to 4 மணி;
15-ந் தேதி: ஈரோடு-நவபவனம், காலை 10 to 12 மணி;
திருப்பூர்-ஸ்ரீகிருஷ்ணா லாட்ஜ் பகல் 2 to 3½ மணி
பொள்ளாச்சி-கோபால் பில்டிங், மாலை 5 to 6 மணி.
16-ந் தேதி: கோவை விஜயா லாட்ஜ், காலை 10 to 12 மணி:
23-ந் தேதி: மதுரை-சந்திரனம் லாட்ஜ், காலை 10 to 12 மணி:

எமது மருந்துகள் கிடைக்குமிடம் } **கவிதா எண்டர்பிரைசஸ்,** 35, G. A. ரோடு, (ரெப்னி ஆஸ்பத்திரி அருகில்), சென்னை-21.

இறதா என்று பார்த்தாள். குனிந்து கட்டிலுக்கும் மேஜை நாற்காலிகளுக்கும் கீழே பார்த்தாள்.

ஒரு பெண் தங்கியதற்கான வேறு எந்தத் தடயமும் கிடைக்கவில்லை.

இந்த ப்ரா யாருடையதாக இருக்கும்?

இவருக்கு முன்னே இங்கே ஒரு பெண் தங்கியிருந்திருக்கலாம். அவள் இதை மறந்து போய் விட்டுச் சென்றிருக்கலாம். அறை காலியானதும் சுத்தம் செய்யாமலா இன்னொருவருக்குச் சாவியைக் கொடுப்பார்கள்?

ஒருவேளை அவர் இப்போதைக்கு ஆஸ்பத்திரியிலிருந்து எழுந்து வரமாட்டார் என்ற தைரியத்தில் ஓட்டல்காரர்கள் இந்த அறையைத் தவறான காரியங்களுக்குப் பயன்படுத்துகிறார்களோ? ரொம்ப டீஸண்டான ஓட்டல் என்று சம்பத் சர்டிபிகேட் கொடுத்தாரே.

ஸஞ்சனா குழம்பினாள். பகல் வெயிலில் பிரயாணம் செய்து வந்தது கசகசவென்று உடம்பெல்லாம் எரிந்தது. குளிர்ந்த நீரைச் சொரிந்த ஷவருக்குக் கீழே அரை மணி நேரம் நின்றாள்.

ராகுலுக்குப் பிடித்த கத்தரிப்பூ நிற ஆர்கன்சா புடவையை எடுத்து உடுத்தினாள். நெற்றிக்கு அகலமாக இட்டுக் கொண்டு ஒருவேளை ராகுல் இன்னேரம் கண் திறந்து பார்த்திருக்கலாம் என்று எண்ணினாள். ஆஸ்பத்திரிக்குப் போன் பண்ணிச் சம்பத்துடன் பேசிப் பார்க்கலாம்.

தொலைபேசி அருகே சென்றாள். எல்லாத் தெய்வங்களும் வரிசையாக அவள் எதிரே வர ஸ்லோகங்களால் அவர்களைத் திருப்திப் படுத்தியபடி ரிஸீவரைக் கையில் எடுத்தாள். காதில் வைத்து ''ஹலோ ஹலோ'' என்றாள். எந்தச் சத்தமும் வரவில்லை. லைன் துண்டிக்கப்பட்டிருக்குமோ?

கீழே ரிசப்ஷனுக்குப் போய்ப் பண்ணிப் பார்க்கலாம் என்று அவசரமாக அறையைப் பூட்டினாள். லிஃப்டில் இறங்கினாள்.

ரிஸப்ஷனில் நீல 'டை' கட்டி, கனத்த மீசை வைத்து அமர்ந்திருந்த இளைஞன் போனை ஸஞ்சனாவின் பக்கம் திருப்பி வைத்தான். ''போன் பண்ணிக்கோங்கோ'' என்று சொல்லிவிட்டு எழுந்து எங்கேயோ நடந்தான். சற்றுத் தள்ளி நாகரிகமாக ஒரு பெண் தலையைக் குனிந்து யாருக்கும் தெரியாமல் மடிமீது கல்கியை விரித்து வைத்துப் படித்துக் கொண்டிருந்தாள்.

போனைக் காதில் பொருத்திய ஸஞ்சனா ''ஜெனரல் ஹாஸ்பிட்டல் கொடுங்க'' என்றாள்.

''ப்ளீஸ் ஹோல்ட் ஆன்'' என்று பதில் வந்தது.

லைனுக்காக ஸஞ்சனா காத்திருந்தபோது டெஸ்கின் மேல் திறந்து கிடந்த லெட்ஜரின் பக்கங்கள் மின் விசிறியினால் புரண்டன. ராகுலின் கையெழுத்து தற்செயலாக அவள் பார்வையை இழுக்க, அவசரமாக லெட்ஜரைப் பக்கத்தில் இழுத்தாள்.

ராகுல்தான் அந்த லெட்ஜரின் கலங்களைப் பூர்த்தி செய்திருந்தான்.



'அறையில் தங்கியிருப்பவரின் பெயரும் முகவரியும்' என்ற கலத்துக்குக் கீழே மிஸ்டர் அண்ட் மிஸஸ் ராகுல், திருநகர், மதுரை' என்று எழுதியிருந்தான். நாலைந்து கலங்கள் தள்ளி 'அறையில் தங்கும் மொத்த நபர்கள்' என்ற கலத்தில் '2' என்று எழுதியிருந்தான். அதுவும் அவன் கையெழுத்து. கடைசிக் கலத்தில் கையொப்பமிட்டுத் தேதி போட்டிருந்தான்.

''ஹலோ... ஜி. எச்.தானே கேட்டீங்க, பேசுங்க.'' பெண் ஆப்பரேட்டரின் குரல் எரிச்சலுடன் அதட்டலாக உத்தரவிட்டது. தொலைபேசியை 'பொடுக்' என்று ஸஞ்சனா வைத்துவிட்டு விருவிருவென்று லிஃப்டுக்கு நடந்தாள்.

**மறுபடியும் அறைக்குள் புகுந்த ஸஞ்சனா...**

கதவை உட்பக்கம் தாழிட்டாள். படுக்கையில் குப்புற விழுந்தாள். தேம்பித் தேம்பிக் கண்ணீர் வற்றும்வரை அழுதாள்.

ஏதோ நினைத்துக் கொண்டவளாக எழுந்தாள். குளியலறைக் கதவைத் திறந்தாள். அந்த 'ப்ரா' அமைதியாகத் தொங்கியது. பக்கத்தில் தொங்கிய பிளாஸ்டிக் ஹாங்கரை எடுத்தாள். அந்த ஹாங்கரால் அந்த ப்ராவைச் செத்த பாம்பைக் குச்சியால் தூக்குவதைப் போலத் தூக்கினாள். வெளிச்சத்துக்குக் கொண்டு வந்து பார்த்தாள்.

பஸ்ட்லைனை மிகைப்படுத்திக் காட்டும், வேலைப்பாடுள்ள விலை உயர்ந்த ப்ரா. அழுக்கு அதிகமில்லை. எனவே இதை அணிந்தவள் எடுப்பான தோற்றத்துக்காக ஏங்கும் வசதியான குடும்பத்துப் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும். வேறு எதுவும் தெரியவில்லை. ஒரு உபயோகப்படுத்தப்பட்ட ப்ராவைக் கொண்டு, அதை உபயோகித்த பெண்ணின் உயரம், நிறம், வயது ஆகியவற்றைக் கண்டுபிடிக்க வழி இருக்கிறதா?

குழம்பினாள். ப்ராவைப் பழையபடி அதனுடைய இடத்தில் தொங்கவிட்டாள். அப்பா வந்து பார்த்தால் என்னுடையது என்று நினைத்துக்கொள்வார். அவர் எதற்குக் கோயமுத்தூரிலிருந்து இந்த மனிதருக்காக அலறியடித்துக் கொண்டு வரவேண்டும்?

திருமணத்தின்போது பெரிய கொண்டைகளைச் சுமந்து கொண்டு வந்த ஜரிகைக் காஞ்சிபுரங்களையும், நெக்லஸ் கழுத்துக்களையும், லிப்ஸ்டிக் இதழ்களையும் நினைவுக்குக் கொண்டு வந்தாள்.

'இதோ என்றோட கஸின், கங்கா அம்மாவோட ஒன்றுவிட்ட...' என்று ரிஸப்ஷன் சமயம் ராகுல் அறிமுகம் செய்த பத்துப்



பதினைந்து பெண் முகங்களை நினைவுக்குக் கொண்டுவர முயன்றான்.

அவர்களில் எவளோ ஒருத்திதான் இந்த ப்ராவுக்குச் சொந்தக்காரியாக இருக்க வேண்டும். ராகுல் ஆபீஸ் விஷயமாகத் திடீரென்று சென்னைக்குப் புறப்பட்டு வந்தது அந்த 'எவளோ' ஒருத்திக்கு எப்படித் தெரிந்தது? எல்லாமே முன்கூட்டியே வகுத்த திட்டங்களா?

கொடைக்கானலில் ஹனிமூன் அநுபவித்த போது ராகுல் பேசிய வார்த்தைகளைநினைவின் ஆழத்திலிருந்து அள்ளிக் கொண்டு வந்து ஒவ்வொன்றையும் ஆராயத் தொடங்கினாள்.

### ஸஞ்சனா காட்டேஜுக்கு வெளியே...

மரப்பலகை வேலியின் மேல் உட்கார்ந்திருந்தாள். ராகுல் அவள் தொடையின் மீது கரத்தை ஊன்றியபடி தொலைவில் யூகலிப்டஸ் மரங்களுக்குள்ளிருந்து வழிந்து ஏரியின் நீரின்மேல் தவழ்ந்த மூடு பனியைக் காண்பித்தான்.

''இன்னும் கொஞ்ச நேரத்தில் அந்த மூடு பனி நம்மையும் சுத்திக்கும்'' என்றான், ஸஞ்சனா.

''ரொம்ப நல்லதாப் போச்சு!''

''ஏன்?''

''நம்ம ரெண்டு பேரையும் யாரும் பார்க்க முடியாது.''

''முடியாட்டி?''

''என்ன வேணும்னாலும்பண்ணிக்கலாம்.''

''சீ...எப்போதும் அதே நினைப்புத்தானா? கல்யாணத்துக்கு முன்னால சத்தியமா நீங்க ஒழுங்கா இருந்திருக்க மாட்டீங்க. மதுரைல எத்தனை ஜூலியட் இருக்காங்களோ உங்களுக்கு யார் கண்டது?''

''உனக்கு மட்டும் பாய் ஃப்ரெண்ட்ஸ் இல்லாம இருந்திருப்பாங்களா?''

''இல்லேன்னு நான் சொல்லலியே.''

''அப்ப இருந்தாங்களா?'' ராகுலின் குரலில் உற்சாகம் இறங்கியது.

''பின்னே? ஒரே ஒரு பாய் ஃப்ரண்ட் இருந்தான்.''

''இப்ப எங்க இருக்கான்?''

''எங்க இருக்கானோ. ரொம்ப நாளா என்னையே சுத்திக்கிட்டிருந்தான். நான் நிக்கற பஸ் ஸ்டாண்டில நிப்பான். காலேஜ் வாசல் வரைக்கும் பின்னாலேயே வருவான். சாயங்காலம் காலேஜ் விடற நேரத்தில காலேஜ் பக்கத்திலே இருக்கிற பஸ் ஸ்டாப்பில நிப்பான். பஸ்ஸில எனக்குப் பக்கத்திலேயே நிப்பான். அவன் எவ்வளவு நாளா என்னைத் தொடர்ந்துக்கிட்டிருக்கான்னு தெரியாது. ஒரு நாள் பஸ் ஸ்டாப்ல என்னையும் அவனையும் தவிர வேறு யாரும் இல்லே. பக்கத்திலே மெதுவா வந்து ஒரு கவரை நீட்டினான்.''

''நீ வாங்கிட்டியா?''

''வாங்கக் கூடாதா? வாங்கினேன். பிரிச்சுப் பார்த்தேன். உருது மாதிரிப் பெரிசா ஒரே ஒரு வார்த்தை எழுதியிருந்தான். அர்த்தம் கேக்கலாம்னு தலையை நிமிர்ந்தா அவன் பக்கத்தில இல்லே ஓடிட்டான்.''

''அது என்ன வார்த்தை?''

''எனக்குப் புரியலே. கிளாஸ் நடக்கும் போது சர்குலேட் பண்ணேன். ஒருத்தி அவன் எழுதியிருந்ததைக் கண்டு பிடிச்சுட்டா. ஐ லவ் யூன்னு எழுதியிருந்தான்.''

''அந்தப் பொண்ணு எப்படிக் கண்டு பிடிச்சா? அவளுக்கு உருது தெரியுமா?''

'' ஷார்ட் ஹாண்ட் கத்துக்கிட்டிருந்தா'' என்று சொல்லிவிட்டுக் குலுங்கிக் குலுங்கி இரண்டு நிமிடம் சிரித்தாள்.

''அப்புறம் நீ என்ன பண்ணே?''

''மறுநாள் அதே பஸ் ஸ்டாப்லே அவன் கிட்ட ஒரு கவரை நீட்டினேன். சந்தோஷமா வாங்கிக்கிட்டுப் போனான். போனவன் அத்தோட போயிட்டான். அப்புறம் அவனை நான் பார்க்கவேயில்லே.'' மறுபடியும் சிரித்தாள்.

''நீ என்ன எழுதிக் கொடுத்தே?''

''அவனோட காகிதத்தைச் சுக்கல் சுக்கலா கிழிச்சு உள்ளே வெச்சிருந்தேன்.''

''அவன் எப்படி இருந்தான்?''

''அசைப்பிலே உங்களை மாதிரி இருப்பான்.''

ராகுலின் முகத்தில் அசடு வழிந்தது.

''நான் என்னோட லவ் ஸ்டோரியை ஒளிவு மறைவில்லாமல் சொல்லிட்டேன். இனிமே உங்க லவ் அஃபேர்ஸ நீங்க சொல்லுங்க'' என்றாள் ஸஞ்சனா.

''என்னோட கேர்ள் ஃப்ரெண்ட் காதலி, மனைவி எல்லாமே இந்த ஸஞ்சுதான்.'' என்று சொல்லிக் கொண்டு அவள் உச்சந்தலையின் மீது கைவைத்தான்.

இந்த ப்ரா, கேர்ள் ஃப்ரெண்டுடையதா, காதலியினுடையதா? கண்டுபிடித்தாக வேண்டும்.

### திடீரென்று ஸஞ்சனா கண் விழித்தாள்...

இரவு பகலாகி ஜன்னல் வழியாக உள்ளே புகுந்த காலை வெய்யில் தங்கப் பாளமாகத் தரையில் கிடந்தது.

தாங்க முடியாத உடம்பு வலியோடு புரண்டாள். கண்கள் தகதகவென எரிந்து ஜுரம் வரப்போகும் அறிகுறி. மெல்ல எழுந்தாள். விரியத் திறந்திருந்த குளியலறைக்குள் அந்த 'ப்ரா' அமைதியாக அசைவற்றுத் தொங்கியது.

சுழன்று கொண்டிருந்த மின் விசிறியை நிறுத்தி, எரிந்து கொண்டிருந்த விளக்குகளை அணைத்தாள்.

சம்பத் பாவம், ஆஸ்பத்திரி வராந்தாவில் எனக்காகக் காத்திருப்பார். அப்பா வரவேயில்லையா? இரவு கோயம்புத்தூரிலிருந்து தகவல் ஏதாவது வந்திருக்குமா? ஆஸ்பத்திரிக்

குப் போன் செய்யவா வேண்டாமா? சம்பத்துக்குத்தான் நான் இங்கே இருப்பது தெரியுமே. ஏதாவது விஷயம் இருந்தால் நிச்சயம் போன் பண்ணுவார். இந்தத் தொலைபேசி வேலை செய்கிறதா இல்லையா?

போனை எடுத்துக் காதில் வைத்தாள்.

''எக்ஸ்சேஞ்ச் குட்மார்னிங்.''

''ரிஸப்ஷன் ப்ளீஸ்.''

''ரிஸப்ஷன், குட்மார்னிங்.''

''குட்மார்னிங். ரூம் நம்பர் த்ரீ நாட் டுலேர்ந்து மிஸஸ் ராகுல் பேசறேன். எனக்கு டெலிபோன் மெஸேஜ் ஏதாவது நைட்ல வந்ததா?''

''ஒன் மினிட்.... நோ மேடம்.''

ஸஞ்சனா போனை வைத்தாள். சம்பத் கொடுத்த ப்ரௌன் கவரிலிருந்து ராகுலின் மணிப் பர்சை எடுத்தாள். ஜிப்பை இழுத்து உள்ளே இருந்தவைகளைக் கொட்டினாள். ரூபாய்த் தாள்களும் சில்லறைகளும் விழுந்தன. இரண்டு நாள் ஊருக்கு இவ்வளவு பணம் எதற்கு? குடிப் பழக்கமும் இருக்குமோ?

பர்சின் மேல் அறைக்குள்ளிருந்த சின்னச் சதுர வெள்ளை அட்டைகளை உருவினாள். எல்லாம் ராகுலின் விஸிட்டிங் கார்டு. இதுக்கெல்லாம் குறைச்சல் இல்லே. தூக்கி எறிந்தாள். தரையில் நாலைந்து ராகுல்கள்.

மறுபடியும் போனை எடுத்தாள். இரண்டு இட்லி, ஒரு வடை, ஒரு காப்பி ஆர்டர் பண்ணினாள். அவன் கொண்டு வருவதற்குள் பல் தேய்த்து விட வேண்டும் என்று ப்ரஷைத் தன் சூட் கேஸிலிருந்து எடுத்தாள். பற்பசையைத் தேடினாள். கொண்டுவரவில்லை.

குளியலறையிலிருந்த டாய்லெட் டேபிளின் மேல் ஒரு டூத் பேஸ்ட் இருந்த ஞாபகம்.

உள்ளே போய் எடுத்தாள். இரண்டுமுறை பிதுக்கிய நெளிசல்களுடன் புதிய பேஸ்ட். எடுத்ததை அருவருப்புடன் தூக்கிப் போட்டாள். மளமளவென்று ஆள்காட்டி விரலால் பல்லைத் தேய்த்து வாயைக் கொப்பளித்தாள். குளியலறையை விட்டு வெளியேவருவதற்கும் பையன் ட்ரேயில் ஆவி பறக்கும் இட்லி வடை சாம்பாருடன் உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது.

தட்டுக்களில் இருந்ததைப் பார்த்ததும் அவள் வயிற்றில் தீப்பசி.

இட்லியைப்பிய்த்துச்சாம்பாரில்தோய்த்து வாயருகே கொண்டு போய்க் கையை அந்தரத்தில் நிறுத்தியபடி கட்டிலுக்குக் கீழே பார்த்தாள். எடுத்த துண்டைத் தட்டில் போட்டுவிட்டு எழுந்தாள். சற்று முன் அவள் தூக்கி எறிந்த விஸிட்டிங் கார்டுகளில் ஒன்று கவிழ்ந்து கட்டிலுக்குக் கீழே கிடந்தது. கருப்பு ஸ்கெட்ச் பேனாவால் அதில் எழுதப் பட்டிருந்த முகவரியைப் பார்த்தாள்.

ரமேஷ் பி.காம்.,

17-டி, அசோக் பில்லர் மெயின் ரோடு,

விருகம்பாக்கம்.

இட்லி வடையை மறந்துவிட்டுக் கையைக் கழுவ ஓடினாள்.

**அசோக் பில்லரைக் கடந்த ஆட்டோ....**

கலைஞர் கருணாநிதி, எம்.ஜி.ஆர். நகர்களைத் தாண்டி நேராக ஓடியது. சாராயநெடி கலந்த காற்று ஆட்டோ டிரைவரின் மூக்கில் ஏற அவர் லேசாகத் திரும்பி ''எங்க நிறுத்தணும்மா சொல்லுங்க'' என்றார்.

''இதான் விருகம்பாக்கமா?'' ஸஞ்சனா கேட்டாள்.

''ஆமாங்கோ. நீங்க எங்க போகணும்?'' அலுத்துக் கொண்டவராகக் கேட்டார்.

''கொஞ்சம் நிறுத்து.''

நின்றது. விஸிட்டிங் கார்டை அவரிடம் கொடுத்தாள். அதை வாங்கிய டிரைவர் இறங்கி பிளாட்பாரத்துக்கு ஓடினார். பங்க் கடையில் சிகரெட் பற்றவைத்தவரிடம் அட்டையைக் காட்டினார். அவர் அதை வாங்கிப் படித்தார். புகையை ஊதிவிட்டுக் கையை இங்கும் அங்குமாக அசைத்து வழி காட்டினார்.

மறுபடியும் ஆட்டோ ஓடத்தொடங்கியது.

''பக்கத்தில்தான் இருக்குங்க.''

குடி குடியைக் கெடுக்கும் என்ற போர்டுக்குப் பக்கத்தில் திரும்பிய ஆட்டோ குறுகலான சந்துக்குள் ஓடியது. சந்தின் இடது வலது ஓரங்களில் மூக்கு வடிக்கும் குழந்தைகள் சட்டையைத் தூக்கிக்கொண்டு அமர்ந்து காலைக் கடன்களைக் காற்றோட்டமாகக் கழித்துக் கொண்டிருந்தன. காலியான சாராய கேன்களை ஒரு சிறுவன் குடிசைப் பக்கம் சுமந்து கொண்டு போனான். ஒரு பெண் சாக்கடை ஓரமாக பாலிதீனைப் பரப்பி மீன்களைக் கூறுகட்டி மணலை மேலே தெளித்தாள்.

தண்ணீர்க் குழாய் அருகே குடங்கள் க்யூ வில் உட்கார்ந்திருந்த இடத்தில் ஆட்டோ நின்றது. ஆட்டோக்காரர் இறங்கி ஆகா யத்தைப் பார்த்தார்.

''இதாங்க 17. மாடி மேலே போங்க'' என்று வெளிப்பக்கம் தெரிந்த படிக்கட்டைக் காட்டினார்.

ஆட்டோவுக்குள்ளிருந்து வெளிப்பட்ட ஸஞ்சனாவின் புடவையை அந்தத் தெருப் பெண்கள் ஆச்சரியத்துடன் வேடிக்கை பார்த் தனர்.

ஸஞ்சனா அண்ணாந்தாள். வரிசையாக நாலைந்து ரூம்கள். ஈர டவல்கள் வெயிலில் உலர்ந்தன.

''வெய்ட் பண்ணணுமா?'' ஆட்டோக் காரர் கேட்டார்.

''இருங்க பத்து நிமிஷத்தில வந்துர் றேன்.''

**மாடி வராந்தாவில் ஸஞ்சனா...**

நடந்தாள். இடுப்பில் துண்டைக் கட்டிக் கொண்டு தரையில் அமர்ந்திருந்தவன் சுவரில் சாத்தியிருந்த சின்னக் கண்ணாடியைப் பார்த்து முகச் சவரம் பண்ணிக் கொண்டிருந் தான். மேலே வந்தஸஞ்சனாவை பேயறைந் தவனைப் போல பார்த்தான். ''யார் வேணுங்க?''

''மிஸ்டர் ரமேஷ்.''

''கடைசி ரூம். நைட் டூட்டி பார்த்துட்டு வந்து தூங்கிக்கிட்டிருக்காரு.''

கடைசி அறைக்குச் சென்றாள்.

டொக் டொக் டொக்.

கதவு திறந்தது. சட்டை இல்லாமல் எலும்பாக நின்ற இளைஞன் காக்கிப் பாண்ட் மட்டும் அணிந்திருந்தான். கண்களை இடுக் கிக்கொண்டு பார்த்தான். ''ரமோலா'' என்று அரைத் தூக்கத்தில் முணு முணுத் தான். கண்களைச் சிக்கென்று மூடிக்கொண்டு முகத்தை உதறிவிட்டு நன்றாக விழித்துப் பார்த்தான். உள்ளே ஓடினான். டவலால் உடம்பைப் போர்த்திக் கொண்டு திரும்பி வந்தான். ''யாரைப் பார்க்கணும்?'' கண் டிப்புத் தொனிக்கும் குரலில் கேட்டான்.

''மிஸ்டர் ரமேஷ்.''

''நான்தான்.''

ஸஞ்சனா விசிட்டிங் கார்டை நீட்டினாள். அதைக் கையில் வாங்கிப் பார்த்து ''ராகுல்'' என்றான். ''அவர் இங்கே வந்திருக்காரா?'' என்று ஒருவிதப் பதற்றத்துடன் கேட்டான்.

''இல்லே.''

''வரலியா?'' என்றவன், சின்ன யோச னைக்குப் பின் ''அவருக்காகத்தான் இரண்டு நாளாக் காத்திருக்கேங்க'' என்றான்.

''அவரை எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''முந்தாநாள் இதே நேரத்தில இங்கே வந்திருந்தார்.''

''எதுக்கு?''

''இஃப் யு டோண்ட் மைண்ட் உள்ளே வந்து உட்கார்றீங்களா?''

கதவை விரியத் திறந்து விட்டான். ஜன்னல் கதவுகளைத் திறந்து மின் விசிறியைச் சுழல விட்டான்.

ஸஞ்சனா உள்ளே போய்க் கைப்பிடி இல் லாத நாற்காலியில் அமர்ந்தாள்.

''நீங்க யாருங்க?'' ரமேஷ் கேட்டான்.

''மிஸஸ் ராகுல். மதுரையிலிருந்து வந் திருக்கேன்.''

''அவரோடதான் வந்தீங்களா?''

''இல்லே. நான்தேத்துணைகைவந்தேன்.''

''அவர் எங்கே இருக்கார்?''

''ஆக்ஸிடன்ட்ல . சிக்கி ஜெனரல் ஆஸ் பிட்டல்ல இருக்கார்.''

''ஐயையோ அப்படியா? அவரைத்தான் ரெண்டு நாளாத் தேடிக்கிட்டிருக்கேங்க. ஐ'ம் வெரி ஸாரிங்க. இப்ப எப்படி இருக்கார்?''

''எதுக்காக அவரைத் தேடறீங்க?''

''அவரு ஆபீஸ் விஷயமா மதுரைலேர்ந்து வந்திருக்கார். அவர் இருந்த ஃபர்ஸ்ட் கிளாஸ் கம்பார்ட்மென்ட்ல ரமோலாவும் வந்திருக்கா.''

''யாரு ரமோலா?''

ரமேஷ் ஆண்களுக்கு வரக்கூடாத நாணத் துடன் தலை குனிந்து ''என் கேர்ள் ஃப்ரெண்டுங்க. உங்க ஹஸ்பெண்ட் மேல் பர்த்ல படுத்திருந்தார். நடு ராத்திரி கீழே இருந்து அழுகைச் சத்தம் வந்திருக்கு. மெல்லத் தலையை நீட்டிப் பார்த்திருக்காரு. ரமோலா தூங்காம அழுதுக்கிட்டிருந்திருக்கு. எதிர் பக்கம் மேல் பர்த்ல ஒரு கிழவரும் கீழே அவர் பெஞ்சாதியும் தூங்கிக்கிட் டிருந்திருக்காங்க. ரமோலா நடு ராத்திரி ஓசைப்படாம எழுந்து கம்பார்ட்மென்ட் கதவைத் திறந்து வெளியேறியிருக்கா.



உங்க ஹஸ்பெண்ட் பூனை போல் இமே குதிச்சுத் தலைய நீட்டிப் பார்த்திருக்காரு. ரமோலா டாய்லட் பக்கம் போகாம வேற பக்கமா காரிடார்ல நடந்திருக்கா. ராகுலுக்கு சந்தேகம் வந்திருக்கு. ரமோலா நேரா போயி கதவை இழுத்திருக்கா. திறக்க வரல. உன் பக்கம் போயி இன்னொரு கதவி லேர்ந்த தாழ்ப்பாளை விலக்கி இழுத் திருக்கா. கதவு திறந்திருக்கு. வெளில குதிக்கப் போகும்போது ராகுல் பாஞ்சு கையைப் பிடிச்சு உள்ளே இழுத்துப் போட் டிருக்காரு. உங்க ஹஸ்பெண்ட் செஞ்ச உதவியை நான் மறக்கவே மாட்டேன்.''

''ரமோலா உங்களுக்கு ரிலேடிவா?''

''இல்லேங்க. மதுரைல ஒரு மூணு மாசம் தங்கியிருந்தேன். நான் இருந்த வீட்டுக்கு எதிர்த்த வீடுதான் ரமோலாவோட வீடு. ட்ரெயினிங் முடியறதுக்குள்ள எங்களுக் குள்ள காதல் வளர்ந்துருச்சு. நான் இங்க வந்த பிறகு நாலேஞ்சு லெட்டர் போட்டேன். அது அவளுக்குக் கிடைக்கல போல இருக்கு. அவ என்னோட சைதாப்பேட்டை அட்ர சுக்கு லெட்டர் போட்டிருக்கா. அது எனக் குக் கிடைக்கல்ல. பிரிவட் வேறே திமர்னு நினைதும் பயந்து போய் லேடி டாக்டரை கன்சல்ட் பண்ணியிருக்கா. ப்ரெக்னென்ட். வீட்டில அப்பா கிட்ட என்னைப் பத்திச் சொல்லியிருக்கா. அவர் சொந்தத்தில வேற ஒரு பையனை அவளுக்குப் பார்த்துக்கிட்டிருந் திருக்காரு. அது தெரிஞ்சதும் வீட்ல கோவிச் சுக்கிட்டு சொல்லாமக் கொள்ளாம வீட்டை விட்டுக் கிளம்பி ரயில்ல ஏறிட்டா. பாதி ராத்திரில பலவிதமாக் குழம்பித் திமர்னு தற்கொலை முடிவுக்கு வந்திருக்கா. மிஸ்டர் ராகுல் மட்டும் அந்த கம்பார்ட் மென்ட்ல இல்லேன்னு என் ரமோலா இந்நேரம் உல கத்தில இருக்க மாட்டா.''

''இப்ப எங்க இருக்கா?''

ரமேஷ் ஸஞ்சனாவை ஒரு மாதிரியாகப் பார்த்தான். ''அவளைப் பார்க்கறதுக்குத்தான் துடியாத் துடிச்சுக்கிட்டிருக்கேங்க. முந்தா நாள் ராகுல் இங்கே வந்தார். ரமோலாவை பத்திரமாக் கொண்டு வந்து சேர்த்துட்டேன். கிராண்ட் ஒட்டல் ரூம்ல ரெஸ்ட் எடுத்துக் கிட்டிருக்கா. இப்ப நீங்க அங்க போயி அவளை டிஸ்டர்ப் பண்ண வேண்டாம். ஒட்டல் காரங்க தப்பா நினைப்பாங்க. ஆபீஸ்ல எனக்கு அவசர வேலை இருக்கு. ஆபீசுக்குப் போயிட்டு சாயந்திரமா அழைச்சுக்கிட்டு இங்க வர்றேன்னு சொல்லிட்டுப் போனார். சாயங்காலம் நான் காத்திருந்தேன். அவர் ஏன் வரலேன்னு இப்பத்தான் புரியுது. என் ரமோலா எப்படி இருக்கா?''

''அவ அங்க இல்லையே. ஒருவேளை அவ உங்களைத் தேடி அலைஞ்சுக்கிட்டிருக்காளோ? உங்க அட்ரஸ்எப்படிராகுலுக்கு தெரிஞ்சது?''

''ரமோலா கிட்ட என் பாஸ்போர்ட் சைஸ் போட்டோ இருந்திருக்கு. அதுக்குப் பின்னால ஜெயந்தி போட்டோ ஸ்டுடியோ தேரடி,சைதாப்பேட்டைன்னுரப்பர்ஸ்டாம்ப் இருந்திருக்கு. மிஸ்டர் ராகுல் அங்கே போயி என் அட்ரசைக் கேட்டிருக்காரு. சைதாப் பேட்டைல நான் இருந்த பழைய வீட்டு அட்ரஸ் கிடைத்திருக்கு. அந்த வீட்டுக்குப் போயிருக்கார். இந்த ரூம் அட்ரஸ் கிடைச் சிருக்கு. பாவம் ஒரு ஜோடியைச் சேர்த்து வைக்க ரொம்பச் சிரமப்பட்டிருக்காருங்க. ரமோலா ஒட்டல்ல இல்லேன்னு நீங்க சொன்னதும் எனக்கு ரொம்பக் கலக்கமா இருக்குங்க.... பழையபடி....''

''சேச்சே அப்படி யெல்லாம் இருக்காது. பத்திரமா வந்து உங்க கிட்டச் சேருவா. கவலைப்படாதீங்க. என் கணவர் எடுத்துக் கிட்ட முயற்சி நிச்சயம் வீண் போகாது.'' ஸஞ்சனா எழுந்தாள். ''அப்ப நான் வர் றேங்க. அவர் எப்படி இருக்கார்னு நான் பார்க்கணும்.''

''எந்த வார்டுல இருக்கார்?''

''இன்டென்சிவ் கேர்ல.''

''போங்க பின்னாடியே நானும் வர்றேன்''

**ஸஞ்சனா ஆஸ்பத்திரி வராந்தாவில்...**

ஓடினாள் ராகுலுக்காக அவள் மனம் இஷ்ட தெய்வங்களை யெல்லாம் வேகமாகப் பிரார்த்தித்தது.

இன்டென்சிவ் கேர் யூனிட்டை அடைந் தாள்.

சம்பத் வராந்தாவில் காணப்படவில்லை.

ஸஞ்சனாவுக்குப் பகீர் என்றது.

வார்டுக்குள் நுழைந்தாள்.

---

**ஒரு சிகரெட் - ஆயுள் 13 நிமிடங்கள்**

ஒருவரின் ஆயுள் ஒரு சிகரெட்டால் 13 நிமிடங்கள் விதம் குறைகிறது என இருதயப் பிரிவு மருத்துவ நிபுணர்கள் புள்ளி விவரங்களுடன் கூறுகிறார்கள்.

'சிகரெட் பிடிப்பது உடல் நலத் துக்கு ஊறு விளைவிக்கும்', என்னும் வாச கத்தை சிகரெட் பாக்கெட்டுகளில் பிர சுரித்தும், சிகரெட் உற்பத்தி 2 சத வீதம் உயர்ந்தும், சிகரெட் குடிப்பவர் களின்எண்ணிக்கை 7 சதவீதம் பெருகி யும் காணப்படுவதாக அறிக்கை கூறு கிறது.

தகவல்: பாத்திமுத்து



ராகுல் படுத்திருந்த படுக்கையும் அடுத்த படுக்கையும் காலி.

நர்சுகள் விரிப்பை மாற்றிக் கொண்டிருந்தனர்.

"இந்த பெட்ல இருந்த மிஸ்டர் ராகுல்?"

"நீங்க ராத்திரி வரலியா?"

"இல்லீங்க."

"அவருக்கு நைட் பன்னிரண்டு மணிக்கு சுயநினைவு வந்திருச்சு. இப்ப பெட்டராக இருக்கார். வேற வார்டுக்கு மாத்திருக்கோம். அந்த ஸிஸ்டர் கிட்டக் கேளுங்க. எந்த வார்டுன்னு கரெக்டாச் சொல்லுவாங்க."

அந்த ஸிஸ்டரிடம் ஸஞ்சனா ஓடினாள். வார்டிலிருந்து வெளியேறி வராந்தாவில் ஓடினாள். லிப்டில் ஏறாமல் படிகளில் மளமளவென்று ஏறி மூத்திர வாடையைக் கடந்தாள். ஒரு பெரிய வார்டுக்குள் புகுந்து ஒரு டாக்டரை விசாரித்து அங்கிருந்து வெளியேறி ராகுலின் படுக்கையைக் கண்டுபிடித்த போது—

"அவர் இப்பத்தான் தூங்கினார். டிஸ்டர்ப் பண்ணாதீங்க" என்று ஒரு கறுப்பு நர்ஸ் சொன்னாள்.

வராந்தாவில் கிடந்த நாற்காலியில் மாலை வரை ராகுல் கண் விழிப்பதற்காகக் காத்திருந்தாள்.

சம்பத் கொண்டு வந்த மாலைப் பத்திரிகையைத் தற்செயலாகப் பார்த்தவள் திடுக்கிட்டாள்.

'காதலியைக் கொன்று கூவத்தில் வீசியவர் கைது' என்ற தலைப்புக்குக் கீழே வந்திருந்த ரமேஷின் படத்தை ஆச்சரியத்துடன் பார்த்தாள். பக்கத்தில் இருந்த ரமோலாவின் படத்தைப் பார்த்தாள். நீயா அந்த பிராவுக்குச் சொந்தக்காரி!

**திருப்பரங்குன்றம், உச்சந்தலை மீது...**

சூடிக்கொண்டிருந்த சிவப்புப் பூ பம்பரமாகச் சுழன்றது. வானப் பரப்பில் நட்சத்திரப் பூக்கள் சிதறிக் கிடந்தன.

மாடி அறையில் ராகுலின் அணைப்பில் நிறைந்த ஸஞ்சனா ஏதோ நினைத்துக்கொண்டவளாக விலகி, "பாவங்க அந்த ரமோலா" என்றாள்.

"ரமேஷ் மூஞ்சியைப் பார்த்ததுமே இவன் கொலைகாரன்னு முடிவு பண்ணிட்டேன். நல்ல வேளை நானுக் கொண்டு போயி அவன் கையில அவளை ஒப்படைக்கல. அது சரி இன்னும் எத்தனை நாளைக்கு அவளை நினைச்சுக்கிட்டிருக்கப் போறே? லைட்டை அணைச்சுட்டு வா."

"ஊஹூம். வரமாட்டேன்."

"வரமாட்டியா?"

"கீழே போயி மாமாவுக்கு காம்போசும் அத்தைக்கு காம்பிசையும் குடுத்துட்டு வர்றேன்."

"மாமனாரையும், மாமியாரையும் ரொம்பக் கவனிக்காதே. கெட்டுப் போயிருவாங்க" என்ற ராகுல் வாசல்வரை சென்றவளை இழுத்து மார்போடு அணைத்தான்.

இரண்டு இதயங்கள் ஒன்றாகக் கலந்தன.

(முற்றும்)

# தாளிப்பு

கடுகு

## கண்ணீர், கண்ணீர்...

நடிகர்கள் அரசியலில் குதிக்கின்ற காலம் இது. அவர்கள் ஏன் அரசியல் பிரச்சினைகளைத் தீர்க்க முன்வரக்கூடாது?

இதோ ஒரு ஊகம்:

காவிரி நீர் பங்கீடு பற்றிய பேச்சு வார்த்தைகளை எங்கு வைத்துக் கொள்வது என்ற பிரச்னை எழுந்தது. பெங்களூர் என்று ராஜ்குமாரும், மெட்ராஸ் என்று கமலும் பிடிவாதமாகச் சொல்ல, கடைசியில் சென்னைக்கும் பெங்களூருக்கும் நடுவாக உள்ள குக்கிராமத்துக்கு வர இருவரும் ஒப்புக்கொண்டனர்.

யார் பெயரை முதலில் போடுவது என்ற தகராறு எழுந்ததும் கமல் விட்டுக்கொடுத்தார். அவர் பெயரை முதலில் போடுங்கள். ஆனால் என் படம் பெரிதாக இருக்க வேண்டும் என்று கூறிவிட்டார்.

விதான்சௌதா வாசலில் காரில் ராஜ்குமார் உட்கார்ந்து கொண்டார். இங்கு கோட்டை வாயிலில் கமல். சாடிலைட் மூலமாக ஒன், டூ, த்ரீ என்ற அறிவிப்பு வந்ததும் ஒரே சமயத்தில் இரண்டு கார்களும் குக்கிராமத்தை நோக்கிப் புறப்பட்டன. யார் முதலில் புறப்படுவது என்ற அந்தஸ்து பிரச்னை இப்படித் தீர்க்கப்பட்டது.

ஒரே சமயத்தில் பேச்சு வார்த்தை மண்டபத்தை நடிகர்கள் வந்தடைய கமல் ரசிக மன்றத்தினர் சார்பில் 96 மாலைகள் அவருக்கு அணிவிக்கப்பட, அகில-உலகராஜ்குமார்ரசிகர்மன்ற சார்பில் 97 மாலைகள் ராஜ்குமாருக்கு அணிவிக்கப்பட்டன. "எனக்கு எப்படி ஒரு மாலை குறைவாகப் போடலாம்?" என்று கமல் சீற. அதிகாரிகள் சடாரென்று ஒரு புதிய கமல் ரசிக மன்றத்தை அங்கேயே துவக்கி ஒரு மாலையைப் போட்டனர்.

முதலில் 'லஞ்ச்'. பிறகு பேச்சு என்று முடிவாயிற்று.

கமலைத் திருப்திப் படுத்த காஞ்சிவரம் இட்லி, திருநெல்வேலி அல்வாவும் ராஜ்குமாரைத் திருப்திப் படுத்த மைசூர் போண்டாவும் பிஸிபேளா ஹூளியும் சர்வ் செய்யப்பட்டன.

லஞ்ச் ஆனதும் பேச்சு வார்த்தைகள் துவங்கலாமா என்று அதிகாரிகள் கேட்டதும் ராஜ்குமார், 'மூட்' அவுட்டாகிவிட்டதாகச் சொல்ல, கமல், 'என் டயலாக் ரைட்டர் இன்னும் வரவில்லையே' என்றார்.

'மூடும்', 'டயலாக்கு'ம் வந்ததும் மறுபடியும் முட்டுக்கட்டை ஏற்பட்டது.

ராஜ்குமாரின் டச்-அப் பையனைக் காணவில்லை.. கமலின் டிரஸ் டிசைனர் வாணி கமல், கமலின் டிரஸ்ஸில் ஒரு எம்ப்ராய்டரி டிசைன் போட்ட பிறகுதான் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாகலாம் என்றார்.

இந்தச் சமயத்தில் அரோகரா அவுட்டோர் யூனிட் அங்கு வந்து. லைட், ரிப்ளக்டர் என்று பலவற்றைப் பொருத்த ஆரம்பித்தன. விசாரித்தால் தங்கள் படத்துக்குக் கமல் கால்ஷீட் தந்திருப்பதால், அங்கேயே ஷூட்டிங் நடத்த ஜெயமாலினி சகிதம் வந்திருப்பதாக டைரக்டர் காட்டாங்குளத்தூர் குமரேசன் சொன்னார். பேச்சு வார்த்தைகளைப் படமெடுத்துத் தங்கள் படத்துடன் சேர்த்து வெளியிட ராஜ்குமாரிடம் உரிமை பெற்றிருப்பதாக ராகவேந்திரா பிக்சர்ஸ் வக்கீல், போலீஸ், மாஜிஸ்டிரேட்டுடன் வந்துவிட்டார்!

நடிகர்களுக்கு இடையே ஏற்பட்ட இந்தத் தகராறுக்குத் தீர்வு காண தமிழக முதல்வரும் கர்நாடக முதல்வரும் பேச்சு வார்த்தை நடத்துவார்கள் என்று அறிவிக்கப் பட்ட பிறகு, கமலும் ராஜ்குமாரும் பேச்சு வார்த்தைகள் துவங்க 'ஏர்-கண்டிஷன்ட்' அறைக்குச் சென்றதும், இரண்டு பேரும் ஒரே குரலில், "என் சொந்த நாற்காலியை ஏன் கொண்டுவரவில்லை? வேறு நாற்காலியில் உட்கார மாட்டேன்" என்று கூற—

பேச்சு வார்த்தைகள் ஒத்தி வைக்கப்பட்டன!



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

